ஸ்ரீ:
ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

श्रीमद्वाधूलकुलतिलक-श्रीमन्महाचार्य-प्रधानशिष्य-श्रीनिवासाचार्य-विरचिता

# यतीन्द्रमतदीपिका

कोलियालं श्रीनिवासाचार्य-विरचिता

# सन्मतकारिकावली च

(सुदर्शनपत्राधिपकृत - द्रमिडभाषाविवरणसहिते)

# யதீந்த்ரமததீபிகை
# ஸந்மதகாரிகாவலீ

['ஸுதர்சனம்' ஆசிரியர் எழுதிய
தமிழ் விவரணத்துடன் கூடியவை.]

கிடைக்குமிடம்:—

ஸ்ரீ. S. கிருஷ்ணஸ்வாமி அய்யங்கார்,
'ஸுதர்சனம்' ஆசிரியர்,
3, புத்தூர் அக்ரஹாரம், திருச்சி-17.

---

ஸ்ரீமத் பரமஹம்ஸ
ஸ்ரீமந்நாராயண ராமாநுஜ ஜீயர் ஸ்வாமியின்
உபயவேதாந்த ஆசார்யபீடத்தின் ஆதரவில்
வெளியிடப்பெற்றது.

---

விலை ரூ: 7-00] 1980 [தபால் 1.00

ஸ்ரீநிவாஸம் அச்சகம், புத்தூர் அக்ரஹாரம், திருச்சி-17.

ஸ்ரீ:
ஸ்ரீமதே ராமாநுஜாய நம:



ஆழ்வாராசார்யர்களின் அருளிச்செயல்களுக்கு எளிய தமிழ்
விரிவுரைகளுடன் வெளிவரும் சிறந்த

—ஸ்ரீவைஷ்ணவ மாதப்பத்திரிகை—

# ஸ்ரீவைஷ்ணவ ஸுதர்சனம்

ஆசிரியர் :
ஸ்ரீ S. கிருஷ்ணஸ்வாமி ஐயங்கார், அட்வகேட்,
3, புத்தூர் அக்ரஹாரம், திருச்சி-620 017.

## வருடச்சந்தா ரூ. 12.

தனிப்பிரதி ரூ. 1. —O— ஆயுள் சந்தா ரூ. 100.

ஸர்வஜித் மார்கழி 28-உ (12—1—1948) முதல்
தொடர்ந்து வெளிவருகிறது.

பழைய பிரதிகள் கிடைக்கமாட்டா.

---

ஸ்ரீமத் பரமஹம்ஸ
ஸ்ரீமந்நாராயண ராமாநுஜ ஜீயர் ஸ்வாமியால்
ஆரம்பிக்கப்பெற்ற

# ஸ்ரீமதுபய வேதாந்த ஆசார்யபீட பத்திரிகை

வருடச் சந்தா ரூ. 3. ஆயுள் சந்தா ரூ.100.

ஸ்ரீ:
ஸ்ரீமதே ராமாநுஜாய நம :

श्रीमद्वाधूलकुलतिलक-श्रीमन्महाचार्य-प्रधानशिष्य-श्रीनिवासाचार्य-विरचिता

# यतीन्द्रमतदीपिका

कोलियालं श्रीनिवासाचार्य-विरचिता

## सन्मतकारिकावली च

( सुदर्शनपत्राधिपकृत - द्रमिडभाषाविवरणसहिते )

# யதீந்த்ரமததீபிகை
# ஸந்மதகாரிகாவளீ

['ஸௌதர்சனம்' ஆசிரியர் எழுதிய
தமிழ் விவரணத்துடன் கூடியவை.]

கிடைக்குமிடம்:—

**ஸ்ரீ. S. கிருஷ்ணஸ்வாமி அய்யங்கார்,**
'ஸௌதர்சனம்' ஆசிரியர்,
3, புத்தூர் அக்ரஹாரம், திருச்சி-17.

---

ஸ்ரீமத் பரமஹம்ஸ
ஸ்ரீமந்நாராயண ராமாநுஜ ஜீயர் ஸ்வாமியின்
உபயவேதாந்த ஆசார்யபீடத்தின் ஆதரவில்
வெளியிடப்பெற்றது.

---

விலை ரூ. 7-00] 1980 [தபால் 1-00

ஸ்ரீநிவாஸம் அச்சகம், புத்தூர் அக்ரஹாரம், திருச்சி-17.

ஸ்ரீ :
ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

# ஸம்மதகாரிகாவளீ (முதற்பதிப்பு) முகவுரை

இந்த *ஸம்மதகாரிகாவளீ* என்ற க்ரந்தமானது ஸ்ரீ உ. வே. கோழியாலம் வங்கீபுரம் ஸ்ரீநிவாஸாசாரியஸ்வாமியினால் அருளப் பெற்றது. இந்த ஸ்வாமி பூர்ண வேதாத்யயனம் செய்து பிறர்க்கும் அத்யாபனம் செய்துகொண்டே ஸாஹித்யம், தர்க்கம், வேதாந்தம் எல்லாம் முறைப்படி கற்றுப் பிறர்க்கும் போதனம் செய்துகொண்டு ஸதாசாரபராயணராக எழுந்தருளி யிருப்பது ஸர்வப்ரஸித்தம். இந்த ஸ்வாமிக்கு விசதமாக விஷயத்தை எடுத்துரைப்பதில் ஸாமர்த்யமென்பதும் குலதனம். ஏற்கனவே ஸ்ரீபாகவதம் தசமஸ்கந்தத்தில் அருளப்பெற்ற ஸ்ரீக்ருஷ்ணலீலைகளை ஒன்றுகூடவிடாமல் எளிதில் எல்லோரும் அறியும்படி *ஶ்*லோகரூபமாக க்ருஷ்ணமங்களமாலிகா என்னும் ஒரு க்ரந்தமும், எம்பெருமானார் அருளிச்செய்த *ஶர*ணாகதி கத்யத்தை அனுஸரித்து ஸ்வரூபாத்யஷ்டகஸ்துதி என்ற க்ரந்தமொன்றும், இராமாநுசநூற்றந்தாதிக்கும், பிள்ளையந்தா திக்கும் வடமொழியில் *ஶ்*லோகங்களாக மொழிபெயர்ப்பும், ஸ்வாசார்ய விஷயமாக மங்களம், புஷ்பாஞ்ஜலி, அஷ்டோத் தரம், கத்யம் முதலானவைகளும் ப்ரார்த்தனாவிம்சதியும், ராமாநுஜபத்யாக்ஷரமாலிகையும், லக்ஷ்மீஸ்தோத்ரமும், அருளிச் செய்துள்ளார். இவையெல்லாம் அச்சிட்டு வெளியானவை. இத்துடன் சாரீரககாரிகாவளி என்ற க்ரந்தமொன்று ப்ரஹ்ம ஸூத்ரத்தில் ஒவ்வொரு அதிகரணத்தின் அர்த்தமும் வெகு விசதமாக எல்லோரும் அறியும்படி அருளிச்செய்யப்பட்டிருக் கிறது. சீக்கிரத்தில் அச்சாகப்போகிறது.

இப்படித் தமக்குள்ள யோக்யதையை உலகுக்குப் பயன் படுத்துமிவர் அருளிச்செய்த இந்த க்ரந்தம் விசிஷ்டாத்வைத ஸித்தாந்தத்தில் ப்ரமாண ப்ரமேயங்களைச் சுருக்கமாக அறிய விரும்புவோருக்கு மிக அனுகூலமாகும். ஸ்ரீபாஷ்யாதி க்ரந்தங் களில் பூர்வாசாரியர்கள் திருவுள்ளம்பற்றிய ப்ரமாண ப்ரமேய வகைகள் ஆங்காங்கு இரைந்திருப்பவற்றை ஆராய்ந்து திரட்டியெடுத்துரைக்க முயன்ற முன்னோர்களில் கடைசியாக 'निष्कर्षे कःस्विदन्यः प्रभवति भगवल्लक्ष्मणाचार्यमुद्राम्' என்றபடி ஸ்ரீமந்நிகமாந்த மஹாதேசிகன் நிஷ்கர்ஷித்து ந்யாய பரிசுத்தி, ந்யாயஸித்தாஞ்ஜனம் என்ற க்ரந்தங்களை அருளிச்செய்தார். ஆதாரங்களையெடுத்து விவாதங்களையும் விலக்கி விளக்கவேண்டி யிருந்தபடியால் அந்த க்ரந்தங்கள் விஸ்தாரமாகவும் ப்ரௌட ரான சிஷ்யர்களுக்கு போக்யங்களாகவும் அமைந்துள. அந்த

இரண்டு க்ரந்தங்களிலும் உள்ள விஷயங்களைச் சுருக்கி உரைக்க யதீந்த்ரமததீபிகை என்ற க்ரந்தம் ஸ்ரீவாதூல ஸ்ரீநிவாஸாசாரிய ஸ்வாமியினால் அருளப்பெற்றது. அது வாக்யநடையில் அமைந்தது. ஶ்லோகரூபமாகச் சுருக்கினால் சிறுவர்கள் ஹ்ருதயத்தில் தரிக்க அனுகூலமாகும் என்று கருதி இந்த ஸ்வாமி இந்த க்ரந்தத்தை அருளியிருக்கிறார்.

ஶ்லோகங்கள் ஸுகமாக அறியக்கூடியவையானாலும் ஸம்ஸ்க்ருதவ்யுத்பத்தி சிறிது குறைவாயிருப்போர்க்கு அனுகூலம் செய்ய எல்லோருக்கும் அந்வயம் எளிதில் அறியும்படி தமிழில் இதற்கு உரையிட்டிருக்கிறார் ஸ்ரீ உ. வே. ஸுதர்சன பத்ராதிபர் ஸ்ரீ. கிருஷ்ணஸ்வாமி அய்யங்கார் ஸ்வாமி. இந்த ஸ்வாமி விசேஷ விச்வாஸத்துடன் இந்த க்ரந்தத்தைத் தாமாகவே வெளியிட முன்வந்தது மட்டுமின்றி இதற்கு உரையும் செய்திருப்பது போற்றத்தக்கது. ஸம்ப்ரதாயத்திலே விசேஷமான தெளிவும் ஊற்றமும் இவருக்கு உண்டு. இப்படிப்பட்டவர் இதற்கு உரை செய்ததால் இந்த க்ரந்தத்தை வடகலை தென்கலை என்ற இரு கலையாரும் ஆதரிக்க அவகாசமேற்பட்டது. தென்னாசாரிய ஸம்ப்ரதாயத்திற்கிணங்க விசேஷங்கள் சொல்லவேண்டுமென்று மனத்திற்பட்டவற்றை, ‘மூலத்தில் இல்லாதவற்றை நாம் ஏன் சொல்லவேண்டும்’ என்று உபேக்ஷியாமல் இவ்வுரையாளர் சேர்த்துச் சொல்லியிருப்பதால் இரண்டையும் பார்ப்போர்க்கு இரு ஸம்ப்ரதாயங்களும் விசதமாய் அறியப்படுமென்ற நன்மையுண்டு. கைவல்யம், ப்ரபத்தி, பிராட்டியினிடமுள்ள விசேஷங்கள் போன்ற விஷயங்களைக் கூறுமிடங்களில் கவனிக்க. இது ப்ரகரண க்ரந்தத்திலும் சுருக்கமானதாலே ஆராய்ச்சிசெய்ய விரும்புவோர் அதில் இழிந்து தங்கள் மனத்திற்குப் பிடித்த பக்ஷத்தைக் கொள்வதென்றதையும் இங்கு ஓரிடத்தில் இவர் ஒருவாறு குறித்துள்ளாரென்னலாம். மூலச்லோகங்களை விவரிக்க யதீந்த்ர மததீபிகை முதலானவற்றைக் கூடுமானவரையில் பார்த்துக் கொண்டே உரைசெய்திருப்பது ஊன்றிப் பார்ப்போர்க்குத் தெரியலாகும். ஆக, இந்த க்ரந்தம் இவ்வாறு வெளியானது விசிஷ்டாத்வைத ஸித்தாந்தத்தையறிந்து மறவாமல் மனத்திற் தரிக்கவிரும்புவோர்க்கு மிகவும் அனுகூலமாகும்.

*25-நாதமுனித்தெரு, உத்தமூர். தி. வீரராகவாசாரியன்,*
*தி-நகர், மதராஸ்-17.* 15—4—59

# FOREWORD

## [For First Edition - SANMATAKARIKAVALI]

'The sages are the great mountains wherefrom spring the rivers of knowledge' says a commentator on the Grihya-sutras of Asvalayana. Indeed all our philosophical systems have originated from great sages, in the form of sutras or terse expressions. But, like larger rivers that become unfordable owing to the commingling of several streams. even the small sutra literature became voluminous in the course of time as a result of the ever increasing commentaries on them like bhashya, vartika, tika etc. But as the time that can be devoted for the study of such larger treatises is limited, there arose naturally a need for the presentation of facts in a small compass. This, therefore, led to the writing of prakarana-granthas on several sastras Nyayaprakasa of Apadeva, Muktavali of Visvanatha, Advaita-paribhasha of Dharmarajaadhvarin and a score of books of this kind have proved to be the standard compendiums. In fact scholars desire both the ways of composition, namely a detailed one and a shorter one. 'Istam hi vidusham loke samasa-vyasa dharanam." [इष्टं हि विदुषां लोके समासव्यासधारणं]

Of such prakarana granthas the Vedarthasangraha of Sri Ramanuja doubtless serves as a short work on the Visishtadvaita philosophy. The Nyayaparisuddhi and the Nyaya Siddhanjana of Sri Vedantadesika are similar works wherein have been examined in detail the pramanas and the prameyas. However, for the benefit of young students, Sri Vadhula Srinivasarya who lived towards the end of the sixteenth century has written a beautiful book Yatindra-mata-dipika, presenting all the essentials of Visishtadvaita. He has followed closely the works of purvacharyas and has divided his work into ten chapters or avataras. But this is in prose.

It is common experience that any idea expressed in the form of sloka is best memorised and retained. Perhaps this is the reason why even sastrarthas are put in the form of karikas or verses. Isvarakrishna's Sankhya-karikas and Visvanatha's Karikavali are instances where sastraic thought has been preserved in verses.

Following this useful device Sri Koliyalam Srinivasa-charyaswami, the author, who has dived deep into the Visishtadvaita - Vedanta and who commands felicity of expression in Samskrit has written this San-mata-karika-vali, a string of verses expressive of the principles of true philosophy, in 522 anushtup slokas, based on the Yatindra-mata Dipika. It is evident that the author has made a careful study of the subject and has given only essentials. His language is simple and elegant and the entire work will form an excellent introduction to the Visishtadvaita Philosophy.

A tamil translation of the work from the facile pen of Sri Krishnaswami Iyengar will enable even the beginner to understand the text better. It is hoped that the work which is good in every respect will have a warm reception.

7—4—1959.
Vivekananda College,
Mylapore.

**V. S. Venkata Raghavacharya,**
Professor of Sanskrit.

---

## பிழை திருத்தம்

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 101 | 7 | अकारा | आकारा |
| 103 | 19 | ஔதா$_{3}$ர்யம் | உதா$_{3}$ர்யம் |
| 104 | 6 | औदर्यं | उदर्यं |
| 164 | 8 | समाकरा | समाकारा |
| 165 | 7 | फलकाः | फलिकाः |

# உரையாசிரியரின் முன்னுரை

## (இரண்டாம் பதிப்புக்கு)

அத்வைதமதத்தைச் சுருக்கிக்கூறும் அத்3வைதபரிப4ாஷையைப்போலே, விஶிஷ்டாத்3வைத மதத்தைச் சுருக்கிக் கூறுவது யதீந்த்3ரமததீ3பிகை. இதை இயற்றிய வாதூ4ல ஸ்ரீநிவாஸாசார்யர் ஸுப்ரஸித்3த4வித்3வத்3வரிஷ்ட2ரான தொட்டையாசார்யர் எனும் மஹாசார்யரின் சிஷ்யர். கி. பி பதினாறும் நூற்றாண்டின் பிற்பகுதியில் வாழ்ந்தவர். இந்நூல் ஸர்வகலாசாலைகளில் வடமொழி M. A. மாணவர்களுக்குப் பாடமாக வைக்கப்பட்டுள்ளது.

இதிலுள்ள பெரும்பாலான அர்த்த2ங்களை அதிஸரளமான ஶ்லோகரூபமாக அமைத்து இயற்றப்பெற்றது ஸந்மதகாரிகாவளி. ஸமீபகாலம்வரை வாழ்ந்து, காஞ்சி தே3வாதி4ராஜ வேத3பாராயணகைங்கர்யச் செல்வத்தைப் பெற்றிருந்தவராய், ஶாரீரககாரிகாவளீ முதலான மற்றும் பல லோகோபகாரக விஶிஷ்டாத்3வைத க்3ரந்த2ங்களை இயற்றியவராய், 'கோழியாலம் ஸ்வாமி' என்று புகழ்பெற்ற ஸம்யமிஸார்வபௌ4மரின் (பூர்வாஶ்ரம) திருத்தம்பியாராய் எழுந்தருளியிருந்தவர் இந்த க்3ரந்த2த்தின் கர்த்தா. இந்நூல் எளிய தமிழ் உரையோடு 1959ல் அடியேனால் வெளியிடப்பெற்றது.

கீர்த்திமூர்த்தியான ஸ்ரீமத்பரமஹம்ஸேத்யாதி3 ஸ்ரீமந் நாராயண ராமாநுஜஜீயர் ஸ்வாமியின் நியமனத்தால் யதீந்த்3ரமததீ3பிகையும், ஸந்மதகாரிகாவளியும் எளிய நடையிலான விவரணங்களோடு உப4யவேதா3ந்தாசார்யபீட2பத்திரிகையில் சிறிதுசிறிதாக வெளிவந்து இப்போது புத்தகரூபமாக வெளியிடப்படுகிறது. தீ3பிகாவிவரணமாகவும் அமைந்தமையாலே, ஸந்மதகாரிகாவளீ விவரணத்தில் இருந்ததைக் காட்டிலும் மற்றும் பல விஷயங்கள் இந்த தீ3பிகா - காரிகாவளீ - விவரணத்தில் இடம் பெற்றுள்ளன. அதிலிருந்த சில பிழைகளும் திருத்தப்பெற்றுள்ளன. இதில் இருக்கக்கூடிய பிழைகளை மஹனீயர்கள் எடுத்துக்காட்டினால், அடுத்த பதிப்பில் திருத்திக்கொள்ளப்படும்.

யதீந்த்₃ரமததீ₃பிகையில் சொல்லப்படும் முக்₂யமானதொரு அர்த்த₂மான கைவல்ய விஷயத்தில் சுமார் 400 ஆண்டுகளுக்குள் தென்னாசார்ய ஸம்ப்ரதா₃யஸ்த₂ர்களிடையிலேயே குழப்பம் ஏற்பட்டு, தி₃வ்ய ப்ரப₃ந்த₄ வ்யாக்₂யாதாக்கள் கருதாததொரு பக்ஷத்தை அவர்களுடைய பக்ஷமாகத் தென்னாசார்ய ஸம்ப்ரதா₃ய வித்₃வத்₃வரிஷ்ட₂ர்கள் பலர் கருதத்தொடங்கினர். இதனால் கைவல்ய விஷயத்தில் ஸ்ரீவைஷ்ணவர்களிடையே மூன்றுவகையான கருத்துவேற்றுமைகள் ஏற்பட்டு விட்டன. கீ₃தாசார்யனுடைய க்ருபையாலும், எம்பெருமானாருடைய அபாரகருணையாலும், தி₃வ்ய ப்ரப₃ந்த₄ரஹஸ்ய வ்யாக்₂யாதாக்களான பூர்வாசார்யர்களின் ஒப்பற்ற பேரருளாலும் எழுந்த 'கைவல்ய ஸித்₃த₄ாஞ்ஜனம்' என்னும் நூலில் இக்குழப்பங்களெல்லாம் களையப்பெற்று, கீ₃தாசார்யனுடையவும், எம்பெருமானாருடையவும், தி₃வ்யப்ரப₃ந்த₄ ரஹஸ்ய வ்யாக்₂யாதாக்களுடையவும் திருவுள்ளம் வெளியிடப்பெற்றது. இக்கைவல்ய ஸித்₃த₄ாஞ்ஜனம் இந்நூலுக்கு அநுப₃ந்த₄மாக இணைக்கப்பெற்றுள்ளது. இந்த ஸித்₃த₄ாஞ்ஜனத்தைக் கடாக்ஷித்த காஞ்சீ மஹாவித்₃வான் ஸ்ரீ உ. வே. ப்ர. ப. அண்ணங்கராசார்ய ஸ்வாமி, திருநாங்கூர் ந்யாயவேதா₃ந்த வித்₃வான் ஸ்ரீ உ. வே. ப்ர. ப. அண்ணங்கராசார்ய ஸ்வாமி, வாக₃ம்ருதவர்ஷீ, ந்யாய வேதா₃ந்த வித்₃வான் ஸ்ரீ உ. வே. K. வரதா₃சார்ய ஸ்வாமி, ஸாரார்த்த₂ச் சொல்லழகர் ஸ்ரீ உ. வே. ஶதாபி₄ஷேகம் கோ₃விந்த₃நரஸிம்ஹாசார்ய ஸ்வாமி, திருநாராயணபுரம் வித்₃வான் ஸ்ரீ உ வே. அக்காரக்கனி ஸம்பத் குமாராசார்ய ஸ்வாமி, வானமாமலை வித்₃வான் ஸ்ரீ உ. வே. V. S. தோதாத்₃ரி ஐயங்கார் ஸ்வாமி, ஸ்ரீரங்கம் வித்₃வான் க₄னபாடி₂ ஸ்ரீ உ. வே. ஶௌரிராஜய்யங்கார் ஸ்வாமி, திருநாங்கூர் வித்₃வான் (ஸ்ரீராமாநுஜ மிஷன் செயலாளர்) ஸ்ரீ உ. வே. P. B. K. ஸ்ரீநிவாஸாசார்ய ஸ்வாமி முதலான பல மஹனீயர்கள் இந்நூலில் கண்ட முடிவை ஒருமுக₂மாக ஆதரித்திருப்பது குறிப்பிடத்தக்கது. வாக₃ம்ருதவர்ஷி ஸ்வாமி கீழ்க்கண்ட ஶ்லோகங்களின் மூலம் தமது நிஷ்கர்ஷத்தைத் தெரிவித்திருக்கிறார்.

॥ श्रीः ॥

"जयति रघुपतेः वाक्यमेतद्धि सत्यम्"

१. विभीषणप्रपत्तौ हि पक्षत्रयमुदीरितम्।
सुग्रीवहनुमत्पक्षौ रामपक्षस्तथैव च॥

२. सुग्रीवादिवचः श्रुत्वा हनूमान् उत्तरं जगौ।
तद्वचस्त्वधरीकृत्य राम उत्तरमब्रवीत्॥

३. तथा कैवल्यविषये त्वन्तः सौदर्शनो ध्रुवः।
इति हृष्टाः गरीयांसः भवेयुरिति मे मतिः॥
[अन्तः-सिद्धान्तः इत्यर्थः।
सौदर्शनः—सुदर्शनस्थितः इत्यर्थः॥]

४. कैवल्यतत्त्वमधिकृत्य वदन्ति सर्वे
विद्वत्तमा ननु ततोऽप्यधिकश्च पक्षः।
लब्धः सतां द्रविडसंस्कृतशास्त्रदृष्टः
मध्यस्थमत्सरिजना इह मा च भूवन्॥

५. सुदर्शनस्थकैवल्यसिद्धान्तमुपेयुषा।
वरदार्येण दासेन स्वामिप्रायो निवेदितः॥

[ "ரகு₄பதியின் உண்மையான வாக்கே வெற்றிபெறும்"

(1) ஸுக்₃ரீவனின் பக்ஷம், (2) அனுமனின் பக்ஷம், (3) ராமபக்ஷம் என்று விபீ₄ஷணஶரணாக₃தியை அங்கீ₃கரிக்கும் விஷயத்தில் மூன்று பக்ஷங்கள் காட்டப்பட்டுள்ளன. "ஶ்ரீவிபீ₄ஷணன் து₃ஷ்டனாகையாலே அங்கீ₃கரிக்கத்தகாதவன்" என்று ஸுக்₃ரீவன் முதலானோர் சொல்லுவதைக் கேட்டு, "விபீ₄ஷணன் நல்லவனாகையாலே அங்கீ₃கரிக்கத்தக்கவனே" என்று அனுமன் பதில் கூறினான். அந்தப் பக்ஷத்தையும் தள்ளி, "விபீ₄ஷணன் து₃ஷ்டனாயினும் கைக்கொள்ளத்தக்க வனே" என்னும் மூன்றாவது பக்ஷத்தை ஶ்ரீராமபிரான் அருளி னான். அவ்வண்ணமே கைவல்யவிஷயத்திலும் ஸுத₃ர்ஶனத்

தில் வெளிவந்த நிர்ணயம் அசைக்கவொண்ணுதது என்று (ஸாராஸாரவிவேகஜ்ஞர்களாய், ப்ரமாணபரதந்த்ரர்களாய், நடுநிலைவகிப்பவர்களான) பெரியோர்கள் உகந்தருள்வார்கள் என்பது அடியேனது கருத்து. கைவல்யவிஷயத்தைக் குறித்து நீண்டகாலமாகப் பண்டிதோத்தமர்கள் அனைவரும் இருவித மான பக்ஷங்களைக் கூறிவந்தார்களல்லவா; அவ்விரு பக்ஷங் களைக் காட்டிலும் வேறுபட்டதாய், தென்மொழி வடமொழி ஶாஸ்த்ரங்களில் காணப்படுவதாய், மூன்றுவதான திவ்ய ப்ரபந்தவ்யாக்யாதாக்களின் பக்ஷம் ஒன்றும் (தாத்பர்ய தீபிகை, கைவல்யஸித்தாஞ்ஜநம் முதலானவற்றில்) கிடைத் துள்ளது. இப்பக்ஷ விஷயத்தில் அனைவருமே 'இது சரியோ தவறோ' என்று தயங்குபவர்களாகவோ, இப்பக்ஷத்தில் மாத் ஸர்யம் கொண்டவர்களாகவோ ஆகாமலிருப்பார்களாக. ஸுதர்ஶனத்திலுள்ள கைவல்யஸித்தாஞ்ஜனத்தை விமர் ஶித்த வரதாசார்ய தாஸனுல் (இவ்வண்ணமாகத்) தன் கருத்து தெரிவிக்கப்பட்டது ]

ஸந்மதகாரிகாவளிப் பதிப்பில் கொடுக்கப்பெற்றிருந்த—ந்யாயமீமாம்ஸாவேதாந்த வித்வத்வரிஷ்டரான ஸ்ரீ உ. வே. உத்தமூர் வீரராகவாசார்ய ஸ்வாமியின் தமிழ் முகவுரையும், விவேகாநந்தா கல்லூரி முன்னுள் பேராசிரியரான ஸ்ரீ உ. வே. வேங்கடராகவாசார்ய ஸ்வாமியின் முகவுரையும் இந்நூலில் இணைக்கப்பெற்றுள்ளன. அவர்களுக்கு எனது நன்றி உரித் தாகும். விஶிஷ்டாத்வைத ஸ்ரீவைஷ்ணவ ஸித்தாந்தத்தை அனைவர்க்கும் எளிதில் விளக்கும் இந்த தீபிகா—காரிகாவளீ—விவரணம் பல பதிப்புகளை அடையும்படி ஆதரிக்கப் பெறவேணும் என்று ஆஸ்திகர்கள் அனைவரையும் பிரார்த்திக்கிறேன்.

ரௌத்ரி
வைகுண்ட ஏகாதஶி
18—12—1980

தாஸன்,
ஸ்ரீ. கிருஷ்ணஸ்வாமி அய்யங்கார்,
'ஸுதர்ஶனம்' ஆசிரியர்,
3, புத்தூர், அக்ரஹாரம், திருச்சி-17.

ஸர்வம் வஸ்து

- ப்ரமாணம்
  - ப்ரத்யக்ஷம்
  - அனுமானம்
  - சப்தம்
- ப்ரமேயம்
  - த்ரவ்யம்
    - ஜடம்
      - ப்ரக்ருதி (24-தத்வங்கள்)
      - காலம் (3-விதம்)
    - அஜடம்
      - பராக்
        - நித்யவிபூதி
        - தர்மபூதஜ்ஞானம்
      - ப்ரத்யக்
        - ஜீவன்
          - ப$_3$த்$_3$த$_4$ன்
            - புபுக்ஷு
              - அர்த்தகாமபரன்
              - தர்மபரன்
                - தேவதாந்தரபரன்
                - பகவத்பரன்
            - முமுக்ஷு
              - கைவல்யார்த்தி
              - பரமமோக்ஷார்த்தி
                - பக்தன்
                - ப்ரபன்னன்
                  - ஏகாந்தி
                  - பரமைகாந்தி
                    - த்ருப்தன்
                    - ஆர்த்தன்
          - முக்தன்
          - நித்யன்
        - ஈச்வரன்
          - பரம் (1)
          - வ்யூஹம் (4) (12)
          - விபவம் அநந்தம் பத்து
          - அந்தர்யாமி
          - அர்ச்சை
  - அத்ரவ்யம்
    - சப்தம்...கந்தம் (5)
    - ஸத்வரஜஸ்தமஸ் (3)
    - ஸம்யோகம்
    - சக்தி

## யதீந்த்ரமததீபிகை விஷயஸூசிகை



## ஸந்மதகாரிகாவலீ விஷயஸூசிகை



## அநுபந்தம்





श्रीः

श्रीमते रामानुजाय नमः

श्रीमद्वाधूलकुलतिलक श्रीमन्महाचार्य प्रधानशिष्य

श्रीनिवासाचार्य विरचिता

# यतीन्द्रमतदीपिका

॥ प्रथमोऽवतारः ॥

श्रीवेङ्कटेशं करिशैलनाथं श्रीदेवराजं घटिकाद्रिसिंहम् ।
कृष्णेन साकं यतिराजमीडे स्वप्ने च दृष्टान् मम देशिकेन्द्रान् ॥ १ ॥

यतीश्वरं प्रणम्याहं वेदान्तार्यं महागुरुम् ।
करोमि बालबोधार्थं यतीन्द्रमतदीपिकाम् ॥ २ ॥ *

---

ஶ்ரீ :

ஶ்ரீமதே ராமாநுஜாய நம :

## தீபிகா காரிகாவளீ விவரணம்

[ ஸுத₃ர்ஶன பத்ராதி₄பர் ஶ்ரீ. கிருஷ்ணஸ்வாமி அய்யங்கார் ]

## யதீந்த்₃ரமத தீ₃பிகா உபோத்₃க₄ாதம்

திருமலையில் எழுந்தருளியிருக்கும் திருவேங்கடமுடையானையும், பெருமாள் கோயிலில் எழுந்தருளியிருக்கும் தேவப் பெருமாளையும், கடிகைத் தடங்குன்றின் மிசையிருந்த சிங்கப் பிரானையும், கீ₃தாசார்யனை கண்ணனையும், யதிராஜரான எம் பெருமானரையும், (இன்று விடியற்காலையில் இந்நூலை எழுதும்படி நியமிப்பவராய்) ஸ்வப்நத்தில் காட்சியளித்த எனது ஆசார்யரான மஹாசார்யரையும், (ஶ்ரீநிவாஸ தா₃ஸனுகிற) அடியேன் துதிக்கிறேன். 1.

யதிராஜரையும், ஶ்ரீ வேதா₃ந்ததே₃ஶிகரையும், மஹாசார்யரையும் வணங்கி (வேதா₃ந்த ஜ்ஞானத்தில்) சிறியவர்களும் அறிந்துகொள்வதற்காக யதீந்த்₃ரமத தீ₃பிகையை இயற்றுகிறேன். 2.

---

* 4-வது பக்கம் தொடங்கி, மேலே தீபிகையும் அதன் கீழே காரிகாவளியும் அச்சிடப்படுகின்றன.

श्रीः
श्रीमते भगवद्रामानुजाय नमः
श्रीमते निगमान्तमहादेशिकाय नमः
श्रीमते राघवार्य महादेशिकाय नमः

# सन्मतकारिकावली

(कोलियालं श्रीनिवासाचार्य विरचिता)

॥ उपोद्घातः ॥

१. श्रियःपतिं जगद्योनिं निर्मलं सद्गुणालयम् ।
विश्वसृष्टयादिलीलं तं वासुदेवमुपास्महे ॥

२. रामानुजौ तौ ध्यायामि समजीवयतां पुरा ।
यौ त्रिलोकीं त्रिवेदीं च वाग्दिव्यामृतवर्षतः ॥

---

## ஸந்மதகாரிகாவளீ—உபோத்$_3$கா$_4$தம்



1. திருவின் நாயகனாய், உலகிற்குக் காரணனாய், தே$_3$ாஷமற்றவனாய், நற்கு$_3$ணங்களுக்கு இருப்பிடமாய், உலகை ஆக்கல் அளித்தல் அழித்தல் ஆகியவற்றை விளையாட்டாகக் கொண்டவனாய், ஶ்ருதி, ஸ்ம்ருதி முதலானவற்றில் ஸுப்ரஸித்$_3$த$_4$னான அந்த வாஸுதே$_3$வனை தியானிக்கிறோம்.

2. மூவுலகையும், (ருக்யஜுஸ்ஸாமமென்னும், அல்லது-பே$_4$த$_3$ாபே$_4$த$_3$ க$_4$டகமென்னும்) மூவகை வேத$_3$ங்களையும், அழகிய வார்த்தைகளாகிற அமுதத்தைப் பொழிவதன் மூலம் எவர்கள் உயிர்ப்பித்தனரோ, அந்த ராமானுஜர்களிருவரையும்-(எம்பெருமானாரையும், ப$_3$லராமானுஜனான கிருஷ்ணனையும்)-தியானிக்கிறேன்.

३. श्रीशैलेशस्स्वघण्टां तां भुव्यवातारयत्स्वयम्।
यदात्मना स्वसिद्धान्तगुप्त्यै तं देशिकं भजे॥

४. श्रीराघवार्यसूरीन्द्रपादाब्जे कलये हृदि।
यदुल्लसद्रजस्सङ्गात् पाषाणोऽपि सुधीयते॥

५. श्रीरङ्गलक्ष्मणमुनिः हंसस्स परमोऽवतात्।
विबुधज्येष्ठविज्ञानप्रदात्री यस्य वाक् शुभा॥

६. सदर्थचिन्तनेनैव कालक्षेपे कुतूहलात्।
यथामति विलिख्यन्ते सिद्धान्तार्थाश्श्रुता गुरोः॥

---

3. திருவேங்கடமுடையான் தானே தன் ஸித்₃த₄ாந்தத்தை ரக்ஷிப்பதற்குத் தன் திருமணியை எவராக அவதரிப்பித்தருளினுனோ, அந்த வேதா₃ந்த தே₃ஶிகரை தியானிக்கிறேன்.

4. யாதொரு திருவடித்தாமரையின் தூள் படுதலால் கல்லையொத்தவனும் கல்விமானுவானோ, ஸ்ரீராக₄வாசார்யரின் அப்படிப்பட்ட திருவடித்தாமரையிணையை நெஞ்சிலே நினைக்கிறேன்.

5. ஞானியர்தலைவர்களுக்கும் அறிவளிக்கும் அழகிய வாக்கையுடைய பரமஹம்ஸரான ஸ்ரீரங்க₃ராமாநுஜ முனிவரர் நம்மை ரக்ஷிக்கட்டும். (தேவர் தலைவனை பிரமனுக்கு அறிவளிக்கும் அழகிய வாக்கையுடையவனும், ஸ்ரீரங்க₃ராமநுஜ முனிவரஸ்வரூபியாயிருப்பவனும், மேலான ஹம்ஸரூபியாய் அவதரித்தவனுமான ஸர்வேஶ்வரன் நம்மைக் காப்பாற்றட்டும்.)

6. நற்பொருள்களைச் சிந்திப்பதிலேயே பொழுது போக்குவதில் ஆசையாலே, ஆசாரியரிடமிருந்து கேட்ட ஸம்மத ஸித்₃த₄ாந்தப் பொருள்களை அறிந்த வரையில் எழுதுகிறேன்.

श्रीमन्नारायण एव चिदचिद्विशिष्टोऽद्वैतं तत्त्वम्, भक्ति-प्रपत्तिभ्यां प्रसन्नस्स एवोपायः, अप्राकृतदेशविशिष्टस्स एव प्राप्यः इति वेदान्तवाक्यैः प्रतिपादयतां व्यासबोधायनगुहदेवभारुचिब्रह्मनन्दिद्रमिडाचार्य श्रीपराङ्कुशनाथयामुनमुनियतीश्वरप्रभृतीनां मतानुसारेण बालबोधनार्थं वेदान्तानुसारिणी यतीन्द्रमतदीपिकाख्या शारीरकपरिभाषा महाचार्यकृपावलम्बिना मया यथामति सङ्ग्रहेण प्रकाश्यते ॥ ३ ॥

॥ सिद्धान्तसङ्ग्रहः ॥

७. श्रीमान् नारायणस्तत्त्वमद्वैतं चिदचित्तनुः।
स एव भक्तिन्यासाभ्यामुपायश्शान्तनिग्रहः ॥

८. अप्राकृतस्थलस्थस्सन् स एव प्राप्य ईश्वरः।
इति वेदान्ततत्त्वार्थविदां व्यासादियोगिनाम् ॥

ஸித்3தா4ந்த ஸங்க்3ரஹம்

7-9. வேதா3ந்தத்தின் உண்மைப்பொருளை அறிந்த வியாஸர், போ3தா4யனர், கு3ஹதே3வர், பா4ருசி, ப்3ரஹ்மநந்தி3, த்3ரமிடா3சார்யர் முதலான யோகி3களும், நம்மாழ்வார், நாதமுனி, யாமுனமுனி, ப4க3வான் பா4ஷ்யகாரர், ஸ்ரீவேதா3ந்த தே3*ஶி*கர் முதலான ஆசாரியர்களும் அங்கீ3கரித்த ஸம்மதம்-(நல்ல மதம்)-பின்வருமாறு:-"அறிவுள்ள சேதனரையும், அறிவற்ற அசேதனப்பொருள்களையும் *ஶ*ரீரமாகக் கொண்டவனாய், பெரியபிராட்டியாரோடு கூடியவனாயிருக்கும் நாராயணன் ஒருவனே உண்மைப்பொருள். ப4க்தியோக3ம், *ஶ*ரணாக3தி ஆகிய இரண்டினுள் ஒன்றால் கோபம் நீங்கப்பெற்ற அவனே மோக்ஷமடைய உபாயமாவான். ப்ரக்ருதிமண்ட3லத்துக்கு அப்பாற்பட்ட பரமபத3த்திலிருக்கும் ஸர்வே*ஶ்*வரனான அவனே மோக்ஷத்தில் அடையப்படும் ப்ராப்யப்பொருளாவான்." இந்த நல்ல மதம் ஆசார்யருடைய கருணையைப்

सर्वं पदार्थजातं प्रमाणप्रमेयभेदेन द्विधा भिन्नम् ॥ ४ ॥
प्रमाणानि त्रीण्येव। प्रमेयं द्विविधम्, द्रव्याद्रव्यभेदात् ॥ ५ ॥

---

९. गुरूणां कुरुकाधीशनाथयामुनयोगिनाम्।
भगवद्भाष्यकारश्रीदेशिकादेश्च संमतम्॥

१०. सर्वं वस्तु द्विधा भिन्नं मानमेयप्रभेदतः।
मानं प्रत्यक्षानुमानशब्दभेदात् त्रिधा भवेत्॥

११. मेयं च द्विविधं प्रोक्तं द्रव्याद्रव्यविभागतः।
द्रव्यं चापि द्विधा भिन्नं जडाजडविभेदतः॥

---

பற்றுசாகக்கொண்ட என்றால் அறிந்தவரையில் சுருக்கமாக இனி தொகுத்துரைக்கப்படுகிறது. 3x.

*10. எல்லாப் பொருள்களும், 'ப்ரமாணம்' என்றும், 'ப்ரமேயம்' என்றும் இருவகைப்படும். ப்ரமாணமாவது:— ஒரு வஸ்துவை உள்ளபடி ஒருவனுக்குத் தெரிவிக்குமது; ப்ரமேயமாவது;— முற்கூறிய ப்ரமாணத்தால் அறியப்படுவது. 4x.

10*-*11. ப்ரமாணம்,—ப்ரத்யக்ஷம், அனுமானம், ஶப்3த3ம் என்று மூவகைப்படுவதேயாம். ப்ரமேயம்,—'த்3ரவ்யம்' என்றும், 'அத்3ரவ்யம்' என்றும் இருவகைப்படும். 5x.

11*. த்3ரவ்யம்,— ஜட3மென்றும், அஜட3மென்றும் இரு வகைப்படும்; ஜட3மாவது,—வேறொன்றின் உதவியில்லாமல்

---

*x ஸங்மதகாரிகாவளியின் ஶ்லோக எண்கள் விவரணப் பாராவின் முன்னாலும், யதீந்த்3ரமததீ3பிகையின் சூர்ணை எண்கள் விவரணப்பாராவின் கடைசியிலும் கொடுக்கப்பட்டுள்ளன.

* இக்குறி, எண்ணுக்கு முன் இருந்தால் காரிகாவளீ ஶ்லோகத்தின் பூர்வார்த்த4த்துக்கு விவரணம் எழுதப்படுகிறதென்றும், பின்இருந்தால் உத்தரார்த்த4த்திற்கு விவரணம் எழுதப்படுகிறதென்றும் கொள்க.

द्रव्यं द्विविधम्, जडमजडं चेति ॥ ६ ॥ जडं च द्विविधम्, प्रकृतिः कालश्चेति। प्रकृतिश्चतुर्विंशतितत्त्वात्मिका। कालस्तु उपाधिभेदेन त्रिविधः ॥ ७ ॥ अजडं तु द्विविधम्, पराक् प्रत्यक् चेति। परागपि

१२. जडं प्रकृतिकालप्रभेदात् द्विविधमिष्यते।
चतुर्विंशतिधा भिन्ना प्रकृतिस्सेति कथ्यते ॥
१३. रविस्पन्दोपाधिभेदात् कालस्त्रिविध उच्यते।
अजडं द्विविधं चेष्टं पराक्प्रत्यक्त्वभेदतः ॥
१४. पराक् नित्यविभूतिर्धीर्धर्मभूतेति च द्विधा।
जीवेश्वरविभेदेन प्रत्यक् द्विविध इष्यते ॥

தன்னைத்தானே காட்டாத பொருள். உதா3ஹரணம்—ஒளியில்லாத இடத்திலிருக்கும் க4டம் முதலிய பொருள்கள். அஜட3மாவது,— வேறொன்றின் உதவியில்லாமல் தன்னைத்தானே காட்டும் பொருள். உதா3ஹரணம் ஆத்மா. 6.

12-*13. 'ப்ரக்ருதி' என்றும், 'காலம்' என்றும் ஜட3 த்3ரவ்யம் இரண்டு வகைப்படும். "பொங்கைம் புலனும்" [திருவாய் 10-7-10] என்ற பாசுரத்திற் சொன்ன ரீதியில் மூலப்ரக்ருதி, மஹான், அஹங்காரம், ஐந்து தந்மாத்ரைகள், ஐந்து பூ4தங்கள், ஐந்து கருமேந்திரியங்கள், ஐந்து ஞானேந்திரியங்கள், மனம் என்னும் இருபத்துநாலு தத்துவங்கள் அடங்கியது ப்ரக்ருதி. சூரியனுடைய க3தியாகிற உபாதி4 பே4த3த்தாலே காலமானது வருங்காலம், நிகழ்காலம், கழிகாலம் என்று மூவகைப்படுகிறது. 7,

13*-14. 'பராக்' என்றும், 'ப்ரத்யக்' என்றும் அஜட3 த்3ரவ்யம் இரண்டு வகைப்படும். அறிவின் ப2லனை அனுப4விக்கும் வஸ்து ப்ரத்யக். அப்படியல்லாதது பராக். நித்யவிபூ4தியான பரமபத3ம், (சூரியனுக்கு ஒளிபோலே) ஆத்மாவுக்கு த4ர்மமாயிருக்கும் அறிவு—(த4ர்மபூ4தஜ்ஞாநம்)—என்று 'பராக்'

द्विधा-नित्यविभूतिः, धर्मभूतज्ञानं चेति। प्रत्यगपि द्विविधः-जीवेश्वर-भेदात्॥८॥ जीवस्त्रिविधः-बद्धमुक्तनित्यभेदात्॥९॥ बद्धोऽपि द्विविधः-बुभुक्षुमुमुक्षुभेदात्॥१०॥ बुभुक्षुः द्विविधः-अर्थकामपरो धर्मपरश्चेति। धर्मपरो द्विविधः-देवतान्तरपरो भगवत्परश्चेति॥११॥ मुमुक्षुः द्विविधः-कैवल्यपरो मोक्षपरश्चेति। मोक्षपरो द्विविधः-भक्तः

---

१५. बद्धो मुक्तश्च नित्यश्चेत्येवं जीवस्त्रिधा भवेत्।
बुभुक्षुश्च मुमुक्षुश्चेत्येवं बद्धो द्विधा भवेत्॥

१६. बुभुक्षुश्चाप्यर्थकामपरो धर्मपरो द्विधा।
द्विविधोऽन्त्योप्यन्यदेवपरश्च भगवत्परः॥

---

கான அஜட3த்3ரவ்யம் இரண்டு வகைப்படும். 'ஜீவன்' 'ஈச்வரன்' என்று ப்ரத்யக்கான அஜட3த்3ரவ்யமும் இரண்டுவகைப்படும். 8.

*15. ஸம்ஸாரத்தில் கட்டுண்டுழலும் ப3த்3த4ன், அதிலிருந்து விடுபட்ட முக்தன், நித்யஸூரி என்று ஜீவர்கள் மூவகைப்படுவர். 9.

15*. ப்ராக்ருதமான இவ்வுலக இன்பங்களை விரும்பும் பு3பு4க்ஷு என்றும், அப்ராக்ருதமான அவ்வுலக இன்பத்தை விரும்பும் முமுக்ஷு என்றும், ப3த்3த4 ஜீவரும் இருவகைப் படுவர். 10.

16. பு3பு4க்ஷுக்களும், 'அர்த்த2காமங்களில் ஈடுபட்டவன்' என்றும் 'த4ர்மத்தில் ஈடுபட்டவன்' என்றும் இருவகைப் படுவர்; இரண்டாமவனை த4ர்மபரனும், 'தே3வதாந்தரபரன்' என்றும், 'ப4க3வத்பரன்' என்றும் இருவகைப்படுவான். 11.

17-18. முமுக்ஷுக்களிலும், தன்னுடைய ஆத்மாநுப4வ மாத்ரமாகிற கைவல்ய மோக்ஷத்தை விரும்புகிறவனென்றும், ப4க3வத3நுப4வமாகிற பரமபுருஷார்த்த2 லக்ஷண மோக்ஷத்தை விரும்புமவனென்றும் இரண்டு பிரிவுண்டு. பரமபுருஷார்த்த2

प्रपन्नश्चेति। प्रपन्नश्च द्विविधः-एकान्ती परमैकान्ती चेति। परमैकान्ती द्विविधः, दृप्तार्तभेदात्॥ १२॥

---

१७. कैवल्यार्थी मोक्षकाङ्क्षीत्येवं भेदो मुमुक्षुषु।
मोक्षार्थी च द्विधा भक्तः प्रपन्न इति भेदतः॥
१८. प्रपन्नश्च द्विधैकान्तिपरमैकान्तिभेदतः।
दृप्तार्तभेदादत्रान्त्यो द्विविधः परिकीर्तितः॥

---

லக்ஷண மோக்ஷத்தை விரும்புமவனும், அதையடைய அனுஷ்டி$_2$க்கும் ஸாத$_4$ன பே$_4$த$_3$த்தாலே, ப$_4$க்தன் என்றும், ப்ரபன்னன் என்றும் இருவகைப்படுகிறுன். மோக்ஷஸாத$_4$னமாக ப$_4$க்தியோக$_3$த்தை அனுஷ்டி$_2$ப்பவன் ப$_4$க்தன். அகிஞ்சனனுய், அநந்யக$_3$தியாய் பரமபுருஷனேயே மோக்ஷோபாயமாகப் பற்றுமவன் ப்ரபன்னன். ப்ரபன்னனும், ஏகாந்தியென்றும், பரமைகாந்தியென்றும் இருவகைப்படுவான். பரமபுருஷனேத் தவிர வேருெரு தே$_3$வதையை எண்ணுமலிருப்பவன் ஏகாந்தியாவான். பரமைகாந்திக்கில்லாமல், இவனிடமுள்ளதொரு குறையாவது,—கற்பக விருக்ஷத்திடம் கௌபீநபி$_4$க்ஷை கேட்பாரைப்போலே, ஸர்வேஶ்வரனிடம் பிரயோஜநாந்தரங்களேயும் யாசிக்கை. பரமைகாந்தியோவென்னில், * உன்னித்து மற்ருெரு தெய்வம் தொழாத ஏகாந்தியாயிருப்பதோடன்றியில், பரம புருஷனிடமும் மற்ற ப$_2$லன்களே விரும்பாமலிருப்பவனுவான். பரமைகாந்திப்ரபன்னனும், த்$_8$ருப்தப்ர பன்னன் ஆர்த்தப்ரபன்னன் என்று இருவகைப்படுவான். பிரபத்தியெனும் ஶரணுக$_3$தியை அனுஷ்டி$_2$க்கிற ஶரீரம் போனபிறகு மோக்ஷத்தை விரும்புமவன் த்$_3$ருப்தப்ரபன்னனுவான். “கூவிக்கொள்ளும் காலம் இன்னம் குறுகாதோ” [திருவாய் 6-9-9] என்று பதறி ஶரணுக$_8$தி செய்தவுடனேயோ, அல்லது ஆர்த்தியின் க$_4$னத்துக்குத் தக்கவாறு அதிஶீக்$_4$ரமான காலத்திலேயோ மோக்ஷத்தை விரும்புமவன் ஆர்த்தப்ரபன்னனுவான். 12.

ईश्वरः पञ्चधा—परव्यूहविभवान्तर्याम्यर्चावतारभेदात्। पर एकधा। व्यूहश्चतुर्धा—वासुदेवसङ्कर्षणप्रद्युम्नानिरुद्धभेदात्। केशवादि व्यूहान्तरमत्रैवान्तर्भवति। मत्स्यादयो विभवाः पुनः अनन्ताः। अन्तर्यामी

---

१९. परव्यूहादिभेदेन त्वीश्वरः पञ्चधा स्थितः।
एक एव परो वासुदेवस्सङ्कर्षणस्तथा॥

२०. प्रद्युम्नश्चानिरुद्धश्चेत्येवं व्यूहश्चतुर्विधः।
केशवादीनि रूपाणि सन्ति व्यूहान्तराणि च॥

२१. मत्स्यकूर्मादयोऽनन्ता विभवाः परिकीर्तिताः।
प्रतिदेहं स्थितो विष्णुरन्तर्यामी प्रकीर्तितः॥

---

19–22. ஸர்வேஶ்வரனான நாராயணன் ஒருவனேயாஞலும், திருமேனியின் பே₄த₃த்தாலே—பரம், வியூஹம் விப₄வம் அந்தர்யாமி, அர்ச்சை என்று ஐந்து வகையாக நிற்கிருன். பரமபத₃த்திலிருக்கும் பரவாஸுதே₃வமூர்த்தியொருவனே 'பரம்' எனப்படுகிருன். இவ்வுருவிலிருந்தே மற்ற ரூபங்கள் தோன்றுகின்றன. ஸ்ருஷ்டி, ஸ்தி₂தி, ஸம்ஹாரம் முதலான காரியங்களைச் செய்வதற்காக—வாஸுதே₃வன், ஸங்கர்ஷணன், ப்ரத்₃யும்னன், அநிருத்₃த₄ன் என்னும் நான்கு மூர்த்திகளாகப் பிரிந்து நிற்கும் நிலை வியூஹமெனப்படுகின்றது. கேஶவன், நாராயணன் முதலான பன்னிரண்டு ரூபங்களும் வியூஹ வகுப்பைச் சேர்ந்தவையே. மத்ஸ்யம், கூர்மம் என்று தொடங்கிப் படிக்கப்படும் த₃ஶாவதாரங்களென்ன, மற்றுமுள்ள எங்கின்றயோனிகளிலும் மேக₄ம், குப்₃ஜாம்ரம் (குட்டை மாமரம்) முதலிய பல ரூபங்களுடன் பிறந்த கணக்கற்ற பிறப்புகளென்ன ஆகிய இவை விப₄வாவதாரமெனப்படும். ஒவ்வொரு ஶரீரத்திலும், சேதனர்கள் தன்னை உபாஸிப்பதற்காக, அவர்களுடைய ஹ்ருத₃யத்தில் "அங்கு₃ஷ்ட₂மாத்ர:"

प्रतिशरीरमवस्थितः। अर्चावतारस्तु श्रीरङ्गवेङ्कटाद्रिहस्तिगिरियादवाद्रि-घटिकाचलादिषु सकलमनुजनयनविषयतां गतो मूर्तिविशेषः ॥ १३ ॥
अद्रव्यं तु सत्त्वरजस्तमश्शब्दस्पर्शरूपरसगन्धसंयोगशक्तिभेदाद्दशधैव ॥१४॥

---

२२. श्रीरङ्गहस्तिशैलादावर्चारूपी स्थितो हरिः।
एवं पञ्चप्रकारेणावस्थितो विष्णुरीश्वरः॥

२३. शब्दस्पर्शौ रूपरसौ गन्धस्सत्त्वं रजस्तमः।
संयोगश्शक्तिरित्येवमद्रव्यं दशधा मतम्॥

---

என்கிறபடியே கட்டைவிரல் அளவுள்ள திருமேனியோடு எழுந்தருளியிருக்கும் இருப்பு அந்தர்யாமியாகும். கோயில், திருமலை, பெருமாள்கோயில், திருநாராயணபுரம், க₄டிகாசலம் முதலான தி₃வ்யதே₃ஶங்களில், எல்லாச் சேதனர்களின் ஊனக் கண்ணுக்கும் விஷயமாய் நிற்கும் திருமேனியோடு எழுந்தருளியிருக்கும் நிலை அர்ச்சாமூர்த்தியாகும். ஆக, இப்படி ஐந்துவித₄மான திருமேனிகளுடன் நிற்கும் ப₄க₃வான் விஷ்ணுவே ஈஶ்வரனுவான். ஆக, இதுவரையில் 5-வது சூர்ணையிலும், 11-வது ஶ்லோகத்திலும் சொல்லப்பட்ட த்₃ரவ்யங்கள் விளக்கப்பட்டன. 13.

23. அவ்விடத்திலேயே சொல்லப்பட்ட அத்₃ரவ்யம்—ஶப்₃த₃ம், ஸ்பர்ஶம், ரூபம், ரஸம், க₃ந்த₄ம் [என்னும் பூ₄த கு₃ணங்கள் ஐந்து] ஸத்வம், ரஜஸ், தமஸ் [என்னும் ப்ரக்ருதி ப்ராக்ருத கு₃ணங்கள் மூன்று] ஸம்யோக₃ம், ஶக்தி என்னும் பத்து பிரிவுகளே கொண்டது. ஆக, இதுவரையில் பிரமாணங்களும் பிரமேயங்களும் தொகுக்கப்பட்டன. 14.

### ப்ரத்யக்ஷப்ரகரணம்

24. இனி, இவைகளைப்பற்றி முற்கூறிய கிரமத்திலேயே லக்ஷணமுரைத்து ஆராயப்படுகிறது. அதில் முதன்முதலில் ப்ரமாணத்தைப் பற்றின விசாரம் தொடங்குகிறது. ப்ரமைக்குக்

एवमुद्दिष्टानामुद्देशक्रमेण लक्षणपरीक्षे क्रियेते। तत्र, प्रमाकरणं प्रमाणं। प्रमाणं लक्ष्यम्। प्रमाकरणत्वं लक्षणम्। यथावस्थित-व्यवहारानुगुणं ज्ञानं प्रमा। प्रमा-लक्ष्यम्। यथावस्थितव्यवहारानुगुण-ज्ञानत्वं-लक्षणम्। ज्ञानं प्रमेत्युक्ते शुक्तिकायामिदं रजतमिति ज्ञानेऽति-व्याप्तिः। अत उक्तं व्यवहारानुगुणमिति। एवमपि तत्रैवातिव्याप्तिः-भ्रान्तिदशायामिदं रजतमिति व्यवह्रियमाणत्वात्। अत उक्तं यथा-वस्थितेति॥ १५॥ यथावस्थितपदेन संशयान्यथाज्ञानविपरीतज्ञान-

---

॥ प्रत्यक्षप्रकरणम् ॥

२४. तत्र प्रमायाः करणं प्रमाणमिति कीर्त्यते।
यथार्थव्यवहारानुगुणं ज्ञानं प्रमा मता॥

२५. संशयादन्यथाज्ञानाद्विपरीतधियश्च सा।
भिन्ना विरुद्धनानाधीस्संशयश्चैकधर्मिणि॥

---

கரணமாயிருப்பது ப்ரமாணம் எனப்படுகிறது. உள்ளதை உள்ளபடி வ்யவஹரிப்பதற்கு—(வழங்குவதற்கு)—வேண்டிய அறிவு 'ப்ரமை' எனப்படுகிறது. வெறும் அறிவு ப்ரமை எனத் தக்கதன்று; அப்படிச்சொன்னால் சிப்பியைப் பார்த்து வெள்ளி என்று கொள்ளும் அறிவும் ப்ரமையாகவேண்டிவரும். அதனாலேயே 'வ்யவஹரிப்பதற்கு வேண்டிய அறிவு' என்று ப்ரமா லக்ஷணத்தில் சொல்லப்பட்டது. அப்படியும், மயங்கி நிற்கும் நிலையில் சிப்பியை வெள்ளியென்று வழங்கவும் கூடுமாகையால், *"உள்ளதை உள்ளபடி* வழங்குவதற்கு வேண்டிய அறிவு" என்று லக்ஷணமுரைக்கப்பட்டது. 15.

25. "உள்ளதை உள்ளபடி வழங்குவதற்கு வேண்டிய அறிவு ப்ரமை" என்று லக்ஷணமுரைத்ததால், ப்ரமையானது, ஸம்ஶயம், அந்யதா₂ஜ்ஞானம், விபரீதஜ்ஞானம் ஆகியவற்றி

व्यावृत्तिः। धर्मिग्रहणे मिथो विरुद्धानेकविशेष(स)स्फुरणं संशयः। यथा ऊर्ध्वताविशिष्टे (धर्मिणि) स्थाणुर्वा पुरुषो वेति ज्ञानम्॥१६॥

अन्यथाज्ञानं नाम धर्मविपर्यासः। यथा, कर्तृत्वेन भासमाने आत्मनि कुयुक्तिभिः कर्तृत्वस्य भ्रान्तत्वोपपादनम्। विपरीतज्ञानं नाम धर्मिविपर्यासः। यथा वस्तुनो वस्त्वन्तरज्ञानम्॥१७॥

---

२६. ज्ञानं धर्मविपर्यस्तं चान्यथाज्ञानमिष्यते।
तच्चेत् धर्मिविपर्यस्तं विपरीतमिति श्रुतम्॥
२७. वस्तुन्युच्चे संशयस्स्यात्स्थाणुर्वाऽयं पुमानिति।
पीतश्शङ्ख इति ज्ञानमन्यथाज्ञानमिष्यते॥

---

லிருந்து வேறுபட்டதென்று விளங்குகிறது. ஒரு த4ர்மியில் — [ த4ர்மங்களையுடையது த4ர்மி ] — ஒன்றுக்கொன்று முரண்பட்ட பல த4ர்மங்களை அறிவது ஸம்ஶயமாகும். உதா3ஹரணம்—உயரமானதொரு வஸ்துவை (மங்கின வெளிச்சத்தில் தூ3ரத்திலிருந்து) பார்த்து இது புருஷனோ, மரமோ என்று நினைப்பது ஸம்ஶயமாகிறது. ஒரே வஸ்துவில் புருஷனாயிருக்கும் தன்மை, மரமாயிருக்கும் தன்மை என்னும் பரஸ்பர விருத்3த4த4ர்மங்கள் கிரஹிக்கப்படுகின்றனவன்றோ. 16.

26-*28. த4ர்மவிஷயத்தில் மாறுபட்டு அறியும் அறிவு அந்யதா2ஜ்ஞானம் எனப்படுகிறது. உதா3ஹரணம்,— ஶங்க2த்தை (உள்ளபடி வெண்மை நிறம் என்றறியாமல்) மஞ்சள் நிறமானது என்று அறிவது அந்யதா2ஜ்ஞானமாகும். கர்த்தாவான ஆத்மாவை, குயுக்திகளாலே கர்த்ருத்வமில்லாதவன் என எண்ணுவதும் அந்யதா2ஜ்ஞானமாகும். த4ர்மி விஷயத்திலேயே மாறுபாடு ஏற்படும் அறிவு விபரீதஜ்ஞானமெனப்படுகிறது. உதா3ஹரணம், – சிப்பியைப்பார்த்து வெள்ளியென்று நினைப்பது விபரீதஜ்ஞானமாகும். பழுதையைப் பாம்பென்று நினைப்பதும் விபரீதஜ்ஞானமாகும். அந்யதா2ஜ்ஞாந விபரீதஜ்ஞானங்களுக்குப் பொதுப்பெயர் ‘விபர்யயம்’ என்பது. 17.

लक्षणस्य त्रीणि दूषणानि सन्ति, अव्याप्तिरतिव्याप्तिरसम्भवश्चेति। लक्ष्यैकदेशे लक्षणस्यावर्तनमव्याप्तिः। लक्ष्यादन्यत्र वर्तमानत्वमतिव्याप्तिः। लक्ष्ये क्वाप्यवर्तनमसम्भवः। यथा जीवो गुणत्रयवश्यः इत्युक्ते अव्याप्तिः, ज्ञानगुणक इत्युक्ते अतिव्याप्तिः, चक्षुर्विषयो जीव इत्युक्तेऽसम्भव एव। अतोक्तदूषणत्रयाभावात् प्रमाणलक्षणं सुस्थम्॥१८॥

---

२८. शुक्तिं दृष्ट्वा रूप्यमिति ग्रहस्तु विपरीतधीः।
नेदं दुष्टं प्रमालक्ष्म दोषैरव्याप्तिपूर्वकैः॥

---

28*. "உள்ளதை உள்ளபடி வழங்குவதற்கு வேண்டிய அறிவு ப்ரமை" என்னும் இந்த ப்ரமாலக்ஷணம் அவ்யாப்தி, அதிவ்யாப்தி, அஸம்ப$_4$வம் என்னும் தே$_3$ாஷங்கள் அற்றது. பொதுவாக லக்ஷணங்களுக்கு ஏற்படக்கூடியவை இம்மூன்று தே$_3$ாஷங்களும். லக்ஷ்யங்களுக்குள் –[எவற்றுக்கு லக்ஷணம் சொல்லுகிறோமோ அவை லக்ஷ்யங்கள்]-சிலவற்றுக்கு லக்ஷணம் வராமலிருக்கை அவ்யாப்திதே$_3$ாஷம். உத$_3$ாஹரணம்:— 'பசுமாடு நீலநிறமுள்ளது' என்று லக்ஷணம் சொன்னால், வேறு நிறமுள்ள பசுமாடுகளில் இந்த லக்ஷணம் இல்லாமையால், இந்த லக்ஷணம் அவ்யாப்தி தே$_3$ாஷத்திற்கு இலக்காகிறது. லக்ஷ்யத்தைக்காட்டிலும் வேறிடத்திலும் இருக்கும் லக்ஷணம் அதிவ்யாப்தி தே$_3$ாஷத்திற்கு இலக்காகிறது; உத$_3$ாஹரணம்:– 'கொம்புள்ளது பசுமாடு' என்னும் லக்ஷணம் கொம்புள்ள ஆடு, மான் முதலானவற்றுக்கும் வருவதால்,இது அதிவ்யாப்தி தே$_3$ாஷ து$_3$ஷ்டம். லக்ஷ்யங்களுக்குள் ஓரிடத்திலும் லக்ஷணம் வராமலிருந்தால், அந்த லக்ஷணம் 'அஸம்ப$_4$வம்' என்னும் தே$_3$ாஷத்துக்கு இலக்காகிறது. உத$_3$ாஹரணம்:—கண்ணால் காணப்படுமவன் ஜீவன் என்று லக்ஷணம் சொன்னால், இது ஜீவர்களில் ஒருவருக்கும் பொருந்தாமையால் அஸம்ப$_4$வதே$_3$ாஷத்திற்கு இலக்காகிறது. கீழ்ச்சொன்ன ப்ரமாலக்ஷணம் உண்மையறிவுகள் எல்லாவற்றிலும் வருவதாகவும், ஸம்ஶயவிபர்யயங்களாகிற பொய்யறிவுகள் ஒன்றிலும் வரமாட்டாததாகவும்இருக்கையால் அந்த லக்ஷணம் கீழே கூறிய மூன்று தே$_3$ாஷங்களுமற்றது. 18.

साधकतमं करणम्। अतिशयितं साधकं साधकतमम्। यस्मिन् सत्यविलम्बेन (कार्यं) ज्ञानमुत्पद्यते तदतिशयितमित्युच्यते। तेन प्रमाकरणं प्रमाणमिति सिद्धम्। अनधिगतार्थगन्तृ प्रमाणमित्यादिकं तु तत्तद्वादिभिरेव निरस्तत्वादनादरणीयम्॥ २९॥

तानि प्रमाणानि प्रत्यक्षानुमानशब्दाख्यानि त्रीण्येव। तत्र साक्षात्कारिप्रमाकरणं प्रत्यक्षम्। अनुमानादिव्यावृत्त्यर्थं साक्षात्कारीति।

---

२९. यस्मिन् सत्यविलम्बेन कार्यमुत्पद्यते ध्रुवम्।
तत् साधकतमं प्रोक्तं तदेव करणं मतम्॥

३०. साक्षात्कारप्रमाहेतुर्मानं प्रत्यक्षसंज्ञकम्।
साक्षात्कारो निर्विकल्पस्सविकल्प इति द्विधा॥

---

29. கீழே, ப்ரமை என்ருல் யாதென்று விளக்கப்பட்டது. 'கரணம்' என்ருல் யாதென்று இங்கு விளக்கப்படுகிறது. எது இருந்தால், காலதாமதமின்றியில் நிச்சயமாகக் கார்ய முண்டாகிறதோ, அதுவே 'சிறந்த ஸாத₄கம்' என்றும் 'கரணம்' என்றும் சொல்லப்படுகிறது. ஆக, கீழ் கூறிய ப்ரமைக்குக் கரணமாயிருப்பது 'ப்ரமாணம்' என்றதாயிற்று. உண்மை யறிவுக்கு உயர்ந்த காரணம் ப்ரமாணம் என்பது ஸாரார்த்த₂ம். பௌ₃ளத்₃த₄ர் முதலானோர் — "வேறு ப்ரமாணத்தால் அறியப் படாத விஷயத்தை எது அறிவிக்கிறதோ, அது ப்ரமாணம்" என்று ப்ரமாண லக்ஷணம் உரைக்கிருர்கள். இந்த லக்ஷணத்தை அந்தந்த மதக்காரர்களே தூ₃ஷித்திருப்பதால் நாம் இதைப் பொருட்படுத்த வேண்டியதில்லை. 19.

*30. கீழே ப்ரமாணலக்ஷணம் சொல்லப்பட்டது. ப்ரமா ணங்கள் ப்ரத்யக்ஷம், அனுமானம், ஶப்₃த₃ம் என்று மூவகைப் படும் என்பது பத்தாவது ஶ்லோகத்திலேயே சொல்லப்பட்டது.

दुष्टेन्द्रियजन्यव्यावृत्त्यर्थं प्रमेति ॥ २० ॥ तच्च प्रत्यक्षं द्विविधं-निर्विकल्पकसविकल्पकभेदात्। निर्विकल्पकं नाम गुणसंस्थानादिविशिष्ट-प्रथमपिण्डग्रहणम्। सविकल्पकं तु सप्रत्ययमर्शं गुणसंस्थानादिविशिष्ट-द्वितोयादिपिण्डग्रहणम्। उभयमप्येतद्विशिष्टविषयमेव। अविशिष्टग्राहिणो

---

३१. प्रकीर्तितो निर्विकल्पः पिण्डस्य प्रथमो ग्रहः।
सविकल्पो द्वितीयादिपिण्डग्रह उदीर्यते ॥

३२. उभे अपीमे प्रत्यक्षे धर्मधर्म्यवगाहिनी।
विहायान्यतरद्धर्मधर्मिणोस्स्यान्न धीः क्वचित् ॥

---

இனி அறுபத்தைந்தாவது ஶ்லோகம்வரை [தீ₃பிகையில் முதல் அவதாரம் முடிய] ப்ரத்யக்ஷப்ரமாணம் ஆராயப்படுகிறது. ஒரு பொருளை நேரே உள்ளபடி அறிவதற்குக் கரணமாயிருக்கும் ப்ரமாணம் ப்ரத்யக்ஷம் எனப்படுகிறது. தோஷமற்ற மெய் வாய் கண் மூக்குச் செவி என்னும் ஐந்து ஞானேந்திரியங்களும் இந்த லக்ஷணத்தின்படி ப்ரத்யக்ஷப்ரமாணமாகும். இவையே வஸ்துவை நேரே உள்ளபடி அறியத் தனிக்காரணமாகின்றன வன்றோ. "*நேரே* அறியத் தனிக்காரணம்" என்று லக்ஷண முரைத்ததால், அநுமானம், ஶப்₃த₃ம் என்னும் ப்ரமாணங்கள் இந்த லக்ஷணத்தில் வாராமல் தவிர்க்கப்படுகின்றன. "*உள்ளபடி* அறியக்காரணம்" என்று லக்ஷணமுரைத்ததால் காமாலை முதலிய தோ₃ஷமுடைய கண் முதலிய இந்திரியங்கள் இந்த லக்ஷணத்தில் வாராமல் தவிர்க்கப்படுகின்றன. 20.

30*-32. நேரே அறிவதாகிற ஸாக்ஷாத்காரம் 'நிர்விகல்பகம்' என்றும், 'ஸவிகல்பகம்' என்றும் இருவகைப்படும்; ஒரு ஜாதியைச்சேர்ந்த ஒரு வஸ்துவை முதன் முதலில் அறியும் அறிவு 'நிர்விகல்பகம்' எனப்படுகிறது. அவ்வஸ்துவையோ, அந்த ஜாதியைச் சேர்ந்த வேறு வஸ்துவையோ பிறகு அறியும் அறிவு 'ஸவிகல்பகம்' எனப்படுகிறது. நிர்விகல்பகம், ஸவிகல்பகம் என்னும் இவ்விரண்டு வித₄மான ப்ரத்யக்ஷஜ்ஞானங்களும், த₄ர்மம், த₄ர்மி ஆகிய இரண்டையும்

ज्ञानस्यानुपलम्भादनुपपत्तेश्च ॥ २१ ॥ ग्रहणप्रकारस्तु-आत्मा मनसा संयुज्यते, मन इन्द्रियेण, इन्द्रियमर्थेन। इन्द्रियाणां प्राप्यकारित्व-नियमात्। अतो घटादिरूपार्थस्य चक्षुरादी(चक्षुरूपे)न्द्रियस्य च संनिकर्षे सति अयं घटः पट इति चाक्षुषज्ञानं जायते। एवं स्पार्शनप्रत्यक्षादयोऽपि ॥ २२ ॥

३३. सन्निकर्षादिन्द्रियस्य चार्थस्य च परस्परम्।
चाक्षुषस्पार्शनादीनि प्रजायन्ते पृथक् पृथक् ॥

சேர்த்தே அறிகின்றன. [அத்₃வைதிகளும் நையாயிக வைசே ஷிகர்களும் நிர்விகல்பக ப்ரத்யக்ஷத்தில் த₄ர்மம் த₄ர்மி ஆகிய இரண்டும் சேர்ந்து அறியப்படுவதில்லை என்கிறார்கள்.] க₄டம் முதலான த₄ர்மி அதனுடைய கறுப்பு நிறம் முதலான த₄ர்மம் ஆகிய இவற்றில் ஒன்றைவிட்டு மற்றொன்றை மட்டும் கிரஹிப்பதான அறிவு எங்குமே காணப்படவில்லையே. 21.

33. ப்ரத்யக்ஷப்ரமாணமான இந்திரியங்கள் ப்ரத்யக்ஷ ஜ்ஞானத்துக்குக் காரணமாவது பின்வரும் ரீதியிலேயாம்; அதாவது:— ஆத்மா மனத்தோடு சேருகிறது; மனம் இந்தி ரியத்தோடு சேருகிறது; இந்திரியம் க₄டம் முதலான வஸ்து வோடு சேருகிறது. உடனே ஆத்மாவுக்கு அறிவு ஏற்படு கிறது. க₄டம் முதலான பொருளுக்கும் கண்ணென்கிற இந்திரி யத்துக்கும் கீழ்ச்சொன்ன முறையில் ஸம்ப₃ந்த₄மேற்பட்டால் சாக்ஷுஷப்ரத்யக்ஷம் உண்டாகிறது; வஸ்துவுக்கும் த்வக் (மெய்) என்னும் இந்திரியத்துக்கும் ஸம்ப₃ந்த₄ம் ஏற்பட்டால் ஸ்பார்சனப்ரத்யக்ஷம் உண்டாகிறது. நாக்கு என்னும் இந்திரி யத்தோடு பொருளுக்கு ஸம்ப₃ந்த₃ம் ஏற்பட்டால் ராஸந ப்ரத்யக்ஷம் ஏற்படுகிறது, மூக்கு என்னும் இந்திரியத்தோடு பொருளுக்கு ஸம்ப₃ந்த₄ம் ஏற்பட்டால் க்₄ராணப்ரத்யக்ஷம் ஏற்படுகிறது. செவி என்னும் இந்திரியத்தோடு ஸம்ப₃ந்த₄ம் ஏற்பட்டால் ச்ராவணப்ரத்யக்ஷம் ஏற்படுகிறது. ஐந்துவித₄ மான இந்த ப்ரத்யக்ஷஜ்ஞானங்களும் தனித்தனியாக உண்டாகின்றன. 22.

द्रव्यग्रहणे संयोगस्संबन्धः। द्रव्यगतरूपादिग्रहणे, समवायानङ्गीकारात् संयुक्ताश्रयणं संबन्धः॥ २३॥

निर्विकल्पकसविकल्पकभिन्नं प्रत्यक्षं द्विविधम्, अर्वाचीनमनर्वाचीनं चेति। अर्वाचीनं पुनर्द्विविधम्-इन्द्रियसापेक्षं तदनपेक्षं

---

३४. द्रव्यग्रहे तु संयोगः तत्स्थरूपादिसङ्ग्रहे।
संयुक्ताश्रयणं चैवं सम्बन्धः परिकीर्तितः॥

---

34. இந்திரியங்களுக்கும் வஸ்துவுக்கும் ஸம்ப₃ந்த₄மேற்படுவதால் அறிவு ஏற்படுகிறதென்று உரைக்கப்பட்டது. இந்த ஸம்ப₃ந்த₄ம் யாது என்று ஆராயப்படுகிறது இந்த ஶ்லோகத்தில். க₄டம் முதலான த்₃ரவ்யத்தை அறியும்போது இந்திரியத்திற்கு அதோடு ஏற்படும் ஸம்ப₃ந்த₄ம் ஸம்யோக₃ம் எனப்படுகிறது. அந்த த்₃ரவ்யத்தில் இருக்கும் ரூபம் முதலானவற்றை அறியும்போது இந்திரியத்துக்கு அவற்ருேடு ஏற்படும் ஸம்ப₃ந்த₄ம் ஸம்யுக்தாஶ்ரயணம் எனப்படுகிறது. இந்திரியத்தோடு ஸம்யோக₃ ஸம்ப₃ந்த₄த்தாலே சேர்ந்திருப்பது த்₃ரவ்யம்; அதை ஆஶ்ரயித்திருப்பது ரூபம் முதலானது. ஆகையால் இந்திரியத்துக்கும் ரூபாதி₃களுக்குமுள்ள ஸம்ப₃ந்த₄ம் ஸம்யுக்தாஶ்ரயணம் எனப்படுகிறது. வைஶேஷிகன், ரூபாதி₃கள் த்₃ரவ்யத்தோடு ஸமவாயமென்னும் ஸம்ப₃ந்த₄த்தால் சேர்ந்திருப்பதாக ஒப்புக்கொள்ளுகிருனுகையால், இந்திரியத்துக்கும் ரூபாதி₃களுக்குமுள்ள ஸம்ப₃ந்த₄ம் ஸம்யுக்த ஸமவாயம் என்கிருன். வேதா₃ந்திகளான நாம் ஸமவாயமென்ருெரு ஸம்ப₃ந்த₄த்தை ஒப்புக்கொள்ளவில்லையாகையால் ரூபாதி₃களுக்கும் இந்திரியத்துக்குமுள்ள ஸம்ப₃ந்த₄த்தை ஸம்யுக்தாஶ்ரயணமென்கிருேம். 23.

35-*37, நிர்விகல்பகம் ஸவிகல்பகம் என்று பிரிக்கப்பட்ட ப்ரத்யக்ஷஜ்ஞானமே — தாழ்ந்தது, உயர்ந்தது என்று

चेति। तदनपेक्षं द्विविधम्-स्वयंसिद्धं दिव्यं चेति। स्वयंसिद्धं-योग-जन्यम्; दिव्यं - भगवत्प्रसादजन्यम्। अनर्वाचीनं तु, इन्द्रियानपेक्षं

---

३५. अर्वाचीनं तथाऽनर्वाचीनं प्रत्यक्षमिष्यते।
आद्यमिन्द्रियसापेक्षमनपेक्षमिति द्विधा॥

३६. स्वतस्सिद्धं दिव्यमिति द्विधान्त्यं परिकीर्तितम्।
स्वतस्सिद्धं योगजन्यमन्यदीशप्रसादजम्॥

---

இரண்டு வகையாகவும் பிரிக்கப்படுகிறது. தாழ்ந்த ப்ரத்யக்ஷமாவது இவ்வுலகிலுள்ள ப3த்3த4ர்களுடைய ப்ரத்யக்ஷம். பரமபத3த்திலுள்ள நித்யர், முக்தர், ஈஶ்வரன் ஆகிய இவர்களுடைய ப்ரத்யக்ஷஜ்ஞானம் உயர்ந்ததெனப்படுகிறது. தாழ்ந்த ப்ரத்யக்ஷம்-இந்திரியத்தால் உண்டாவது, இந்திரியத்தை எதிர்பாராமல் உண்டாவது என்று இருவகைப்படும்; இந்திரியத்தால் உண்டாகும் ப்ரத்யக்ஷம் நம்போல்வாருடையது; இந்திரியத்தை எதிர்பாராமல் உண்டாகும் ப்ரத்யக்ஷம்-ஸ்வதஸ்ஸித்3த4ம் (தானாகவே உண்டாவது) தி3வ்யம் (தே3வனாலுண்டாவது) என்று இரண்டு வகைப்படும். ஸ்வதஸ்ஸித்3த4ப்ரத்யக்ஷமாவது—யோகி3களுக்கு யோக3த்தால் உண்டாகும் ப்ரத்யக்ஷம்; தி3வ்யப்ரத்யக்ஷமாவது "மயர்வற மதிநலமருளினன்" [திருவாய் 1-1-1] என்றும், "தி3வ்யம் த3தா3மி தே சக்ஷு:" [கீ3தை] [என் விஶ்வரூபத்தைப் பார்க்க நான் உனக்கு தி3வ்யமான கண்ணைத் தருகிறேன்] என்றும் சொல்லுகிறபடியே தே3வனாகிற ஸர்வேஶ்வரனுடைய கிருபையாலே ஏற்படும் ஞானமாகும். இந்திரியத்தை எதிர்பாராமல் உண்டாகும் ப்ரத்யக்ஷம் என்றவிடத்திலே இந்திரியமானது கண் முதலான வெளி இந்திரியங்கள் என்று கொள்ள வேண்டும். ஏனெனில், யோகி3ப்ரத்யக்ஷத்திலும் தி3வ்யப்ரத்யக்ஷத்திலும் மனமாகிற உள்ளிந்திரியத்தின் உதவி வேண்டியிருக்கிறதன்றோ. கர்மஸம்ப3ந்த4ம் நீங்காத இவ்வுலகிலிருக்கும் வரை ஏதாவதொரு இந்திரியத்தின் உதவியில்லாமல்

नित्यमुक्तेश्वरज्ञानम्। अनर्वाचीनं प्रसङ्गादुक्तम्। एवं साक्षात्कारिप्रमाकरणं प्रत्यक्षमिति सिद्धम्॥ २४॥

ननु यथावस्थितव्यवहारानुगुणं ज्ञानं प्रमेत्युक्तम्। एवं च स्मृतेरपि यथावस्थितव्यवहारानुगुणज्ञानत्वेन प्रामाण्यात् स्मृतेरपि प्रमाणत्वेन परिगणनाच्च त्रीण्येव प्रमाणानीति कथं प्रतिपाद्यत इति चेत्; उच्यते। स्मृतेः प्रामाण्याङ्गीकारेऽपि संस्कारसापेक्षत्वात्तस्याः प्रत्यक्षमूलत्वान्मूलभूते प्रत्यक्षेऽन्तर्भाव इति न पृथक्प्रमाणत्वकल्पनम्। अतः प्रमाणानि त्रीण्येवेति संभवति। स्मृतिर्नाम पूर्वानुभवजन्यसंस्कारमात्रजन्यं ज्ञानम्। तत्र चोद्बुद्धस्संस्कारो हेतुः। संस्कारोद्बोधश्च * सदृशादृष्टचिन्ताद्याः स्मृतिबीजस्य बोधकाः * इत्युक्तप्रकारेण क्वचित्सदृशदर्शनाद्भवति, क्वचिददृष्टात्, क्वचिच्चिन्तया। आदिशब्देन साहचर्यस्यापि ग्रहणात् तेनापि भवति। सादृश्यजा यथा,

---

३७. नित्यमुक्तेश्वरज्ञानमनर्वाचीनमुच्यते।
पूर्वानुभवसंभूतसंस्कारोद्बोधने सति॥

---

இவனுடைய அறிவு காரியம் செய்யாது. இதனுலேயே இது தாழ்ந்ததெனப்படுகிறது. ஆனல், பரமபத₃த்தில் நித்யர், முக்தர், ஈச்வரன் ஆகியவர்களுடைய அறிவு ஒரு இந்திரியத்தையும் எதிர்பாராமலே கார்யகரமாகிறது. அதனுலேயே அவ்வறிவு உயர்ந்தது எனப்படுகிறது, 24.

37*-*39. வஸ்துவை முன் அநுப₄வித்து ஏற்பட்ட ஸம்ஸ்காரம் எழும்புவதால்மாத்திரம் உண்டாகும் அறிவு ஸ்ம்ருதி (நினைவு) எனப்படுகிறது. இந்த ஸம்ஸ்காரத்தை எழுப்புமவை-ஒற்றுமை, அத்₃ருஷ்டம், சிந்தை, சேர்த்தி (ஸாஹசர்யம்) என்பவை. ஒற்றுமையுள்ளவர்களான தே₃வத₃த்த யஜ்ஞத₃த்தர்களுள் தே₃வத₃த்தனைக் கண்டவுடன் யஜ்ஞத₃த்தன் நினைவு

देवदत्तयज्ञदत्तयोस्सदृशयोर्देवदत्तदर्शनेन यज्ञदत्तस्मृतिः। द्वितीया यथा, यादृच्छिकी कालान्तरदेशान्तरानुभूतश्रीरङ्गादिदिव्यदेशस्मृतिः। तृतीया यथा, चिन्त्यमाने सति श्रीवेङ्कटेशस्य कमनीयदिव्यमङ्गलविग्रहस्मृतिः। चतुर्थी तु, सहचरितयोः देवदत्तयज्ञदत्तयोर्मध्येऽन्यतरदर्शनेन तदन्यतरस्मृतिः। सम्यगनुभूतस्य सर्वस्य स्मृतिविषयत्वनियमः। क्वचित् कालदैर्घ्यात् व्याध्यादिना वा संस्कारस्य प्रमोषात् स्मृत्यभावः॥ २५॥

---

३८. सदृशादृष्टचिन्ताद्यैस्स्मृतिर्भवति सा प्रमा।
अस्यास्स्वहेतौ प्रत्यक्षे त्वन्तर्भावः प्रकीर्तितः॥

---

வருவது, ஒற்றுமையால் ஸம்ஸ்காரம் எழும்புவதற்கு உதா₃ஹரணம். அத்₃ருஷ்டமாகிற ப₄க₃வத்ஸங்கல்பத்தாலே, ஒரு ஸமயம் அநுப₄விக்கப்பட்ட கோயில் திருமலை பெருமாள் கோயில் முதலான தி₃வ்யதே₃ஶங்கள் யத்₃ருச்சை₂யாக நினைவுக்கு வருவது அத்₃ருஷ்டத்தால் ஸம்ஸ்காரம் எழும்புவதற்கு உதா₃ஹரணமாகும். சிந்திக்கும்போது, திருவேங்கடமுடையானுடைய தி₃வ்யமங்க₃ளவிக்₃ரஹம் நினைவுக்குவருவது சிந்தையிலே ஸம்ஸ்காரம் எழும்புவதற்கு உதா₃ஹரணம். சேர்ந்தே பார்க்கப்பட்ட தே₃வத₃த்தயஜ்ஞத₃த்தர்களில் ஒருவனை தே₃வத₃த்தனைக் காலாந்தரத்தில் கண்டவளவில் யஜ்ஞத₃த்தன் நினைவு ஏற்படுவது சேர்த்தியாலே ஸம்ஸ்காரம் எழும்புவதற்கு உதா₃ஹரணம். இந்த ஸ்மிருதியானது, உள்ளதை உள்ளபடி வழங்குவதற்குக் காரணமான அறிவாகையாலே ப்ரமையாகும். இது ஒரு தனியான ப்ரமையாகில், இதற்குக் காரணமான ஸம்ஸ்காரமானது—ப்ரத்யக்ஷம், அனுமானம், ஶப்₃த₃ம் என்னும் மூன்று ப்ரமாணங்களைக் காட்டிலும் வேறானதொரு ப்ரமாணமாகவேண்டாவோ? என்னில்: ஆகாது; இந்த ப்ரமையும், அதற்குக் காரணமான ஸம்ஸ்காரமும், ஸம்ஸ்காரத்திற்கும் காரணமான ப்ரத்யக்ஷத்தால் உண்டுபண்ணப்படுகின்றன

यथा स्मृतेः प्रत्यक्षेऽन्तर्भावः, एवं सोऽयं देवदत्त इति प्रत्यभिज्ञाया अपि प्रत्यक्षेऽन्तर्भावः॥ २६॥

असन्मते अभावस्य भावान्तररूपत्वात् तज्ज्ञानस्यापि प्रत्यक्षेऽन्तर्भावः। भूतले घटात्यन्ताभावो भूतलमेव। घटप्रागभावो नाम

---

३९. तस्मात्पृथक्प्रमाणत्वं स्मृतेर्नेच्छन्ति पण्डिताः।
प्रत्यभिज्ञा सोऽयमिति प्रत्यक्षेऽन्तर्गता तथा॥

४०. अभावस्यान्यभावत्वात्प्रत्यक्षविषयश्च सः।
भूतलस्थघटाभावो नेतरो भूतलात्मकः॥

---

வாகையால், ப்ரத்யக்ஷப்ரமாணத்திலேயே அடங்கிவிடுகின்றன. ஆகையால் ஞானிகள் ஸ்மிருதியைத் தனியான ப்ரமாணமாக ஒப்புக்கொள்ளுவதில்லை. ப்ரத்யக்ஷத்தின் மூலம் வரும் ஸ்மிருதி ப்ரத்யக்ஷப்ரமாணத்தில் அடங்கிவிடுவதுபோலே, அநுமானத்தின் மூலமாகவும் ஶப்₃த₃த்தின் மூலமாகவும் ஸம்ஸ்கார மேற்பட்டு வரும் ஸ்மிருதி முறையே அநுமானத்திலும் ஶப்₃த₃த்திலும் அடங்கிவிடும். நீண்ட காலமாவதாலும், நோய் முதலானவற்ருலும் ஸம்ஸ்காரம் அழிந்து ஸ்மிருதி ஏற்படாமற் போவதுமுண்டு. 25.

39*. வேறு தே₃ஶகாலங்களில் பார்க்கப்பட்ட ஒருவனைப் பற்றிய ஸம்ஸ்காரமெழும்பி, "இவனே அந்த தே₃வத₂த்தன்" என்று வரும் ப்ரத்யபி₄ஜ்ஞையும் ஸ்மிருதியைப்போலே தனக்குக் காரணமான ப்ரத்யக்ஷத்தில் அடங்கிவிடும். ஆகையால் அதுவும் தனியான ப்ரமாணமாகாது. 26.

40-*41. சிலர் 'அப₄ாவம்' எனப்படும் இல்லாமையை 'அநுபலப்₃தி₄' [காணுமை] என்னும் ப்ரமாணத்தால் அறிகிருேம் என்கிருர்கள். அதாவது:—"இந்த வஸ்து இந்த இடத்தில் இருந்திருந்தால் நான் பார்த்திருப்பேன்; நான் இவ் வஸ்துவை இங்கு பார்க்கவில்லை; ஆகையால் அது இங்கு

मृदेव। घटध्वंसश्च कपालमेव ॥ २७ ॥ प्रायः पुरुषेणानेन भवितव्य-

---

४१. घटस्य प्रागभावो मृत् प्रध्वंसस्तु कपालकम्।
तत्तद्वस्त्वपृथक्धर्मौ भेद इत्यभिधीयते ॥

---

இல்லை " என்று 'காணுமை' [அநுபலப்₃தி₄] என்னும் ப்ரமாணத்தாலே இல்லாமையாகிற அப₄ாவத்தை ஸாதி₄க்கவேண்டும் என்று அவர்கள் நினைக்கிருர்கள். வேத₃ாந்திகளாகிற நாம் 'அப₄ாவம்' [இல்லாமை] என்றே ஒருபொருளைத் தனியாக ஒப்புக்கொள்வதில்லை. பூ₄மியில் 'க₄டம்' இல்லையெனில், பூ₄மியில் 'க₄டாப₄ாவம்' [க₄டத்தின் இன்மை] இருக்கிறது என்கிருர்கள் தார்க்கிகர் முதலாஞர். நாம் சொல்லுகிறேம்:— " 'க₄டத்தின் இல்லாமை' என்று ஒரு பொருள் பூ₄மியிலிருப்பதாகச் சொல்லுவது தவறு; பூ₄மியாகிற உள்ளபொருளையே 'க₄டத்தின் இல்லாமை' [க₄டாப₄ாவம்] என்னும் ஶப்₃த₃ம் குறிக்கிறது "—என்று. க₄டாப₄ாவம் பூ₄மிதலமே என்பது நம் ஸித்₃த₄ாந்தம். 'ப்ராக₃ப₄ாவம்' என்றும், 'ப்ரத்₄வம்ஸாப₄ாவம்' என்றும் சில அப₄ாவங்களை தார்க்கிகர்கள் ஒப்புக்கொள்ளுகிருர்கள். 'க₄டம்' உண்டாவதற்கு முன் க₄டத்தின் ப்ராக₃ப₄ாவம் உள்ளது என்றும், 'க₄டம்' உடைந்த பிறகு க₄டத்தின் ப்ரத்₄வம்ஸாப₄ாவம் உள்ளது என்றும் சொல்லுகிருர்கள் அவர்கள். நாம் சொல்லுகிறேம்;—"க₄டம் உண்டாவதற்கு முன் அதற்குக் காரணமான மண்ணே அதன் ப்ராக₃ப₄ாவமாகும்; உடைந்தபிறகு உள்ள 'கபாலங்கள்' எனப்படும் ஓடுகளே அதன் ப்ரத்₄வம்ஸாப₄ாவமாகும் "— என்று. ஆக இப்படி ஒரு பொருளின் அப₄ாவம் [இல்லாமை] மற்றொரு ப₄ாவபதா₃ர்த்த₂ம் [உள்ளபொருள்] ஆகவேயிருப்பதால் அப₄ாவமும் ப்ரத்யக்ஷத்திஞலேயே அறியப்படுகிறது. அதை அறிவதற்கு அநுபலப்₃தி₄ என்னும் தனி ப்ரமாணம் ஒன்று வேண்டா. 27.

41*-42. கீழே குறிக்கப்பட்ட ப்ரத்யக்ஷம் எப்பொருளை அறியும்போதும், முதன் முதலில் பே₄த₃த்தையே அறிகிறது.

मित्येतदूहः। पुरः किंसंज्ञकोऽयं वृक्ष इत्यनध्यवसायो ज्ञानं संशय

---

४२. घटे च पटभेदस्तु घटत्वान्नातिरिच्यते।
शब्दस्वभावनियताऽऽकाङ्क्षा हि प्रतियोगिनः॥

---

அதாவது:— அப்பொருளை மற்ற பொருள்களிற்காட்டிலும் வேருகவே அறிகிறது. அந்த 'பே4த3ம்' என்பது யாதெனில்: அந்தந்த வஸ்துவை விட்டுப்பிரியாமலிருக்கும் அதனுடைய அஸாத4ாரணுகாரமே 'பே4த3ம்' என்று சொல்லப்படுகிறது. க4டத்திலிருக்கும் படபே4த3ம் 'க4டத்வம்' [க4டமாயிருக்கும் தன்மை] என்று சொல்லப்படுகிறதான க4டத்தின் அஸாத4ாரணு காரத்தைக்காட்டிலும் வேறன்று. இதற்குமேல் ஒரு ஸந்தே3ஹம் எழக்கூடும்:— "பே4த3மும் க4டத்வமும் ஒன்ருனல் 'பே4த3ம்' என்று சொல்லும்போது 'எதினுடைய பே4த3ம்' என்று பே4த3ப்ரதியோகி3யான படத்தின் அபேக்ஷை ஏற்படுவதுபோலே 'க4டத்வம்' என்னும்போதும் ப்ரதியோகி3யின் அபேக்ஷை ஏற்படவேண்டுமே; அப்படி ஏற்படுவதில்லையே: ஆகையால் பே4த3மும் க4டத்வமும் ஒன்ருகமுடியாது"— என்று. அது சரியன்று; இரண்டு ஶப்3த3ங்கள் ஒரே பொருளைக் குறிப்பனவாயினும் பத3த்தின் ஸ்வபா4ாவத்தையொட்டி ஒன்றில் ப்ரதியோகி3யின் அபேக்ஷை ஏற்படவும் கூடும். ஒன்றில் அவ்வபேக்ஷை ஏற்படாமலிருக்கவும் கூடும். ஒரு மனிதனை 'பிள்ளை' என்ருல் 'யாருடைய பிள்ளை?' என்று ப்ரதியோகி3யின் அபேக்ஷை ஏற்படும்; 'ராமன்' என்று பெயரைச் சொன்னல் அவ்வபேக்ஷை ஏற்படாது. அது போலவே 'பே4த3ம்' என்னும் ஶப்3த3ம் எப்போதும் ப்ரதியோகி3ஸாபேக்ஷமானது; 'க4டத்வம்' என்னும் ஶப்3த3மோவெனில் ப்ரதியோகி3நிரபேக்ஷமானது. ஆகையால், பே4த3மென்பது அஸாத4ாரண ஆகாரத்தைத்தவிர வேறில்லை. இத்தால் 'அந்யோந்யாபா4ாவம்' என்று ஒன்றை ஒப்புக்கொள்வதும் அநாவஶ்யகம் என்றும் காட்டப்பட்டதாகிறது. *

---

* இந்த விஷயம் தீபிகையில் இங்கு இல்லை.

उक्तः। एतयोरपि प्रत्यक्षेऽन्तर्भावः॥ २८॥ पुण्यपुरुषनिष्ठा प्रतिभाऽपि प्रत्यक्षेऽन्तर्गता॥ २९॥

---

४३. ऊहसंशययोरेवमन्तर्भावोऽत्र कथ्यते।
पुण्यजीवस्थिताऽत्रैव प्रतिभाऽन्तर्गता तथा॥

---

*43. உயர்ந்து நிற்கும் ஒரு மரத்தைப்பார்த்து 'இது மாமரமோ? புளியமரமோ?' என்று ஸந்தே₃ஹிக்கிறுன் ஒருவன்; இது 'ஸம்ஶயம்' எனப்படுகிறது. ஒரு வஸ்துவில் கால் கை முதலானவை அசைவதைக்கண்டு 'இது மனிதனுயிருக்கலாம்' என்று ஊஹிக்கிறுன்; இது 'ஊஹம்' எனப்படுகிறது. இவைகளும் ப்ரத்யக்ஷத்தில் அடங்குமேயொழியத் தனியான ப்ரமாணமாகமாட்டா. 28.

43*. புண்ணியம் புரிந்த ஜீவனிடமுள்ள 'ப்ரதிபை₄'யும் ப்ரத்யக்ஷத்திலே அடங்கும். ப்ரதிபை₄யாவது,—ஒரு வஸ்துவைப் பார்த்தால், அதைப்பற்றிய விஷயங்கள் புதிது புதிதாக மேலும்மேலும் தோன்றிக்கொண்டேயிருப்பதற்குக் காரணமாயிருப்பதொன்று. கவிகள் முதலான மேதை₄களிடத்திலே இது காணப்படுவதாகச் சொல்லுகிறேம். இது ஒரு தனி ப்ரமாணமாகுமென்று சிலர் சொல்லுகிருர்கள். இதுவும் ப்ரத்யக்ஷத்திலே அடங்கும் என்கிறேம் நாம். ஒரு கவியானவன் காட்டையோ, கடலையோ, நதி₃யையோ, மலையையோ, மலரையோ பார்க்கும்போது அவனுக்கு அதைப்பற்றி மேலும் மேலும் புதிது புதிதாக வர்ணனைகள் தோன்றுகின்றன. இதற்குக்காரணம் அவன் புண்ணியம் புரிந்தவனுயிருப்பதேயாம்; விலக்ஷணமான அவனுடைய காட்சியும் ப்ரத்யக்ஷத்திலேயே அடங்குகின்றது. ப்ரத்யக்ஷத்தை விஷயமாகக்கொண்ட ப்ரதிபை₄ ப்ரத்யக்ஷத்திலடங்குவதுபோல், அநுமாநத்தையும், ஶப்₃த₃த்தையும் விஷயமாகக்கொண்ட ப்ரதிபை₄கள் முறையே அநுமான ஶப்₃த₃ங்களிலே அடங்குகின்றன. ஊஹஸம்ஶயங்களிலும் இதுபோலவே கொள்வது. 29.

जातिरिति वा। पराजयहेतुर्निग्रहस्थानम्। इत्येतेषामनुमानाङ्गत्वादनुमानेऽन्तर्भावः। क्वचित् क्वचिन्नैयायिकमतानुसा(रेणोक्तम्)रिव्यवहारस्तु तन्मतानुसारेणोक्तः। अतो न विरोधः। इत्यनुमानं निरूपितम्॥ ६६॥

इति श्रीवाधूलकुलतिलक श्रीमन्महाचार्यप्रथमदासेन श्रीनिवासदासेन विरचितायां यतीन्द्रमतदीपिकायां शारीरकपरिभाषायां अनुमाननिरूपणं नाम द्वितीयोऽवतारः॥

---

யடைகிருேரு. அந்த வாத₃ம் *நிக்₃ரஹஸ்த₂ானம்* எனப்படும். நிர்சயம் தொடக்கமான இவையெல்லாம் அநுமான ப்ரமாணத்திற்கு அங்க₃மாய் (உறுப்பாய்) இருக்கையால், தனி ப்ரமாணமாகாமல், அனுமானத்தில் அடங்கிவிடுகின்றன. ஜாதி, நிக்₃ரஹஸ்த₂ானம் முதலானவை நையாயிகர்களாலேயே ஒப்புக்கொள்ளப்பட்டு, நம் ஸித்₃த₄ாந்தத்தில் ஒப்புக்கொள்ளப் படாவிடிலும், நமக்கு விரோத₄மில்லாமையாலே இங்கு அவற்றை ஏற்றுக்கொண்டு நிர்வாஹம் செய்யப்பட்டது. ஆகையாலே, எக்குறையுமில்லை. ஆக, இவ்வளவால் ப்ரமாணங்கள், ப்ரத்யக்ஷம், அநுமானம், *ஶப்₃த₃ம்* என்னும் மூன்றே என்று நிருபிக்கப்பட்டதாயிற்று. 66.

**தீ₃பிகா காரிகாவளீ விவரணத்தில் அநுமான ப்ரகரணம் முற்றிற்று.**

## 3. சப்தப்ரகரணம்

98. இனி, *ஶப்₃த₃*ப்ரமாணம் ஆராயப்படுகிறது. ஆப்தனல்லாதவனுல் சொல்லப்படாத வாக்கியத்தினுல் ஏற்படும் அறிவு "*ஶாப்₃த₃*ஜ்ஞானம்" எனப்படுகிறது. அதற்குக் கரணமாயிருக்கும் அவ்வாக்கியம் *ஶப்₃த₃*ப்ரமாணமாகிறது. "ஆப்தனுல் சொல்லப்படும் வாக்கியம் *ஶப்₃த₃ம்*" என்று நையாயிக வைஶேஷிகர்கள் லக்ஷணம் சொல்லுகிருர்கள். இப்படி லக்ஷணம் சொன்னுல் எவராலும் உண்டுபண்ணப்படாத வேத₃ம் ப்ரமாணமாகாமற்போகவேண்டிவரும். அதனுலேயே "ஆப்தனல்லாதவனுல் சொல்லப்படாத வாக்கியம் *ஶப்₃த₃* ப்ரமாணம்" என்று லக்ஷணம் சொல்லப்பட்டது. இந்த லக்ஷணப்படி ஒருவராலும் சொல்லப்படாத - அக்ருத்ரிமமான — வேத₃மும் ப்ரமாணமாகுமன்றே. 67.

## ॥ अथ तृतीयोऽवतारः ॥

अनुमाननिरूपणानन्तरं शब्दो निरूप्यते। अनाप्तानुक्तवाक्यजनितस्तदर्थविज्ञानं शाब्दज्ञानम्। तत्करणं शब्दप्रमाणम्। अनाप्तानुक्तेत्युक्त्वाद्वेदस्य पौरुषेयत्वमतनिरासः॥ ६७॥

कारणदोषबाधकप्रत्ययाभाववद्वाक्यं वा। सर्गादौ भगवान् चतुर्मुखाय पूर्वपूर्वक्रमविशिष्टान् वेदान् स्मृत्वा स्मृत्वा उपदिशतीत्युक्त्या वेदस्य नित्यत्वमपौरुषेयत्वं च सिद्धमिति कारणदोषाभावो बाधकप्रत्ययाभावश्च॥ ६८॥

---

## ॥ अथ शब्दप्रकरणम् ॥ ३ ॥

९८. आप्तेतराऽनुक्तवाक्यं शाब्दधीकरणं च यत्।
शब्दप्रमाणं तत् वेदेऽकृत्रिमे लक्षणान्वयः॥

९९. वेदमीशो यथापूर्वमादौ स्मृत्वोपदिष्टवान्।
ब्रह्मणेऽतश्च वेदस्य नित्यत्वं बुधसंमतम्॥

---

99. காரணதோ₃ஷமும், ப₃ாத₄கமான அறிவும் இல்லாத வாக்யம் ஶப்₃த₃ம் என்றும் ஶப்₃த₃லக்ஷணம் கூறலாம். நையாயிகவைஶேஷிகர்கள் சொல்லுகிருர்கள், — "வேத₃ம் ஈஶ்வரனுல் உண்டுபண்ணப்பட்டதேயாகையால் 'ஆப்தவாக்கியம் ஶப்₃த₃ம்' எனும் லக்ஷணமே சரியானது" என்று. அது சரியன்று. வேத₃ம் ஈஶ்வரனுலும் செய்யப்பட்டதன்று. "யோ ப்₃ரஹ்மாணம் வித₃த₄ாதி பூர்வம், யோ வை வேத₃ாம்ஶ்ச ப்ரஹிணேதி தஸ்மை" [எவனெருவன் பிரமனை முன் படைத்து, அவனுக்கு வேத₃ங்களை உபதே₃ஶிக்கிருனே...] என்கிறபடியே ஈஶ்வரன் ஆதி₃யில் முன்பிருந்த வேத₃த்தை நினைத்து பிரமனுக்கு உபதே₃ஶிக்கிருனுகையாலே அவனும் வேத₃த்தை உண்டுபண்ணவில்லை. ஆகையால் வேத₃ம் ஈஶ்வரனுலும்

ननु; वेदवाक्यानां मीमांसकैः कार्यपरतयैव प्रामाण्यस्वीकारात् सिद्धब्रह्मपरवाक्यानां व्युत्पत्त्यसंभवाच्च कथं प्रामाण्यमिति चेन्न। सिद्धब्रह्मपरवाक्यानामपि उपासनारूपकार्यान्वयस्वीकारात्। पिता ते सुखमास्ते इति लौकिकसिद्धपरवाक्यस्यापि बोधकत्वदर्शनात्। बालानां

---

१००. नानोपायैस्सिद्धवस्तुन्यपि व्युत्पत्तिसंभवात्।
उपासनारूपकार्यसम्बन्धस्य च दर्शनात्॥

---

செய்யப்படாததாகையாலே அபௌருஷேயமானது; நித்ய மானது. அதனால் அதற்குக் காரணதோ₃ஷமும், ப₃ாத₄கமான அறிவும் இல்லை—என்றே அறிவாளிகள் உரைக்கின்றனர். 68.

100-101. இனி, பூர்வமீமாம்ஸகர்களின் ஆக்ஷேபம் ஒன்று எழுகிறது அதாவது:— "வேத₃த்தின் உத்தரப₄ாக₃மாகிய உபநிஷத்துக்கள் ப்ரமாணமன்று. எந்த வாக்கியம் கார்யபர மானதோ, அதாவது — 'இதைச் செய்; அதைச் செய்யாதே' என்று சொல்லுகிறதோ, அதுவே ப்ரமாணம். வேத₃த்தின் முன் ப₄ாக₃த்தில் இவ்விதமான வாக்கியங்கள் இருப்பதால் அது முழுவதும் ப்ரமாணம். உபநிஷத்துக்களில் இவ்விதமான வாக்கியங்கள் இல்லை. ஸித்₃த₄பரமானவையே உள்ளன. அவை 'ப்₃ரஹ்மம் என்று ஒன்று இருக்கிறது; அது இவ்வித மாயிருக்கிறது' என்று மாத்திரமே சொல்லுகின்றன. இந்த ஸித்₃த₄பரமான வாக்கியங்களைக்கொண்டு சொற்களின் பொருளை அறியமுடியாது. உலகத்தில் 'பசுவை அழைத்துவா; பசுவை ஓட்டிச்செல்' என்பதுபோன்ற கார்யபரமான வாக்கியங் களிலிருந்தே குழந்தைகளுக்குப் பொருளறிவு ஏற்படுகிறது ஆகையால் ஸித்₃த₄மான ப்₃ரஹ்மத்தை அறிவிக்கும் வேத₃ாந்த வாக்கியங்கள் ப்ரமாணமாகமாட்டா" என்று மீமாம்ஸகர்கள் ஆக்ஷேபிக்கிறார்கள். இது சரியன்று. உலகத்தில் ஸித்₃த₄ வஸ்துக்கள் விஷயமாகவும் சொற்பொருள் அறியப்படுகிறது. "உன் தந்தை சுகமாக இருக்கிறான்" என்று ஒருவன் சொன்னால், அதைக் கேட்பவன் எவனும் அதன் பொருளை

लोके मातापितृप्रभृतिमिम्बातातमातुलचन्द्रादीनङ्गुल्या निर्दिश्य तदभिधायिनः शब्दान् प्रयुञ्जानैः क्रमेण बहुशशिक्षितानां तत्तदर्थबुद्ध्युत्पत्तिदर्शनात्। वेदेऽपि परिनिष्पन्नेऽप्यर्थे शब्दस्य बोधकत्वं संभवतीति नाप्रामाण्यशङ्कावकाशः। तर्हि अभिचारादिप्रतिपादकवेदांशस्य कथं प्रामाण्यमिति नाशङ्कनीयम्। तस्य दृष्टफलप्रदर्शनेनादृष्ट-

---

१०१. वेदान्तवाक्यजालानि सिद्धब्रह्मावबोधने।
समर्थानि ततस्सर्ववेदप्रामाण्यमक्षतम् ॥

---

அறியவே செய்கிருன். இவ்வாக்கியம் ‘இதைச்செய் அதைச் செய்யாதே’ என்பதுபோன்ற கார்யவிஷயமான வாக்கியமன்று. ஸித்₃த₄மான விஷயத்தையே சொல்லுகிறது. ‘இது அப்பா’ ‘இது அம்மா’ ‘இது அம்புலிமாமா’ என்று அந்தந்த ஸித்₃த₄ வஸ்துக்களைக் கையால் சுட்டிக்காட்டி அவற்றின் பெயரைப் பலகால் சொல்லுவதால், குழந்தைகளுக்கும் சொற்பொருளறிவு ஏற்படுகிறது. ஆகையால் வேதா₃ந்தத்திலும் ஸித்₃த₄வஸ்துவான ப்₃ரஹ்மத்தைப்பற்றிய அறிவு ஏற்படக்குறையில்லை. மேலும், “ப்₃ரஹ்மத்தை உபாஸிப்பாயாக” என்பது முதலான கார்ய பரமான வாக்கியங்களும் வேதா₃ந்தங்களில் உள்ளன. ப்₃ரஹ்மத்தைப்பற்றிச் சொல்லும் வாக்கியங்களோடு அவை சேர்ந்திருக்கின்றன. ஆகையால் வேத₃த்தின் பூர்வபா₄க₃த்திற் போலே கார்யபரவாக்கியங்கள்மூலமும் சொற்பொருளை அறியலாம். ஆகையால் வேதா₃ந்தவாக்கியங்கள் ஸித்₃த₄மான ப்₃ரஹ்மத்தை அறிவிப்பதில் வல்லமையுடையவையே. பிறர்க்குத் தீங்கு விளைப்பதையே பயனுகக்கொண்ட அபி₄சார யாக₃த்தை விதி₄க்கும் வேத₃பா₄க₃ங்கள் எப்படி ப்ரமாண மாகும்? எனில்: அவையும் கண்கூடாகக்காணும் பயனைக் காட்டி, கண்காணுத ஸ்வர்க்க₃ம் முதலான பயன்களில் நம் பிக்கையை விளைத்து, அவற்றின் ஸாத₄னங்களில் மூட்டுவதற் காக ஏற்பட்டவையாகையாலே அவையும் ப்ரமாணமாகக் குறை யில்லை. “யூபஸ்தம்ப₄ம் ஸூர்யனே” என்று ப்ரத்யக்ஷத்திற்கு

स्वर्गादिफलकसाधनादौ प्रवृत्तिप्रयोजकत्वात्। यूपादित्यवाक्यं तु आदित्यवत् यूपप्रकाशनपरम्। अतः कृत्स्नस्य वेदस्य प्रामाण्यम्॥ ६९ ॥

स वेदः कर्मब्रह्मप्रतिपादकपूर्वोत्तरभागाभ्यां द्विधा भिन्नः। आराधनकर्मप्रतिपादकं पूर्वकाण्डम्। आराध्यब्रह्मप्रतिपादकमुत्तरकाण्डम्। अत उभयोर्मीमांसयोरैकशास्त्र्यम्। भागद्वयात्मको वेदः ऋग्यजुस्सामाथर्वरूपेण चतुर्धाऽवस्थितः, पुनरनन्तप्रकारश्च ॥ ७० ॥

---

१०२. वेदः कर्मब्रह्मबोधी पूर्वोत्तरविभागवान्।
आराधनात्मकं कर्म पूर्वभागे निरूप्यते॥

१०३. ब्रह्मस्वरूपमाराध्यं तदुपासादि चोत्तरे।
स ऋग्यजुस्सामभिश्चाऽथर्वणाच्च चतुर्विधः॥

---

முரணைக்கூறும் வேத₃வாக்யம் எப்படி ப்ரமாணமாகும்? எனில்: யூபஸ்தம்ப₄ம் ஸூர்யனைப்போல் ஒளிவிடுவது என்று காட்டுவதில் நோக்குடையதாகையாலே ப்ரமாணமாகும். ஆகையால் வேத₃ம் முழுவதும் ப்ரமாணமாகிறது. 69.

102-103. வேத₃மானது பூர்வகாண்ட₃ம் என்றும், உத்தர காண்ட₃ம் என்றும் இரு பிரிவுள்ளது; கர்மங்களைச்சொல்லும் முன்பகுதி பூர்வகாண்ட₃மாகிறது; ப்₃ரஹ்மத்தைச்சொல்லும் பின்பகுதி உத்தரகாண்ட₃மாகிறது; இதுவே வேத₃ாந்தம், வேத₃ஶிரஸ் என்று சொல்லப்படும் உபநிஷத்துக்கள். பூர்வ பா₄க₃த்தில் ப₄க₃வானுக்கு ஆராத₄னமான கர்மங்கள் நிரூபிக்கப்படுகின்றன. ஆராதி₄க்கப்படும் ப்₃ரஹ்மத்தின் ஸ்வரூபம், அதன் உபாஸனம் முதலியவை உத்தரபா₄க₃த்தில் நிரூபிக்கப்படுகின்றன. ஆகையால் வேத₃ம் முழுவதும் ப்₃ரஹ்மத்துக்கு ப்ரதிபாத₃கமாகவேயிருக்கிறது. இவ்வேத₃ம் ருக்₃வேத₃ம், யஜுர்வேத₃ம், ஸாமவேத₃ம், அத₂ர்வணவேத₃ம் என நான்கு வகைப்படும். வேத₃ம் அளவற்ற ஶாகை₂கள் உடையதுமாகும். / 70.

ऋगादिबहुप्रकारो वेदः मन्त्रार्थवादविधिरूपेण त्रिविधः। अनुष्टेयार्थप्रकाशको मन्त्रः। विध्यधीनप्रवृत्त्युत्तम्भकवाक्यविशेषोऽर्थवादः। हितानुशासनरूपं वाक्यमिह विधिः॥ ७१॥

---

१०४. आम्नायव्याख्ययोः कर्मब्रह्ममीमांसयोर्द्वयोः।
व्याख्येयैक्यादेकशास्त्रत्वं स्थापितं बुधसत्तमैः॥

१०५. चतुरध्यायशास्त्रस्य ब्रह्मैकविषयत्वतः।
ऐक्यात्तदीयभाष्यस्य चैकशास्त्रत्वं यथा स्थितम्॥

१०६. मन्त्रार्थवादविधिभिस्त्रिविधो वेद इष्यते।
अनुष्ठेयक्रियारीतिबोधको मन्त्र ईरितः॥

---

104-105. வேத₃த்தின் முற்பகுதிக்கு வியாக்கியானமாயிருக்கும் பூர்வமீமாம்ஸையும், பிற்பகுதிக்கு வியாக்கியானமாயிருக்கும் உத்தரமீமாம்ஸையான ப்₃ரஹ்மஸூத்ரங்களும் ஆகிய இரண்டும் ஒரே நூலான வேத₃த்தின் இரண்டு பகுதிகளுக்கு வியாக்கியானமாயிருக்கையால் ஒரே ஶாஸ்திரமாயிருப்பவை என்று அறிஞர்தலைவர்களாலே நிலைநிறுத்தப்பட்டது. நாலு அத்தியாயங்கள் கொண்டதாக வியாஸரால் அருளிச்செய்யப்பட்ட ப்₃ரஹ்மமீமாம்ஸை, ப்₃ரஹ்மமாகிற ஒரே விஷயத்தை விசாரிப்பதாயிருப்பதன்மூலம் ஒன்றாயிருக்கையால் அதற்கு பா₄ஷ்யமான ஸ்ரீபா₄ஷ்யம் முதலானவை ஒரே சாஸ்திரமாயிருப்பதுபோலே, முன் பின் காண்ட₃ங்களையுடைய வேத₃ம் ஒன்றேயாகையால் அவற்றின் வியாக்கியானங்களான பூர்வோத்தரமீமாம்ஸைகளிரண்டும் ஒரே ஶாஸ்திரமேயாகும். / 70.

106-107. வேத₃த்தை, மந்திரம், அர்த்த₂வாத₃ம், விதி₄ என்னும் மூன்று பிரிவாகவும் பிரிக்கலாம். செய்யவேண்டிய கர்மத்தை இன்னமுறையில் செய்யவேண்டும் என்று காட்டும் வாக்கியம் மந்திரம் எனப்படுகிறது. ஒரு விதி₄யினால் விதி₄க்கப்பட்ட காரியத்தை ஒருவனைச் செய்யும்படி தூண்டுவதற்காக அந்தக் கர்மத்தையோ, அதனால் ஆராதி₄க்கப்படும் தே₃வதையையோ துதிக்கும் வாக்கியம் அர்த்த₂வாத₃ம் எனப்படுகிறது,

स च त्रिविधः, अपूर्वपरिसंख्यानियमभेदात्। ते पुनर्नित्य-नैमित्तिककाम्यादिभेदात् बहुविधाः ॥ ७२ ॥ * व्रीहीन्प्रोक्षतीति

१०७. अर्थवादो वैधकर्मप्रवृत्त्युत्तम्भकं वचः।
हितानुशासनं वाक्यं विधिरित्युच्यते बुधैः॥

१०८. विधिश्चापूर्वनियमपरिसंख्याविभागवान्।
नित्यनैमित्तिकादिभ्यस्ते पुनर्बहुधा श्रुताः॥

உதா₃ஹரணம்: — "வாயவ்யம் ஶ்வேதமாலபே₄த பூ₄திகாம:" [வாயுவை தே₃வதையாகவும், வெள்ளைப்பசுவை த்₃ரவ்யமாகவும் கொண்ட யாக₃த்தை ஐஶ்வர்யத்தை விரும்புமவன் செய்யக்கடவன்] என்பது ஒரு விதி₄வாக்கியம். இவ்விதி₄ விஷயத்தில் முயற்சி ஏற்படுவதற்காக, அருகிலுள்ள மற்றொரு வாக்கியத்தில் "வாயுர் வை க்ஷேபிஷ்டா₂ தே₃வதா" [வாயுதே₃வன் வெகுவிரைவில் ப₂லன் கொடுக்கும் தே₃வதை] என்று தொடங்கி இக்கருமத்தின் தே₃வதையைத் துதித்தது. இவ்வாக்கியம் அர்த்த₂வாத₃வாக்கியமாகும். ஒருவனுக்கு நன்மைபயக்கும் கர்மத்தைச் செய்யும்படி கட்டளையிடும் வாக்கியம் 'விதி₄' என்று அறிவாளிகளால் சொல்லப்படுகிறது. ஒருவன் விரும்புகிற ப₂லனுக்கு ஸாத₄னத்தைக் காட்டும் வாக்கியம் விதி₄ என்றும் சொல்லப்படுகிறது. உதா₃ஹரணம்: — "ஜ்யோதிஷ்டோமேந ஸ்வர்க்க₃காமோ யஜேத" [சுவர்க்கத்தை விரும்புமவன் ஜ்யோதிஷ்டோமம் என்னும் யாக₃த்தைச் செய்யக்கடவன்] என்பது சுவர்க்கமடைதலாகிற நன்மையைப் பயக்கும் கருமத்தைச் செய்யும்படி (அதை விரும்புமவனுக்குக்) கட்டளையிடுகிறது. அவன் விரும்புகிற ஸ்வர்க்க₃மாகிற புருஷார்த்த₂த்துக்கு ஜ்யோதிஷ்டோமயாக₃மே ஸாத₄னம் என்று காட்டுவதாயுமுள்ளது. ஆகவே, இது விதி₄ வாக்கியம். 71.

108. விதி₄யும், அபூர்வவிதி₄ என்றும், நியமவிதி₄ என்றும், பரிஸங்க்₂யாவிதி₄ என்றும் மூன்று பிரிவுகளுள்ளது. அவையும் நித்யவிதி₄, நைமித்திகவிதி₄, காம்யவிதி₄ என்று பலவகைப் படுகின்றன. 72.

विधिरपूर्वविधिः। इमामगृभ्णन्नित्यश्वरशनाविधिः परिसंख्याविधिः।

---

१०९. अत्र व्रीहिप्रोक्षणादिरपूर्वो विधिरुच्यते।
आचार्याभिगमादीनां विधिर्नियम उच्यते॥

---

109-*110. அபூர்வ நியம பரிஸங்க்2யாவிதி4கள் விளக்கப் படுகின்றன. விதி4யில்லாவிட்டால் எந்தக்காரியம் செய்யப் படமாட்டாதோ, அதைச்செய்யச் சொல்லுவது *அபூர்வவிதி4*. த3ர்ஶம் என்றும், பூர்ணமாஸம் என்றும் சொல்லப்படுகிற யாக3ங்களுக்குப் புரோட3ாஶம் என்கிற ஹவிஸ்ஸை உண்டு பண்ண வேண்டியதற்காக நெல்லை எடுத்து ஜலத்தால் ப்ரோக்ஷிக்க வேண்டியது என்று "வ்ரீஹிந் ப்ரோக்ஷதி" என்னும் வாக்யம் விதி4க்கிறது. இந்த விதி4 இல்லாவிட்டால் ப்ரோக்ஷணம் செய்யப்படமாட்டாது, ஆகையால் ப்ரோக்ஷணவிதி4 அபூர்வவிதி4. ஒரு கர்மத்தை இரண்டு வழியாகச் செய்வது தானாக ஏற்பட்டிருந்தால், அவைகளில் ஒருவழியாகவே அதைச்செய்யவேண்டும் என்று சொல்லுகிற விதி4 *நியமவிதி4*. ஒருவன் அறியவேண்டிய அர்த்த2த்தை கு3ருவினிடம் போய் அறியலாம்; புஸ்தகத்தைப்பார்த்துத் தானாகவும் அறியலாம். ஆயினும் "தத்3 விஜ்ஞாநார்த்த2ம் ஸ கு3ருமேவாபி4க3ச்சே2த்" [அந்தப் பரப்3ரஹ்மத்தை அறிய அவன் கு3ருவையே அடைய வேண்டியது] என்னும் வேத3வாக்கியம் கு3ருவின் மூலமாகவே அறியவேண்டும் என்று விதி4க்கிறது. ஆகையால் இது நியம விதி4. இந்நியமவிதி4யில் ஒரு மனிதன் ஒருவித4மான காரி யத்தையே செய்யலாம். இரண்டையும் ஒருவனே செய்ய வேண்டியதில்லை; அதாவது:—ஒருவன் ப்3ரஹ்மஜ்ஞானத்தைப் புத்தகத்தைப்பார்த்து அடையலாம். அல்லது கு3ருவினிட மிருந்தும் அடையலாம். இரண்டு வழியையும் ஒருவனே அனுஷ்டி2க்கவேண்டிய அவசியமில்லை. இப்படி இரண்டு வழிகள் பாக்ஷிகமாக அனுஷ்டி2க்கத்தக்கதாய் இருக்கும் ஸ்தலங் களில், கு3ருவினிடமிருந்தே ஞானத்தைப்பெறவேணும் என்பது போலே ஒரு வழியையே நிர்ப3ந்தி4த்து விதி4க்கும் விதி4 நியம விதி4யாகும். இப்படியல்லாமல் இரண்டு காரியங்களை ஒருவனே

गुर्वभिगमनादिविधिर्नियमविधिः ॥ ७३ ॥ सन्ध्योपासनादिविधिर्नित्य-

११०. परिसंख्याविधिस्त्वश्वरशनाविधिरिष्यते ।
स्नानसन्ध्योपासनादिविधिर्नित्यविधिस्स्मृतः ॥

அனுஷ்டி₂க்கத்தக்கதாயிருக்கும் இடங்களிலே ஒரு காரியத்தையே செய்யலாம்; மற்றொரு காரியத்தைச் செய்யலாகாது என்று விதி₄க்கும் விதி₄ பரிஸங்க்₂யாவிதி₄யாகும். ஒரு யாக₃த்துக்கு உபகரணமொன்றைச் செய்வதற்கு மண்ணெடுக்க, குதிரையும், கோவேறுக்கழுதையும் பூட்டிய வண்டியிலே அத்₄வர்யு செல்லுகிறான். அப்போது "இமாமக்₃ருப்₄ணந் ரஶநாம்" என்று தொடங்கும் மந்திரத்தை உச்சரித்துக்கொண்டு கடிவாளக்கயிறைப் பிடிக்கவேண்டும். இங்கு விஶேஷமான விதி₄யில்லாவிடில். குதிரையின் கடிவாளக்கயிற்றைப் பிடிக்கும் போதும், கழுதையின் கடிவாளக்கயிற்றைப் பிடிக்கும்போதும் இம்மந்திரத்தை உச்சரிக்கவேண்டும் என்றே தேறி நிற்கும். ஆனால் குதிரையின் கடிவாளக் கயிற்றைப் பிடிக்கும்போதே இம்மந்திரத்தை உச்சரிக்கவேண்டுமென்று விதி₄வாக்கியம் விதி₄க்கிறது. இவ்விதி₄யில்லாவிடில் இரண்டு கடிவாளத்தைப் பிடிக்கும்போதும் மந்திரோச்சாரணம் வேண்டுமென்றே தேறி நிற்கும். இவ்விதி₄யிருப்பதனால் குதிரையின் கடிவாளத்தைப் பிடிக்கும்போதே மந்திரோச்சாரணம் செய்யவேண்டும்; கழுதையின் கடிவாளத்தைப் பிடிக்கும்போது மந்திரபட₂னமில்லை என்று ஸித்₃தி₄க்கிறது. இப்படி, ஒருவனே சேர்ந்து செய்யக்கூடிய இரண்டு காரியங்களில் ஒன்றைத்தள்ளி மற்றொன்றை விதி₄ப்பது பரிஸங்க்₂யாவிதி₄யாகும். 73.

110*-111. நித்ய நைமித்திக காம்யவிதி₄கள் விளக்கப்படுகின்றன. தினந்தோறும் செய்யவேண்டியதான ஸ்நாநம் ஸந்த்₄யாவந்த₃னம் முதலானவற்றை விதி₄க்கும் வாக்கியம் நித்யவிதி₄யெனப்படும். நித்யவிதி₄யால் விதி₄க்கப்பட்டதைக் கட்டாயம் செய்யவேண்டும். செய்யாவிட்டால் தோ₃ஷமுண்டாகும்: செய்வதனால் தனிப்ப₂லனில்லை. ஒரு நிமித்த

विधिः। जातेष्ट्यादिविधिः नैमित्तिकविधिः। ज्योतिष्टोमादिविधिः काम्यविधिः॥ ७४॥

---

१११. जातेष्ट्यादिविधिश्चात्र नैमित्तिक उदाहृतः।
ज्योतिष्टोमादिविधय उच्यन्ते काम्यनामतः॥

११२. अपूर्वोऽत्यन्तमप्राप्ते पाक्षिके नियमो विधिः।
एकत्रान्यत्र च प्राप्तौ परिसंख्याविधिर्मतः॥

---

முண்டானால் செய்யவேண்டிய கர்மத்தை விதி₄ப்பது நைமித்திகவிதி₄. உதா₃ஹரணம், — தினந்தோறும் அக்₃னி ஹோத்ரம் என்னும் கர்மத்தைப் பண்ணிக்கொண்டு வருகிற வனுக்கு ஒரு பிள்ளைக்குழந்தை பிறந்தால், அப்போது ஒரு ‘இஷ்டி’ (ஒருவகையாக₃ம்) செய்யவேண்டும் என்று ஒரு வாக்கியம் விதி₄க்கிறது, பிள்ளை பிறக்காவிட்டால் இதைச் செய்யவேண்டியதில்லை. பிள்ளை பிறப்பதாகிற நிமித்தத்தை ஒட்டி வருவது இக்காரியம். ஆகவே இதை விதி₄க்கும் விதி₄ நைமித்திக விதி₁யாகும். இதுவும் நித்யகர்மத்தைப்போலே கட்டாயம் செய்யப்படவேண்டியது. செய்யாவிட்டால் ப்ரத்யவாயம் (தோ₃ஷம்) வரும். ஓர் இஷ்டத்தைப் பெறு வதற்காக ஒரு காரியத்தைச் செய்யவேண்டுமென்று விதி₄க்கும் விதி₄ காம்யவிதி₄யாகும். “ஜ்யோதிஷ்டோமேந ஸ்வர்க்க₃காமோ யஜேத” [சுவர்க்கத்தை விரும்புமவன் ஜ்யோதிஷ்டோமம் என்னும் யாக₃த்தைச் செய்யக்கடவன்] என்னும் விதி₄ இத் தகைய காம்யவிதி₄யாகும். சுவர்க்க₃ப₂லத்தில் ஆசையிருந் தாலேயே இந்த விதி₄ப்படி ஜ்யோதிஷ்டோமயாக₃த்தை அனுஷ்டி₂க்கவேண்டிய நிர்ப்ப₃ந்த₄ம். ஆசையில்லாவிட்டால் செய்யவேண்டியதில்லை. ஆசையுடன் செய்தால் பயனுண்டு. செய்யாவிட்டால் ப₂லனில்லை; தோ₃ஷமுமில்லை. 74.

112. அபூர்வ நியம பரிஸங்க்₂யா விதி₄களுக்குள்ள வேறு பாடு விவரித்துக்காட்டப்படுகிறது. வேறு ப்ரமாணங்களால் அடியோடு கிடைக்கப்பெறுத காரியங்களை விதி₄க்கும் விதி₄

एवं विध्यर्थवादमन्त्रात्मकस्य वेदस्य छन्दः, कल्पः, शिक्षा, निरुक्तम्, ज्यौतिषम्, व्याकरणमित्येतान्यङ्गानि। छन्दोऽनुष्टुप् त्रिष्टुबादिप्रतिपादनरूपम्। श्रौतस्मार्तप्रयोगप्रतिपादनपरः कल्पः। शिक्षा

---

११३. शिक्षा कल्पो निरुक्तं च ज्यौतिषं व्याकृतिस्तथा।
छन्दश्चेत्यङ्गषट्कं च वेदस्योक्तं मनीषिभिः॥

---

அபூர்வவிதி$_4$யாகிறது. விதி$_4$யில்லாவிடில் அடியோடு கிடைக்கப் பெருத வ்ரீஹிப்ரோக்ஷணத்தை விதி$_4$க்கும் விதி$_4$ அபூர்வவிதி$_4$. "இதைச்செய்யலாம்; அல்லது அதைச்செய்யலாம்" என்று பாக்ஷிகமாக உள்ள இடங்களில் இரண்டில் ஒன்றையே செய்யவேண்டும் என்று விதி$_4$க்கும் வாக்கியம் நியமவிதி$_4$. "ஞானத்தைப் புத்தகத்திலிருந்து அடையலாம்: *அல்லது* கு$_3$ருவினிடமிருந்து அடையலாம்" என்று இரண்டுவித$_4$மாக ஏற்பட்டிருக்கும்போது, 'கு$_3$ருவினிடமிருந்தே அறியவேண்டும்' என்று விதி$_4$ப்பது நியமவிதி$_4$. "இதையும் செய்யலாம்; அதையும் செய்யலாம்" என்று இரண்டும் ஒருவனுலேயே செய்யக்கூடியதாயிருக்கும்போது, ஒன்றைத் தள்ளி ஒன்றை விதி$_4$க்கும் வாக்கியம் பரிஸங்க்$_2$யாவிதி$_4$யாகும். குதிரையின் கடிவாளக்கயிற்றைப் பிடிக்கும்போதும், கழுதையின் கடிவாளக்கயிற்றைப் பிடிக்கும்போதும் மந்திரோச்சோரணம் செய்யக்கூடியதாயிருக்கும்போது, 'குதிரையின் கயிற்றைப் பிடிக்கும்போதே மந்திரோச்சாரணம் செய்யவேண்டும்' என்று விதி$_4$ப்பது பரிஸங்க்$_2$யாவிதி$_4$யாகும். *

113-116. வேதா$_3$ங்க$_3$ங்கள் விவரிக்கப்படுகின்றன. *ஶிக்ஷா*, கல்பம், நிருக்தம், ஜ்யோதிஷம், வியாகரணம், ச$_2$ந்த$_3$ஸ்ஸு என்னும் ஆறும் வேதா$_3$ங்க$_3$ங்கள் எனப்படுகின்றன. வேத$_3$ வாக்கியங்களின் வர்ணங்கள் (அக்ஷரங்கள்), உதா$_3$த்தம் முதலான ஸ்வரங்கள் முதலானவற்றை நிர்ணயிக்கும் சாஸ்திரம் *ஶிக்ஷை* எனப்படும். வேத$_3$த்தில் சொல்லப்படும் கருமங்களைச் செய்யும் வித$_4$த்தைத் தெரிவிக்கும் சாஸ்திரம் *கல்பம்* ஆகும்.

वर्णनिर्णयात्मिका। निरुक्तं (खा) अपूर्वार्थप्रतिपादकम्। ज्योतिषं अध्ययनतदर्थानुष्ठानकालनिर्णायकम्। व्याकरणं तु सुशब्दस्वरादिसमर्थनपरम्॥७५॥ एवं साङ्गस्य वेदस्य प्रामाण्यं सिद्धम्॥७६॥

---

११४. शिक्षा वर्णस्वरादीनां निर्णयाय प्रवर्तते।
कल्पः श्रौताद्यनुष्ठानप्रक्रियाप्रतिपादकः॥

११५. निरुक्तं चापूर्ववेदशब्दार्थप्रतिपादकम्।
कर्मानुष्ठानकालस्य सूचकं ज्योतिषं तथा॥

११६. सुशब्दादिप्रबोधाय प्रवृत्ता व्याकृतिस्तथा।
छन्दोऽनुष्टुप्त्रिष्टुबादिस्वरूपप्रतिपादकम्॥

---

வேத₃த்திலுள்ள அருமையான—(பொருளுணர அரிய)—சொற்களுக்குப் பொருளை விவரிக்கும் சாஸ்திரம் *நிருக்தம்*. கருமங்களை அநுஷ்டி₂க்கத்தக்க காலத்தைக் காட்டித்தருவது *ஜ்யோதிஷ* சாஸ்திரம். வேத₃ாத்₄யயனம் செய்யவேண்டிய காலத்தையும் இது காட்டித்தரும். நல்ல *ஶப்₃த₃*ங்கள் எவையென்றும், அவைகளுக்கு ஸ்வரங்கள் எவையென்றும் அறிவிக்கிற சாஸ்திரம் *வ்யாகரணம்* ஆகும். வேத₃த்திலுள்ள ருக்குகளுக்கு எவ்வளவு அடிகளிருக்கவேண்டும். ஒவ்வோரடியிலும் எவ்வளவு எழுத்துக்களிருக்கவேண்டும் என்று உணர்த்தும் சாஸ்திரம் '*ச₂ந்த₃ஸ்*' என்னும் அங்க₃மாகிறது. இதில் அநுஷ்டுப், த்ரிஷ்டுப் முதலான ச₂ந்த₃ஸ்ஸுக்களின் ஸ்வரூபம் விவரிக்கப்படுகிறது. மந்திரம் நாலு அடிகள் உள்ளதாய், ஒவ்வோரடியிலும் எட்டு எழுத்துக்கள் கொண்டதாயிருந்தால் அம்மந்திரத்திற்குச் ச₂ந்த₃ஸ்ஸு 'அநுஷ்டுப்' எனப்படும். மந்திரம் நாலுஅடிகள் கொண்டதாய், ஒவ்வொரு அடியிலும் பதினொரு எழுத்துக்கள் கொண்டதாயிருந்தால் அம்மந்திரத்திற்குச் ச₂ந்த₃ஸ்ஸு 'த்ரிஷ்டுப்' எனப்படும். இப்படி ச₂ந்த₃ஸ்ஸுக்களின் தன்மையைச் சொல்லுகிற சாஸ்திரம் ''ச₂ந்த₃ஸ்ஸு'' என்னும் வேத₃ாங்க₃மாகும். ஆக, வேத₃ாங்க₃ங்கள் ஆறும் விவரிக்கப்பட்டன. 75.

अथ श्रुत्यविरुद्धाचारव्यवहारप्रायश्चित्तादिप्रतिपादिका आप्तप्रणीता स्मृतिः प्रमाणम् ॥ ७७ ॥ हिरण्यगर्भादीनामाप्तत्वेऽपि तेषां गुणत्रयवश्यत्वसंभवात् तत्कर्तृकयोगकपिलादिस्मृतीनां मन्वादिस्मृत्यविरुद्धांशा एव प्रमाणम्। तत्त्वविपर्यासादिविरुद्धांशा न प्रमाणम् ॥ ७८ ॥

---

*११७. एवं साङ्गस्य वेदस्य प्रामाण्यं स्थापितं दृढम्।
११७*. स्मृतिः प्रमाणमाप्तोक्ता वेदोक्तार्थाविरोधिनी ॥
११८. श्रुतेर्विरुद्धाऽनाप्तोक्ता प्रमाणं न क्वचित्स्मृतिः।
न मानं कापिली वाक् स्यान्मन्वाद्युक्तिविरोधतः ॥

---

*117. இப்படிப்பட்ட அங்க₃ங்களோடு கூடிய வேத₃த்திற்கு இந்த ப்ரகரணத்தின் தொடக்கத்தில் காட்டப்பட்ட ரீதியில் முன்னோர்களால் ப்ராமாண்யம் உறுதியாக நிலைநாட்டப் பட்டிருக்கிறது. "ஆப்தனல்லாதவனால் சொல்லப்படாததாய், ஶாப்₃த₃ஜ்ஞானத்துக்குக் காரணமாயிருப்பது" என்னும் ஶப்₃த₃ ப்ரமாணலக்ஷணம் வேத₃த்திற்கும் அங்க₃ங்களுக்கும் பொருந்துமன்றோ. 76.

117*. இனி, மற்ற நூல்களின் ப்ராமாண்யம் ஆராயப் படுகிறது. மநு முதலான ஆப்தர்களால் இயற்றப்பட்டதாய், வேத₃முரைத்த அர்த்த₂ங்களுக்கு முரணான அர்த்த₂ங்களைச் சொல்லாததாய், ஆசாரம், வ்யவஹாரம், ப்ராயஶ்சித்தம் ஆகியவற்றைக் கூறுவதான ஸ்ம்ருதிகள் ப்ரமாணம். 77.

118. வேத₃த்துக்கு விருத்₃த₄மானதாய், ஆப்தரல்லாதவர்களால் சொல்லப்பட்டதான ஸ்ம்ருதி ஓரிடத்திலும் ப்ரமாணமன்று. வேத₃த்துக்கும், மனு முதலான மஹரிஷிகள் பலரின் வாக்குகளுக்கும் விருத்₃த₄மாயிருப்பதால் ஆப்தரான ஹிரண்யக₃ர்ப்ப₄ரால் இயற்றப்பட்ட யோக₃ஸ்ம்ருதியும் கபிலரின் வாக்கான காபிலஸ்ம்ருதியும் முழுவதும் ப்ரமாணமன்று. அவர்களும் முக்குணங்களுக்கு வசப்படக்கூடியவர்களேயன்றோ. அவர்களுடைய நூல்களிலும் வேத₃த்திற்கு முரணல்லாத அம்ஶங்கள் ப்ரமாணமே. 78.

वेदोपबृंहणरूपेतिहासपुराणयोरपि प्रामाण्यं स्वतस्सिद्धम्। तत्र भारतरामायणयोः क्वचित्क्वचिद्विरोधभानेऽपि तत्त्वांशे वेदान्तवाक्यवद्-विरोधो नेयः। सर्गादिपञ्चकप्रतिपादकपुराणेष्वपि सात्त्विकराजस-

---

११९. वेदोपबृंहणात्मत्वादितिहासपुराणयोः।
प्रामाण्यं सुस्थितं नैव तामसानां प्रमाणता॥

---

119. "இதிஹாஸ புராணாப்₄யாம் வேத₃ம் ஸமுபப்₃ரும்ஹயேத்।
பி₃பே₄த்யல்பஶ்ருதாத் வேதோ₃ா மாமயம் ப்ரதரிஷ்யதி॥"

[இதிஹாஸபுராணங்களைக்கொண்டு வேத₃த்தை உபப்₃ரும்ஹணம் (விளக்கம்) செய்யவேண்டியது. 'எனக்கு இவன் அவப்பொருள் கூறிவிடுவானோ' என்று (இதிஹாஸபுராணமறியாத) அற்ப பு₃த்₃தி₄க்காரனைக் கண்டு வேத₃ம் ப₄யப்படுகிறது] என்கிற படியே வேத₃த்தை விளக்கவந்தவையாகையாலே இதிஹாஸ புராணங்களின் ப்ராமாண்யம் நன்கு நிலைநிறுத்தப்பட்டுள்ளது. இவற்றுள் ஸ்ரீராமாயணமும், மஹாப₄ாரதமும் இதிஹாஸங்கள். 1. ஸ்ருஷ்டி, 2. ப்ரளயம், 3. வம்ஶங்கள், 4. மந்வந்தரங்கள், 5. வம்ஶசரிதங்கள் ஆகிய ஐந்து விஷயங்களை விளக்கும் விஷ்ணுபுராணம் முதலான பதினெட்டு புராணங்களும் உப புராணங்களும் புராணங்களாகும். இதிஹாஸங்கள் முழுவதும் ப்ரமாணம். அவற்றிடையே சிலவிடங்களில் மேலெழத்தோன்றும் விரோத₄ங்களை, வேத₃த்திற்போலே ந்யாயஸஞ்சாரம் செய்து அவிருத்₃த₄மாக நிர்வஹிக்கவேணும்.

"யஸ்மிந் கல்பே து யத் ப்ரோக்தம் புராணம் ப்₃ரஹ்மணா புரா।
தஸ்ய தஸ்ய து மாஹாத்ம்யம் தத்ஸ்வரூபேண வர்ண்யதே॥
அக்₃நே: ஶிவஸ்ய மாஹாத்ம்யம் தாமஸேஷு ப்ரகீர்த்திதம்।
ஸங்கீர்ணேஷு ஸரஸ்வத்யா: பித்ருணாம் ச நிக₃த்₃யதே॥
ராஜஸேஷு ச மாஹாத்ம்யமதி₄கம் ப்₃ரஹ்மணோ விது₃:।
ஸாத்விகேஷ்வத₂ கல்பேஷு மாஹாத்ம்யமதி₄கம் ஹரே:॥
தேஷ்வேவ யோக₃ஸம்ஸித்₃தா₄ா க₃மிஷ்யந்தி பராம் க₃திம்॥"

[முற்காலத்தில் பிரமனால் எந்தக் காலத்தில் எந்தப் புராணம் சொல்லப்பட்டதோ அந்தந்தப் புராணத்தின் பெருமை அந்தந்த

तामसभेदभिन्नेषु तत्त्वांशे (विरोधाभावात्) विरुद्धांशो न प्रमाणम्, अन्यत्सर्वं प्रमाणम्। पाशुपताद्यागमा अपि तथैव॥ ७९॥

आगमदिव्यतन्त्रतन्त्रान्तरसिद्धान्तभेदभिन्नस्य श्रीपाञ्चरात्रागमस्य क्वचिदपि वेदविरोधाभावात् कात्स्न्र्येन प्रामाण्यम्। एवम्, वैखान-

---

१२०. वेदाविरुद्धकृत्स्नांशः सिद्धान्तैरागमादिभिः।
चतुर्भिस्सहितो मानं पञ्चरात्राख्य आगमः॥

---

வித4மாகச் சொல்லப்படுகிறது. தாமஸகாலங்களில் அக்3னியுடையவும், ஶிவனுடையவும் பெருமை பேசப்படுகிறது. ஸத்வரஜஸ்தமோகு3ணங்கள் கலந்த ஸங்கீர்ணகாலங்களில் ஸரஸ்வதியினுடையவும், பித்ருக்களுடையவும் பெருமை சொல்லப்படுகிறது. ராஜஸகாலங்களில் பிரமனின் பெருமை மிகுதியாகச்சொல்லப்படுவதாக அறிகிறார்கள். ஸாத்விககாலங்களில் ஹரியின் பெருமை மிகுதியாகப் பேசப்படுகிறது. அவற்றிலேயே யோக3ஸித்3தி4யடைந்தவர்கள் மேலான க3தியை அடைகின்றனர்] என்று மாத்ஸ்ய புராணத்திலே புராணங்களை ஸாத்விகம், ராஜஸம், தாமஸம் என்று மூன்று பிரிவாகப் பிரித்திருக்கையால் விபரீதார்த்த2த்தைச் சொல்லும் தாமஸபுராணங்கள் ப்ரமாணமன்று. கீழெடுத்த மாத்ஸ்யபுராணவசனத்தைக்கொண்டு பார்க்கும்போது, அக்3னியுடையவும் ஶிவனுடையவும் பெருமைகளைச் சொல்லும் புராணங்கள் தாமஸமாகையாலே பெரும்பாலும் ப்ரமாணமன்று என விளங்கும். இவற்றிலும் சில அம்ஶங்கள் வேத3த்திற்கு விருத்3த4மல்லாததாயிருந்தால் அவை ப்ரமாணமாகும். பாஶுபதம் முதலிய தாமஸமான ஶைவாக3மங்கள் விஷயத்திலும் இப்படியே கொள்ளவேணும். 79.

120-121. ஆக3ம ஸித்3தா4ந்தம், தி3வ்ய ஸித்3தா4ந்தம், தந்த்ரஸித்3தா4ந்தம், தந்த்ராந்தரஸித்3தா4ந்தம் என்கிற நான்கு வகைப்பட்ட பாஞ்சராத்ரத்தில் ஓரிடத்திலும் வேத3விரோத4மில்லாமையால் அவ்வாக3மம் முழுவதும் ப்ரமாணம். வைக2ானஸாக3மமும் இவ்வண்ணமாகவே முழுவதும் ப்ரமாணம். ப4ர

सागमस्यापि। धर्मशास्त्राणामपि तथैव। शाण्डिल्यपराशरभरद्वाज-वसिष्ठहारीतादयो धर्मशास्त्रप्रणेतारः॥ ८०॥

शिल्पायुर्वेदगान्धर्वभरतागमादिकमप्युपयुक्तांशे तथैव। शिल्पो-नाम कर्षणादिगोपुरप्राकारादिनिर्माणप्रतिपादकः। आयुर्वेदो वैद्यकम्। गान्धर्वो गानादिनिरूपकः। भरतागमो नृत्तादिविधायकः। पुनश्चतु-ष्षष्टिकलारूपेषु शास्त्रेषु तत्त्वोपायपुरुषार्थोपयुक्तानि प्रमाणानि॥ ८१॥

---

१२१. वैखानसागमोऽप्येवं प्रमाणं परमर्षिभिः।
कृतानि धर्मशास्त्राणि भरद्वाजादिभिस्तथा॥
१२२. शिल्पायुर्वेदगान्धर्वभरतादिनयेष्वपि।
वेदाविरुद्धो युक्तांशः प्रमाणं स्यान्न संशयः॥
१२३. शिल्प आलयनिर्माणप्रकारप्रतिपादकः।
आयुर्वेदो वैद्यशास्त्रमौषधप्रतिबोधकम्॥
१२४. गान्धर्वो गानशास्त्रं स्यात् भरतो नृत्तबोधकः।
चतुष्षष्टिकलास्वेवमाम्नायस्याविरोधिनः॥

---

த்₃வாஜர், பராஶரர், வஸிஷ்ட₂ர், ஹாரீதர் முதலானவர்களால் இயற்றப்பட்ட த₄ர்மஶாஸ்த்ரங்களும் இவ்வண்ணமாகவே முழுவதும் ப்ரமாணம். 80.

122-*125. ஸில்பம், ஆயுர்வேத₃ம், கா₃ந்த₄ர்வம் ப₄ரதம் முதலானவைகளிலும் வேத₃விருத்₃த₄மல்லாத. வேத₃த்தோடு பொருந்தியிருக்கும் பா₄க₃ங்கள் ப்ரமாணங்கள். ஸில்பமாவது— ஆலய நிர்மாணத்திற்காக பூ₄மியை உழுவதிலிருந்து தொடங்கி, கோ₃புரம், மதிள் ஈருக நிருமிக்கும் முறையைச் சொல்லுவது. ஆயுர்வேத₃ம் வைத்திய சாஸ்திரமாகும். அது வியாதி₄தீர மருந்துகளைச் சொல்லுவது. ஸங்கீ₃தசாஸ்திரம் கா₃ந்த₄ர்வமெனப்படும். நாட்டிய சாஸ்திரம் ப₄ரதமெனப்படும். இவ்வண்ணமாகவே அறுபத்துநாலு கலைகளிலும் வேத₃த்தோடு விரோதி₄யாமல் தத்வஹித புருஷார்த்த₂ங்களுக்கு உபயோகி₃யாயிருக்கும் அம்ஶங்களுக்கு ப்ராமாண்யமுண்டு. 81.

वकुलाभरणादिदिव्यसूरिश्रीसूक्तयः कार्त्स्न्येन प्रमाणतराः। श्रीमद्रामानुजाचार्यप्रभृतिभिः प्रणीता श्रीभाष्यादिप्रबन्धाः प्रमाणतमाः ॥ ८२ ॥ पुरुषस्वातन्त्र्याधीनरचनाविशेषविशिष्टं पौरुषेयम्। एतेन काव्यनाटकालङ्कारादीनामपि लक्षणमुक्तं स्यात् ॥ ८३ ॥

---

१२५. तत्त्वोपायपुमर्थोपयुक्तांशस्य प्रमाणता।
शठारिमुखसूरीन्द्रगाथाप्रामाण्यमक्षतम् ॥
१२६. नाथयामुनसौमित्रिमुनिश्रीदेशिकोक्तयः।
वेदवेदान्तसारार्थास्स्युः प्रमाणतमा भुवि ॥
१२७. आकाङ्क्षायोग्यताऽऽसत्तियुक्ताऽऽप्तवचनानि च।
प्रमाणान्यविरुद्धानि पौरुषेयाणि नान्यथा ॥

---

125*-126. நம்மாழ்வார், பெரியாழ்வார் முதலான ஆழ்வார்களருளிய திருவாய்மொழி திருமொழி முதலான நாலாயிர தி₃வ்யப்ரப₃ந்த₄ங்கள் முழுவதும் மிகச்சிறந்த ப்ராமாண்யத்தை உடையவை. ஸ்ரீநாத₃முனி, ஸ்ரீயாமுநமுனி, ஸ்ரீராமாநுஜமுனி, நம்பிள்ளை, பெரியவாச்சான்பிள்ளை, ஸ்ரீதேசிகன், மாமுனிகள் முதலிய ஆசார்யர்களின் ஸ்ரீ ப₄ாஷ்யம் முதலான ஸ்ரீ ஸூக்திகளும், வேத₃வேதா₃ந்த விழுப்பொருளாகையால் இவ்வுலகில் ப்ரமாணங்களுள் மிகமிகச் சிறந்தவையாகும். 82.

/ ப₃த்₃த₄ஜீவர்களுடைய ஸ்வதந்த்ரமான பு₃த்₃தி₄யால் இயற்றப்பட்டதான நூல்கள் பௌருஷேயமான நூல்கள் எனப்படுகின்றன. காவ்யம், நாடகம், அலங்காரம் முதலான நூல்களுக்கு இதுவே லக்ஷணமாகும். 83.

127-*129. இப்படியே, ஆப்தனால் சொல்லப்பட்டவையாய், ஆகாங்க்ஷை, யோக்₃யதை ஆஸத்தி (ஸந்நிதி₄) ஆகிய இவைகளுடன் கூடியிருப்பவையாய், மற்ற ப்ரமாணங்களுக்கு விருத்₃த₄மல்லாதவையாய், லௌகிகபுருஷர்களால் சொல்லப்பட்டவையான வாக்கியங்களும் ப்ரமாணங்கள். உதா₃ஹரணம்:- "நதி₃க்கரையில் ஐந்து பழங்கள் உள்ளன" என்று ஆப்த

एवमाप्तेनोच्चारितान्याकांक्षायोग्यतासन्निधिमल्लौकिकवाक्यान्यपि प्रमाणानि। यथा नद्यास्तीरे पञ्च फलानि सन्तीत्यादीनि ॥ ८४ ॥

१२८. पदान्तरस्य याऽपेक्षा पदस्य स्वान्वयाय सा।
आकाङ्क्षोक्ताऽबाधितत्वमर्थानां योग्यता मता ॥
१२९. आसत्तिरविलम्बेन पदोच्चारणमिष्यते ॥
वैदिकं लौकिकं वाक्यं प्रत्येकं द्विविधं मतम् ॥

ஒருவன் சொல்லும் வாக்கியம். ஒரு பத₃ம் தான் அந்வயிக்கும்பொருட்டு மற்ருெரு பத₂த்தை அபேக்ஷிக்கிறதென்பது யாதொன்று உண்டோ, அது ஆகாங்க்ஷை எனப்படும். உதாரணம்:—“குடத்தைக் கொண்டுவா”என்னும் வாக்கியத்தில் “குடத்தை” என்னும் பத₂மும், “கொண்டுவா” என்னும் பத₃மும் தனித்தனியேயிருக்கும்போது ஒன்று மற்ருென்றை அபேக்ஷித்து நிற்கின்றன. இதுவே ஆகாங்க்ஷையாகும். வாக்கியத்தில் சொல்லப்படும் அர்த்த₂ங்கள் பா₃தி₄க்கப்படாமலிருப்பது யோக்₃யதை எனப்படும். உதாரணம்: — “நீரினுல் நனைக்கிருன்” என்னும் வாக்கியப்பொருள் மற்ற ப்ரமாணங்களால் பா₃தி₄க்கப்படாமலிருப்பதால் இவ்வாக்கியம் யோக்₃யதையுள்ளது. “நெருப்பினுல் நனைக்கிருன்” என்ற வாக்கியத்தில் சொல்லப்படும் அர்த்த₂ம் ப்ரத்யக்ஷத்தினுல் பா₃தி₄க்கப்படுவதால் யோக்₃யதையில்லாத வாக்யம். ஆகையால் இது ப்ரமாணமன்று. பத₃ங்களைத் தாமதமில்லாமல் சொல்லுவதே ஸந்நிதி₄ அல்லது ஆஸத்தி எனப்படும். உதாரணம் :—“கதவை மூடு” என்னும் வாக்கியத்தில் “கதவை” என்னும் பத₃த்தைச் சொல்லி ஒரு நாழிகை கழித்து “மூடு” என்னும் பத₃த்தைச் சொன்னுல் பொருளறிவு ஏற்படாது. ஏனெனில்: ஸந்நிதி₄யில்லை. இவ்விரண்டு பத₃ங்களையும் அடுத்தடுத்துத் தாமதமில்லாமல் சொன்னுல் பொருளறிவு ஏற்படுகிறது. ஆகையால் ஆகாங்க்ஷை. யோக்₃யதை. ஆஸத்தி என்னும் மூன்றும் இருந்தால்தான் வாக்கியமாகும். அது ஆப்தனுல் சொல்லப்பட்டதானுல் ப்ரமாணமாகிறது. 84.

एवं वैदिकलौकिकसाधारणं वाक्यं द्विविधं, मुख्यवृत्तिगौणवृत्तिभेदात्॥८५॥ मुख्यवृत्तिरभिधावृत्तिः। यथा सिंहशब्दस्य मृगेन्द्रे।

---

१३०. मुख्यवृत्तिकमेकं स्यादपरं गौणवृत्तिकम्।
सा मुख्यवृत्तिरभिधावृत्तिरित्यभिधीयते॥

१३१. शब्दस्य यत्र वाच्यार्थबोधकत्वं न बाध्यते।
तत्राभिधारूपमुख्यवृत्तिरित्युच्यते बुधैः॥

---

129*-*130. ப்ரமாண வாக்கியங்கள் லௌகிகம் என்றும், வைதி₃கம் என்றும் இருவகைப்படும். உலகத்தாரால் பிரயோகி₃க்கப்படுவது லௌகிகம். வேத₃த்தில் காணப்படுவது வைதி₃கம். இப்படி இருவகைப்பட்ட வாக்கியங்களும், மற்றொரு வித₄மாகவும் இருவகைப்படும்; — முக்கிய விருத்தியுள்ளது என்பது முதல்வகை; கௌ₃ணவிருத்தியுள்ளது என்பது இரண்டாவது வகை. சில வாக்கியங்களில் சொற்களுக்கு முக்கியமான பொருள் சொல்லப்படுகிறது. இவ்வகை வாக்கியம் முக்கியவிருத்தி உள்ளதாகும். சில வாக்கியங்களில் சொற்கள்—முக்கியமான பொருள் பொருந்தாமையால் அந்தப் பொருள்களுடன் ஸம்ப₃ந்த₄ப்பட்ட வேறு பொருள்களைக் காட்டுகின்றன. இவ்வகை வாக்கியம் கௌ₃ணவிருத்தி உள்ளதாகும். 85.

130*-*132. முக்கியவிருத்தி என்பது அபி₄தா₄விருத்தி என்றும் சொல்லப்படுகிறது. சொற்களுக்கு நேரேயுள்ள பொருள் பா₃தி₄க்கப்படாவிடில், அவ்விடத்தில் அறிவாளிகள் அபி₄தா₄விருத்தி என்னும் முக்கியவிருத்தி என்று கூறுகின்றனர். உதாரணம், — ‘ ஸிம்ஹம் ’ என்னும் சொல் மிருக₃ராஜனை சிங்கத்தைச் சொல்லும்போது முக்கியவிருத்தி என்றும், அபி₄தா₄விருத்தி என்றும் சொல்லப்படுகிறது. ‘விருத்தி’ என்பது, ஒரு சொல் ஒரு பொருளைச் சொல்லும் வியாபாரம் அல்லது ஶக்தி. இந்த முக்கிய விருத்தியானது யோக₃ம் என்றும், ரூடி₄ என்றும் யோக₃ரூடி₄ என்றும் பலவகைப்படும். ஒருசொல்லின் பகுதி

साऽभिधावृत्तिः योगरूढ्यादिभेदेन बहुविधा ॥ ८६ ॥ मुख्यार्थबाधे

---

१३२. योगरूढ्यादिभेदेनाऽभिधावृत्तिश्च नैकधा।
वाच्यासन्ने वृत्तिरौपचारिकी मुख्यबाधिते ॥

---

யின் அர்த்த₂த்தையும், விகுதியின் அர்த்த₂த்தையும் கொண்டு ஒருசொல் பொருளைத் தெரிவிக்கும்போது அதற்கு யோக₃ம் என்று பெயர். உதாரணம்:—'பாசகன்' என்கிற சொல். 'பச்' என்கிற தா₄துவுக்குப் பாகம்' (சமையல் செய்வது) என்பதும், 'அக' என்கிற ப்ரத்யயத்திற்குச் செய்கிறவன் என்பதும் பொருள். ஆகையால், அப்பத₃ம் சமையல் செய்பவனைக் குறிக்கிறது. வேத₃த்திலும் "ஆகாஶம்" என்னும் பத₃ம் 'எங்கும் பிரகாஶிப்பவன்' 'எல்லாவற்றையும் பிரகாஶிக்கச் செய்பவன்' என்னும் பொருள்களில் ப₄க₃வானை யோக₃த்தால் தெரிவிக்கிறது. பகுதி விகுதிகளின் பொருளைக் கவனிக்காமல் சொல்முழுவதும் அநாதி₃ப்ரயோக₃த்தால் ஒரு குறிப்பிட்ட வஸ்துவைச் சொல்லுவது ரூடி₄யாகும். உதாரணம்;—'மண்டபம்' என்கிற சொல். இதில் பகுதிவிகுதிகளிருந்தும் அவைகளைக்கொண்டு அந்தச் சொல்லுக்குப் பொருள்கொள் வதில்லை. பிரயோக₃ங்களைக்கொண்டே பொருள் கொள்ளப் படுகிறது. அப்படியே வேத₃த்திலும் ரத₂ந்தர என்கிற சொல் ப்ரயோக₃த்தாலே ஒரு ஸாமத்தைச் சொல்லுகிறது, அதி னுடைய அவயவங்களை கவனிப்பதாலே இப்பொருள் ஏற் படவில்லை. யோக₃த்தினல் ஏற்பட்ட பல பொருள்களில் ஒன்றில் மாத்திரம் பிரயோக₃த்தைக் கட்டுப்படுத்துவது யோக₃ரூடி₄. உதாரணம்;— 'பங்கஜம்' என்கிற சொல். இது சேற்றில் உண்டாகும் பொருளைச் சொல்லுவதால்—தாமரை, குவளை முதலான பூக்களைச் சொல்லலாம்; ஆயினும், ப்ர யோக₃ப₃லத்தாலே அது தாமரையையே சொல்லுகிறது. வேத₃த்திலும் 'ப்₃ரஹ்ம' என்கிற சொல்லுக்கு 'பெரிதானது' என்பதும், 'மற்றவர்களைப் பெரிதாகப்பண்ணுவது' என்பதும் பொருள். இந்தப் பொருள் எவ்விடத்தில் பூர்ணமாக இருக்குமோ அதுதான் அதற்கு முக்கியமான பொருள். அது

सति तदासन्नेऽर्थे वृत्तिरौपचारिकी। सा द्विविधा, लक्षणागौणीभेदात्। प्रथमा यथा-गङ्गायां घोष इत्यत्राधिकरण(त्व)स्य बाधात्तीरे लक्षणा। द्वितीया यथा-सिंहो देवदत्त इत्यत्र देवदत्ते शौर्यादिगुणयोगात्॥८७॥

---

१३३. एषापि लक्षणागौणीभेदाच्च द्विविधा भवेत्।
गङ्गायां घोष इत्यत्र बाधात्तीरेऽस्ति लक्षणा॥

१३४. सिंहो राजेत्यत्र राज्ञि गौणी शौर्यादियोगतः।
वैदिकं लौकिकं सर्वं वाक्यजातं च सर्वदा॥

---

பரமபுருஷனே. ஆகையால் ப்3ரஹ்மஶப்3த3ம் பரமபுருஷனை யோக3ரூடி4யால் சொல்லுகிறது. 86.

132*-*134. முக்கியவிருத்தி எவ்விடத்தில் பா3தி4க்கப்படுகிறதோ, அவ்விடத்தில் முக்கியமான பொருளோடு ஸம்ப3ந்த4ப்பட்டிருக்கும் பொருளைச் சொல்லுவது ஔபசாரிகவிருத்தி எனப்படும். அதுவும் லக்ஷணாவிருத்தி என்றும், கௌ3ணீவிருத்தி என்றும் இருவகைப்படும். உதாரணங்கள் :— 1. "க3ங்கா3யாம் கோ4ஷ:" [கங்கையில் இடைச்சேரி] என்கிறவிடத்தில் க3ங்கை3யென்னும் சொல்லுக்கு க3ங்கா3ப்ரவாஹம் முக்கியமான பொருள். அதில் இடைச்சேரி இருக்கமுடியாதாகையால், முக்கியமான பொருளைவிட்டு, ப்ரவாஹத்துக்கு அருகிலிருக்கும் கங்கைக்கரையைச் சொல்லுவதாகக் கொள்ளுகிறோம். இது லக்ஷணாவிருத்தி. 2. ":ஸிம்ஹோ ராஜா" [இந்த அரசன் சிங்கம்] என்கிறவிடத்தில் அரசன் சிங்கமல்லாதபடியால், சிங்கம் என்கிற முக்கியமான பொருளைவிட்டு, அதனிடமுள்ள ஶௌர்யம் என்னும் கு3ணத்தையுடையவன் என்கிற பொருளைக்காட்டுவதாகக் கொள்ளுகிறோம். அரசன் யுத்3த4த்தில் சூரன் என்றும், மற்றவர்களைச் சண்டையிலே வென்றிருப்பவன் என்றும் பொருள்படுகிறது. கு3ணத்தை முன்னிட்டு வருவதால் இது கௌ3ணீவிருத்தியாகும். 87.

एवं वैदिकलौकिकरूपं सर्वं वाक्यजातं सविशेषविषयकम्, भेदविषयकं च॥८८॥ शरीरवाचकशब्दानां यथा शरीरिणि पर्यवसानम्, एवं भगवच्छरीरभूतब्रह्मरुद्राग्नीन्द्रादिचिद्वाचकशब्दानां, तथा तच्छरीरभूत-प्रकृतिकालाकाशप्राणाद्यचिद्वाचकशब्दानां च शरीरिणि परमात्मनि

१३५. विशिष्टार्थावबोधि स्यात्ततो भेदविबोधि च।
शरीरवाचकाश्शब्दाः बोधयन्ति शरीरिणम्॥

134*-*135. லௌகிகம், வைதி₃கம் என்கிற இருவகைப் பட்ட வாக்கியங்களும் எப்போதும் விஶேஷத்தோடு கூடிய வஸ்துக்களை விஷயமாக உடையவை. விஶேஷம் என்பது ஒரு வஸ்துவை மற்றொரு வஸ்துவிலிருந்து பிரித்துக்காட்டும் வஸ்து த₄ர்மம். இதற்கு விஶேஷணம் என்றும் பெயர். பிரிக்கப் பட்ட வஸ்துவுக்கு விஶேஷ்யம் என்று பெயர். விஶேஷணத் தோடு கூடிய விஶேஷ்யம் விஶிஷ்டம் எனப்படுகிறது. “நீலம் உத்பலம்” என்கிற வாக்கியத்தில் நீலம் என்கிற சொல் நீல ரூபம் என்கிற கு₃ணத்தையுடைய வஸ்துவைச் சொல்லுகிறது. அந்த கு₃ணம் விஶேஷணம்; வஸ்து விஶேஷ்யம்; உத்பலபத₃ம் குவளை ஜாதியைச் சேர்ந்த வஸ்துவைச் சொல்லுகிறது. இங்கு ஜாதி விஶேஷணம்; வஸ்து விஶேஷ்யம். விஶேஷணம் வேறு; விஶேஷ்யம் வேறு. இப்படி வெவ்வேறான விஷயங்களை அறிவிப்பதாலேயே எல்லா வாக்கியங்களும் பே₄த₃த்தையே அறிவிக்கின்றன. 88.

135*-136. எப்படி உடம்பைச் சொல்லுகிற சொற்கள் உடம்பிலுள்ள ஆத்மா வரையிலும் சொல்லுகின்றனவோ, அப்படியே ப்₃ரஹ்மா, ருத்₃ரன், இந்திரன், அக்₃னி முதலான சேதனர்களைச் சொல்லும் சொற்களும், ப்ரக்ருதி, காலம், ஆகாஶம், ப்ராணன் முதலான அசேதனங்களைச் சொல்லும் சொற்களும், அவர்களுக்கும் அவற்றுக்கும் ஆத்மாவாய், அவை களைச் சரீரமாகவுடைய ஶ்ரீமந்நாராயணன்வரை சொல்லுகின்றன. இப்படி எல்லாச் சொற்களும் பரமபுருஷன்வரை சொல்லு கின்றன என்று ஆசாரியர்கள் ப்ரமாணயுக்திகளைக்கொண்டு முடிவுகட்டியிருக்கின்றனர். வேத₃ாந்தப்பொருளை அறிவதற்கு

नारायणे पर्यवसानमुपपादयन्त्याचार्याः। वेदान्तज्ञानात् व्युत्पत्तिः पूर्यत इत्युक्तम्॥८९॥ नारायणस्य सर्वशब्दवाच्यत्वं सर्वशरीरकत्वमित्यादिकं तु उपरि ईश्वरपरिच्छेदे प्रतिपादयामः॥ इति शब्दो निरूपितः॥९०॥

इति श्रीवाधूलकुलतिलक श्रीमन्महाचार्यप्रथमदासेन श्रीनिवासदासेन विरचितायां यतीन्द्रमतदीपिकायां शारीरकपरिभाषायां शब्दनिरूपणं नाम तृतीयोऽवतारः॥

---

१३६. ततश्च चिदचिच्छब्दा ब्रह्माकाशादिका अपि।
श्रीमन्नारायणं देवं मुख्यवृत्त्या वदन्ति हि॥

१३७. हरेस्सर्वशरीरित्वं सर्वशब्दैकवाच्यता।
एवमादिप्रधानार्थान् वदिष्याम्युचितस्थले॥

॥ इति सन्मतकारिकावल्यां शब्दप्रकरणम्॥

---

முன்னல் சொற்கள் அசேதனங்களையும், அவைகளுக்குள் இருக்கிற சேதனரையும் மாத்திரமே சொல்லுகின்றன என்று எண்ணப்படுகிறது. இப்பொருள் சொற்களுக்குப் பூர்ணமான அர்த்த₂மன்று. ஏனெனில்: ஸர்வேஶ்வரனும், அசேதனமும், சேதனமும் சேர்ந்துதான் ஒரு வஸ்துவாயிருக்கின்றன. அதில் முக்கியமான பரமபுருஷனை விட்டு மற்ற இரண்டை மாத்திரம் சொன்னல் அப்பொருள் எப்படிப் பூர்ணமாகும்? வேதா₃ந்தப் பொருளை அறிந்தபின்புதான் சொற்களுக்குப் பூர்ணமாகப் பொருள் அறியப்படுகிறது. ஆகையால் சேதநாசேதனங்களைச் சொல்லும் எல்லா ஶப்₃த₃ங்களும் ஶ்ரீமந்நாராயணனை முக்கிய விருத்தியாலேயே சொல்லுகின்றன. 89.

137. ஸர்வேஶ்வரனை நாராயணன் எல்லாவற்றையும் ஶரீரமாகக் கொண்டிருக்கிறன் என்பது, எல்லா ஶப்₃த₃ங்களாலும் சொல்லப்படும் ஒரே பொருளாயிருக்கிறன் என்பது முதலான முக்கியமான அர்த்த₂ங்களை ஈஶ்வரனைப்பற்றிப்பேசும் ஈஶ்வர ப்ரகரணத்தில் சொல்லப்போகிறேம். ஆக, இவ்வளவால் ஶப்₃த₃ம் என்னும் மூன்ருவது ப்ரமாணம் நிருபிக்கப்பட்டதாயிற்று. 90.

தீ₃பிகா காரிகாவளீ விவரணத்தில் ஶப்₃த₃ப்ரகரணம் முற்றிற்று

## ॥ अथ चतुर्थोऽवतारः ॥

प्रमाणनिरूपणानन्तरं प्रमेयं निरूप्यते ॥ ९१ ॥ प्रकर्षेण मेयं प्रमेयम्। तच्च द्विविधम् द्रव्याद्रव्यभेदात्। उपादानं द्रव्यम्। अवस्थाश्रय उपादानम् ॥ ९२ ॥ ननु द्रव्य-गुण-कर्म-सामान्य-विशेष-

---

## ॥ अथ प्रकृतिप्रकरणम् ॥ ४ ॥

१३८. इत्थं त्रीणि प्रमाणानि कथितानि यथामति।
प्रमेयसप्तकं चाथ प्रकृत्यादि निरूप्यते ॥

१३९. यत् प्रमाविषयीभूतं प्रमेयं वस्तु तन्मतम्।
यत् प्रकर्षेण मेयं स्यात्तद्वा तदिति कथ्यते ॥

---

## 4. ப்ரக்ருதி ப்ரகரணம்

138. தீ₃பிகாகாரிகாவளிகளின் தொடக்கத்தில், வஸ்துக்களனைத்தும் ப்ரமாணமென்றும், ப்ரமேயமென்றும் இருவகையாகப் பிரிக்கப்பட்டன. இதுவரையில் ப்ரத்யக்ஷம், அநுமானம், ஶப்₃த₃ம் என்னும் மூன்று ப்ரமாணங்களும் விவரிக்கப்பட்டன. இனி, இப்ரமாணங்களால் அறியப்படும் ஏழு ப்ரமேயங்கள் விவரிக்கப்படுகின்றன. அவையாவன— 1. ப்ரக்ருதி, 2 காலம், 3. நித்யவிபூ₄தி, 4. த₄ர்மபூ₄தஜ்ஞாநம், 5. ஜீவன், 6. ஈஶ்வரன், 7. அத்₃ரவ்யம் என்பன. அவற்றில் முதலில் இப்ரகரணத்தில் ப்ரக்ருதியானது விளக்கப்படுகிறது. 91.

139-*140. ப்ரமேயமாவது யாதெனில்: எது ப்ரமைக்கு—(உண்மையறிவுக்கு)—விஷயமாகிறதோ, அது ப்ரமேயமெனப் படுகிறது. அன்றிக்கே "ப்ரகர்ஷேண மேயம் ப்ரமேயம்" [நன்ருக அறியத்தகுந்தது ப்ரமேயம்] என்றும் பொருள் கொள்ளலாம். அந்த ப்ரமேயம் த்₃ரவ்யமென்றும், அத்₃ரவ்யம் —[த்₃ரவ்யமல்லாதது]— என்றும் இரண்டு வகைப்படும். உபாத₃ானகாரணமாயுள்ள பொருள் த்₃ரவ்யம் எனப்படும்; பலவித₄மான அவஸ்தை₂(நிலை)களை அடையும் பொருள் உபாத₃ானம் எனப்படும். இப்படியல்லாதது அத்₃ரவ்யமாகும். 92.

समवाय-अभावाः सप्त पदार्था इति मतान्तरस्थैः सप्तधा परिगणनात् कथं द्रव्याद्रव्यभेदेन द्विधा समर्थनमिति चेत्; उच्यते। उत्क्षेपणापक्षेपणाकुञ्चनप्रसारणगमनभेदात् कर्म पञ्चधाऽवस्थितमिति कल्पने

---

१४०. तच्च प्रमेयं द्विविधं द्रव्याद्रव्यविभागतः।
पदार्थसप्तकोक्तिस्तु परकीया न संमता॥

---

140*-143. "திரவியம், கு₃ணம், கர்மம், ஸாமாந்யம், விஶேஷம், ஸமவாயம், அப₄ாவம் என்பவை உலகிலுள்ள பொருள்கள் ஏழு" என்று வைஶேஷிகர்கள் பொருள்களை ஏழு வகையாகப் பிரிப்பது அறிவாளிகளால் அங்கீ₃கரிக்கப் படவில்லை. திரவியம், கு₃ணம் என்பவற்றை அனைவரும் அங்கீ₃கரிக்கிறோம். 'ஸம்யோக₃ம்' என்னும் கு₃ணத்தைக் கொண்டே கர்மம் எனப்படும் கிரியையை நிர்வஹித்து விட லாம். மேலே போவது, கீழே போவது, சுருங்குவது, விரிவது, ஓரிடத்திலிருந்து வேறிடம் செல்லுவது என்று வைஶேஷிகர்கள் கர்மத்தை ஐந்து வகையாகப் பிரிக்கிறார்கள். கர்மம் என்பது அசைதல் (சலநம்) என்று சொன்னாலே போதுமாயிருக்க, இதை ஐந்து வகையாகப் பிரிப்பது x கௌ₃ரவம் என்னும் தோ₃ஷத்துக்கு இலக்காகிறது. இந்தச் சலனத்தையும் ஸம்யோக₃ம் என்கிற கு₃ணத்தில் அடக்கலாமாகையால் கர்மம் என்று தனியாக ஒன்றை ஒப்புக்கொள்ள வேண்டியதில்லை. ஓரிடத்திலிருந்து மற்றோரிடத்துக்கு அசைதலாகிற கர்மம், முன்தே₃ஶப் பிரிவை —(பூர்வதே₃ஶ விப₄ாக₃த்தை)— முன்னிட்டு வரும் பின்தே₃ஶச் சேர்த்தியே —(உத்தரதே₃ஶ ஸம்யோக₃மே)— ஆகும். இப்படிப்பட்ட ஸம்யோக₃ பரம்பரையே கர்மம் என்றும், கிரியை என்றும் வியவஹரிக்கப்படுகிறது.

---

x ப்ரமாணத்தால் ஏற்படாத ஒன்றை யுக்தியினால் இருப்பதாக ஒப்புக்கொள்ளும்போது, குறைந்ததை ஒப்புக்கொள்வது லாக₄வம் என்றும், அதி₄கத்தை ஒப்புக்கொள்வது கௌ₃ரவம் என்றும் சொல்லப்படுகிறது. குறைந்ததையே ஒப்புக் கொள்ளக்கூடுமானால், அதி₄கத்தை ஒப்புக்கொள்வது தோ₃ஷம். ஆகையால் கௌ₃ரவம் தோ₃ஷமாகிறது.

गौरवात्, चलनात्मकं कर्मेत्येकधैवोपपत्तेः, तस्यापि संयोगमादायैवोपपत्तेः। संस्थानमेव जातिरिति संस्थानातिरेकेण सामान्यानङ्गीकारात्। सम-

१४१. संयोगगुणमादाय कर्मणश्चरितार्थता।
वस्तुसंस्थानातिरिक्तं सामान्यं न प्रसिद्ध्यति॥

க₄டம் முதலான வஸ்துக்களிலிருப்பதாக க₄டத்வம் முதலான ஜாதிகளைத் தார்க்கிகர்கள் ஒப்புக்கொள்ளுகிறார்கள். இதையே ஸாமாந்யம் என்கிறார்கள். க₄டத்வாதி₃ஜாதி நித்யமென்றும், ஒன்றென்றும், எல்லா க₄டாதி₃யிலும் இருக்கிறதென்றும் சொல்லுகிறார்கள். இதையும் ஒப்புக்கொள்ளவேண்டியதில்லை. அடி பெருத்து, வாய் சிறுத்திருக்கும் அதன் அமைப்பே. க₄டத்தை மற்ற பொருள்களிலிருந்து வேறுபடுத்தித்தரும் ஜாதியாகும். இதுதவிர ஸாமாந்யமென்று வேறொன்றில்லை. நித்யமான வஸ்துக்களான ஜீவன், ஈர்வரன், பரமாணுக்கள், காலம், தி₃க், மனம் ஆகியவற்றில் ஒன்றிலிருந்து மற்றொன்றை வேறுபடுத்திக்காட்டுவது விரேஷம் என்னும் பொருள் என்கிறான் தார்க்கிகன். இதுவும் வேண்டியதில்லை. தார்க்கிகன் நித்யமாகச் சொல்லும் பொருள்களில் 'தி₃க்' என்பதையும், பரமாணு என்பதையும் ஒப்புக்கொள்ளவேண்டியதில்லை என்பது மேலே காட்டப்படும். ஆகாரம், மனம் என்பவற்றையும் நித்யமாகக் கொள்ளுகிறான். இவையும் நித்யமன்று, ப்ரக்ருதியிலிருந்து உண்டானவை என்பதைக் காட்டுவோம். இனி, உண்மையிலேயே நித்யமாயிருக்கும் காலமும் ஆத்மாக்களும், ஈர்வரனும் மிகுந்திருக்கின்றன. இவற்றில் காலமானது க்ஷணம் முதலான அவஸ்தை₂களுக்கு இருப்பிடமாயும், அசேதனமாயும், பராக்காயும் இருக்கிறது. ஆத்மாக்களுக்கு இவ்வித₄மான அவஸ்தை₂கள் இல்லை. அவர்கள் சேதனர்கள்; ப்ரத்யக்குகள்; இந்த த₄ர்மங்களாலேயே காலத்திலிருந்து ஆத்மாக்களைப் பிரிக்கலாம். ஆத்மாக்கள்—ஈர்வரன் என்றும், ஜீவர்களென்றும் இருவகைப்படுவர்; அவர்களில் ஈர்வரன் விபு₄ (எங்கும் இருப்பவன்); நியமநம் செய்கிறவன்; எல்லாவற்றுக்கும் த₄ாரகன்; ரேஷி; விரேஷ்யம்; ஆத்மா.

वाये समवायान्तराङ्गीकारेऽनवस्थानात्, तस्यापि संयुक्तविशेषण(तयैव)-तामादायोपपत्तेः। जीवेश्वरयोरणुत्वविभुत्वादिविभाजकधर्ममन्तरेण 'विशेष'

---

१४२. विशेषश्च न जीवेशतत्तद्धर्मौ विभाजकः।
समवायो न संयुक्तविशेषणतया पृथक्॥

---

ஜீவர்களோ அணுக்கள்; நியமநம் பண்ணப்படுகிறவர்கள்; த₄ரிக்கப்படுகிறவர்கள். ஈஶ்வரனுக்கு ஶேஷர்கள்; அவனுக்கு விஶேஷணங்கள்; அவனுக்கு ஶரீரங்கள். இந்த த₄ர்மங்களாலே ஈஶ்வரனிடமிருந்து ஜீவர்களைப் பிரிக்கலாம். இவைகளைத் தவிர விஶேஷம் என்று ஒன்று வேண்டியதில்லை. ஜீவர்கள் மூன்று வகைப்பட்டவர்கள்—ப₃த்₃த₄ர்கள் (கர்மத்துக்கு உட்பட்டவர்கள்), முக்தர்கள் (கர்மத்திலிருந்து விடுபட்டவர்கள்), நித்யர்கள் (கர்மப₃ந்த₄ம் ஒருபோதும் இல்லாதவர்கள்) என்று. இந்த த₄ர்மங்களைக்கொண்டு ஒவ்வொரு வகுப்பையும் மற்ற வகுப்புக்களிலிருந்து பிரிக்கலாம். ப₃த்₃த₄ர்களுக்குள்ளே ஒருவருடைய ஸுக₂மும், து₃:க்க₂மும், ஜ்ஞாநமும், மற்றவர்களுடைய ஸுக₂த்தையும், து₃:க்க₂த்தையும், ஜ்ஞாநத்தையும் காட்டிலும் வேறாக இருப்பதால், இவைகளைக்கொண்டே ஒருவனை மற்றொருவனிடமிருந்து பிரிக்கலாம். முக்தர்களுக்குள்ளே அவர்கள் முக்தி அடைவதற்கு முன்னாலே அவர்களுக்கு இருந்த கு₃ணங்களைக்கொண்டும், முக்தி அடைவதில் இருந்த காலத்தின் வேறுபாட்டாலும் ஒரு முக்தனை மற்றொரு முக்தனிடமிருந்து பிரிக்கலாம். நித்யர்களில் ஒருவனை அவனுடைய இச்சை₂களையும், ஸங்கல்பங்களையும் அவன் செய்யும் வியாபாரங்களையும்கொண்டு மற்றவர்களிடமிருந்து பிரிக்கலாம். வியாபாரங்களைச் செய்யுமிடங்களும் காலங்களும் அவஸ்தை₂களும் எல்லார்க்கும் ஒன்றாயிருக்கவேண்டிய நிர்ப்ப₃ந்த₄மில்லை. இச்சை₂களையும் ஸங்கல்பங்களையும் உண்டுபண்ணும் ஸாமக்₃ரிகளும் வேறாகவேயிருக்கலாம். ஈஶ்வரனுடைய ஸங்கல்பம் முதலியவைகளுக்கும் இவர்களுடைய ஸங்கல்பம் முதலியவைகளுக்கும் பே₄த₃ம் இருப்பதுபோல இவர்களுடைய ஸங்கல்பம் முதலியவைகளிலும் ஒன்றோடொன்று பே₄த₃மிருக்க

इति किञ्चित्पदार्थाङ्गीकारे गौरवात्। अतः कर्मसामान्यविशेषसमवायानां पृथक्पदार्थत्वेनानङ्गीकाराच्च द्रव्यमद्रव्यमिति द्विधा विभाग उपपद्यते।

---

லாம். முக்தர்களையும் இவ்வகையில் வேறுபடுத்திக் காணலாம். ஆகையால், நித்யப்பொருள்களை வேறுபடுத்துவது அவ்வவற்றி லுள்ள ஸ்வரூபநிரூபகத₄ர்மங்களேயாம். இதற்காக விசேஷம் என்று ஒன்றைக் கற்பிக்கவேண்டியதில்லை. "சேர்ந்தே யிருக்கும் இரண்டு பொருள்கள் ஸமவாயம் என்னும் ஸம்ப₃ந் த₄த்தினால் சேர்ந்திருக்கின்றன ; இது நித்நியமானது; ஜாதிக் கும் அதையுடைய வஸ்துவுக்கும், அவயவத்துக்கும் அதை யுடைய வஸ்துவுக்கும், கு₃ணத்துக்கும் அதையுடைய வஸ்து வுக்கும், கர்மத்துச்கும் அதையுடைய வஸ்துவுக்கும், நித்ய மான திரவியத்திற்கும் அதிலுள்ள விசேஷத்துக்கும் உள்ள ஸம்ப₃ந்த₄ம் ஸமவாயம்" என்கிறான் தார்க்கிகன், கண்ணால் காணப்படும் ஸம்யுக்தமான ) க₄டம் முதலானவற்றுக்கு விசேஷணமாயிருக்கை ( விட்டுப்பிரியாமல் தழுவியிருக்கை ) தவிர, ஜாதி முதலானவற்றுக்கும் அவற்றையுடைய த்₃ரவ்யங் களுக்கும் ஸமவாயம் என்பதொரு தனி ஸம்ப₃ந்த₄ம் இல்லை. இதைத் தனிப்பதா₃ர்த்த₂மாக ஒப்புக்கொண்டால், இந்த ஸம வாயம் அந்தப்பதா₃ர்த்த₂ங்களில் எப்போதும் சேர்ந்திருப்ப தால் வைசேஷிகன் சொல்லுகிற நியாயப்படி அதற்காக இரண் டாவது ஸமவாயத்தைக் கற்பிக்கவேண்டும். அதுவும் நித்ய மாய் அந்த வஸ்துக்களில் இருப்பதால், அதற்காக மூன்றாவது ஸமவாயத்தைக் கற்பிக்கவேண்டும். இப்படிக் கற்பித்துக் கொண்டுபோனால் அநவஸ்தை₂(நிலைநில்லாமை)என்கிற தோ₃ஷம் வரும். "பூ₄தலம் க₄டாபா₄வவத்" (தரை குடமில்லாதது) என்கிற அபா₄வத்தின் ப்ரத்யக்ஷத்தில், அபா₄வத்தை ஸம்யுக்த விசேஷணதை என்னும் ஸம்ப₃ந்த₄த்தால் அறிகிறோம். ஸம்யுக்தம் - சக்ஷுரிந்திரியத்துடன் சேர்ந்திருக்கும் தரை. அதில் அபா₄வம் விசேஷணமாக இருக்கிறது. அங்கு ஸம்யுக்த விசேஷணதை ஸம்ப₃ந்த₄ம். இதை வைசேஷிகன் ஒப்புக் கொண்டிருக்கிறான் நாம் ஸமவாயஸ்தா₂னத்தில் இதையே ஒப்புக்கொள்ளுகிறோம். கோ₃ என்னும் வ்யக்தியை கோ₃த்வம்

एतेनाभावस्स्वतन्त्रपदार्थ इत्यपि निरस्तम्; अभावस्य भावान्तररूपत्वात्। प्रागभावो नाम पूर्वावस्थापरम्परा; ध्वंस उत्तरावस्थापरम्परा; अत्यन्तान्योन्याभावौ च धर्म्यन्तर(गतविशेष)स्वरूपावेव। एतस्य प्रत्यक्षेऽन्तर्भावः पूर्वमुक्तः ॥ ९३ ॥

---

१४३. अभावस्याप्यन्यभावरूपत्वान्नातिरिक्तता।
तस्माद्द्विधा प्रमेयस्य युक्तं विभजनं कृतम्॥

---

என்கிற ஜாதியோடு கூடியதாகப் பார்க்கும்போது, சக்ஷுரிந்திரியத்தோடு ஸம்யுக்தம் கோ என்னும் வ்யக்தி: அதில் ஜாதி விசேஷணம். ஸம்யுக்த விசேஷணதை ஸம்பந்தம். அவனும் நாமும் ஒப்புக்கொண்ட இந்த ஸம்பந்தத்தைக் கொண்டே எல்லா நிர்வாஹத்தையும் செய்யக்கூடுமாகையால் அதிகமாக ஸமவாயம் என்பதை ஒப்புக்கொள்ளவேண்டியதில்லை. அபாவம் [இல்லாமை] என்று ஒரு பொருளை ஒப்புக்கொள்கிறான் தார்க்கிகன். குடம் உண்டாவதற்கு முன் குடத்தின் ப்ராகபாவம் இருக்கிறது; குடம் உடைந்தபின்பு குடத்தின் ப்ரத்வம்ஸாபாவம் உண்டாகிறது; "மாடு குதிரை அன்று; குதிரை மாடு அன்று" என்றவிடத்தில் மாடாக இல்லாமையும், குதிரையாக இல்லாமையும் அந்யோந்யாபாவம்; "பூமியில் குடமில்லை" என்னும்போது குடமில்லாமை அத்யந்தாபாவம்—என்பது அவன் கொள்கை. இது தவறு. குடம் உண்டாவதற்கு முன்னுள்ள மண்கட்டி முதலான நிலைகளையே ப்ராகபாவமாகவும், உடைந்தபின் உள்ள ஓடுகள் முதலான நிலைகளையே அதன் ப்ரத்வம்ஸாபாவமாகவும், அந்யோந்யாபாவத்தை கோத்வம், அச்வத்வம் என்னும் அஸாதாரண தர்மங்களாகவும், அத்யந்தாபாவத்தை பூதலஸ்வருபமாகவும் கொண்டே நிர்வஹித்து விடலாமாகையால் அபாவமென்று ஒன்றை ஒப்புக்கொள்ளவேண்டியதில்லை: இந்த அபாவம் ப்ரத்யக்ஷப்ரமாணத்திற்கு விஷயம் என்பது முன்பே (ப. 21,22) சொல்லப்பட்டது. ஆகையால் ப்ரமேயங்களை த்ரவ்யம். அத்ரவ்யம் என்று இரண்டாகப்பிரித்தது சரியே. 93.

उपादानं द्रव्यमित्युक्तम्। गुणाश्रयो द्रव्यमित्यपि सामान्यलक्षणं संभवति। तानि च द्रव्याणि षट्—प्रकृति-काल-शुद्धसत्त्व-धर्मभूतज्ञान-जीव-ईश्वरभेदात् ॥९४॥ तत्र, जडाजडरूपयोर्विभक्तयोर्मध्ये जडलक्षणमुच्यते—

---

१४४. तच्च द्रव्यमुपादानकारणं च गुणाश्रयः।
नानावस्थाश्रयश्चोपादानं वस्तु निगद्यते॥

१४५. द्रव्यं द्विविधमित्युक्तं जडाजडविभेदतः।
स्वयंप्रकाशरहितं जडं तद्द्विविधं मतम्॥

---

144. உபாத3ாநகாரணமாகவும், கு3ணங்களுக்கு இருப்பிடமாகவும் உள்ள பொருள் *திரவியமாகும்.* பலவித4மான அவஸ்தை2-(நிலை)-களை அடையும் வஸ்து உபாத3ானமெனப் படுகிறது. ஒரு வஸ்துவின் அவஸ்தை, அல்லது நிலையாவது,—அவ்வஸ்துவில் முதலில் இல்லாமல் பின் வந்து சேருவதும், அதைவிட்டுப் பிரியாததுமான த4ர்மம். உத3ாஹரணம்:—மண் கட்டி குடமாகிறது. அந்தக் கட்டியில், குடமுண்டாவதற்கு முன் கட்டியாயிருக்கும் தன்மையாகிற நிலையிருந்தது. க4டத்வமாகிற நிலையில்லை. குடமுண்டாகும்போது க4டத்வநிலை வந்து சேருகிறது. ஆக, இவ்வளவால் பலவித4மான நிலைகளை அடையும் வஸ்து திரவியம் என்றதாயிற்று. கு3ணங்களுக்கு இருப்பிடமான வஸ்து திரவியம் என்பது எல்லா திரவியங்களுக்கும் பொதுவான லக்ஷணமாகும் இந்த திரவியங்கள் *ப்ரக்ருதி, காலம், ஶுத்3த4ஸத்வம், த4ர்மபூ4தஜ்ஞானம், ஜீவன், ஈஶ்வரன்* என்று ஆறுவகைப்படும். 94.

*145. திரவியங்களை. *ஜட3*மென்றும், *அஜட3*மென்றும் இரண்டு வகையாகவும் பிரிக்கலாம். தானே ப்ரகாஶிக்காதது ஜட3மாகும். தானே பிரகாஶிப்பது *அஜட3*மாகும். கீழே கூறிய ஆறு திரவியங்களில் *ப்ரக்ருதியும் காலமும்*-ஜீவன்களுடையவும், பரமனுடையவும் ஜ்ஞானங்களாலேயே பிரகாஶிக்கின்றனவேயொழியத் தாங்களாகவே பிரகாஶிப்பதில்லை. ஆகையால்

अमिश्रसत्त्वरहितं जडमिति ॥ ९५ ॥ तत् द्विविधम्—प्रकृतिकालभेदात्। तत्र, सत्त्वरजस्तमोरूपगुणत्रयाश्रयरूपा प्रकृतिः। सा नित्या अक्षराविद्यामायादिशब्दवाच्या च। तस्याः भगवत्सङ्कल्पाधीनगुणवैषम्यात् कार्योन्मुखावस्था अव्यक्तशब्देनोच्यते ॥ ९६ ॥ तस्मात् महानुत्पद्यते।

---

१४६. प्रकृतिः काल इति च तत्राद्या त्रिगुणोज्ज्वला।
गुणास्सत्त्वं रजस्तम इति ते परिकीर्तिताः ॥

१४७. नित्या सा चाक्षराविद्यामायाशब्दैः प्रकीर्त्यते।
गुणवैषम्यतः कार्योन्मुखावस्था यदेशितुः ॥

---

அவையிரண்டும் ஜட₃மாகும். *ஶுத்₃த₄ஸத்வம், த₄ர்மபூ₄த ஜ்ஞானம், ஜீவன், ஈஶ்வரன்* என்னும் நான்கு திரவியங்களும் மற்றொன்றின் உதவியில்லாமல் தாமாகவே பிரகாஶிக்கின்றமையால் அவை அஜட₃மாகும். அமிஶ்ர (ஶுத்₃த₄) ஸத்வகு₃ணம் இல்லாதது ஜட₃ம் என்றும் கூறுவதுண்டு. மிஶ்ரஸத்வமேயுடைய ப்ரக்ருதிக்கும், த்ரிகு₃ணஶூந்யமான காலத்துக்கும் இது பொருந்துமாயினும், முக்குணமுமற்ற ஜீவேஶ்வரர்களிடமும் த₄ர்மபூ₄தஜ்ஞானத்திடமும் அதிவ்யாப்தி வருமாகையால், இது லக்ஷணமல்ல; ஸ்வரூப கத₂னமே. 95

145-*-*148. முற்கூறியவாறு தானே பிரகாஶிக்காத பொருள் ஜட₃மெனப்படும். அது *ப்ரக்ருதி* என்றும் *காலம்* என்றும் இருவகைப்படும். அவற்றில் ப்ரக்ருதியைப்பற்றி இந்த ப்ரகரணத்தில் ஆராயப்படுகிறது. *ப்ரக்ருதியாவது* – ஸத்வம், ரஜஸ்ஸு, தமஸ்ஸு என்னும் முக்குணங்களையும் ஸமநிலையில் உடையதாயிருக்கும் திரவியம். இது அழிவில்லாதது. இது வேத₃ங்களில் *அக்ஷரம், அவித்₃யை, மாயை* என்னும் ஶப்₃த₃ங்களாலும் சொல்லப்படுகிறது. ப₄க₃வானுடைய ஸங்கல்பத்தால் இதின் கு₃ணங்களில் ஏற்றத்தாழ்வுகள் ஏற்பட்டு, கார்யங்களான மஹான் முதலானவற்றை உண்டாக்கத்தக்கதாக எப்போது ஆகின்றதோ, அப்போது இப்ரக்ருதி *அவ்யக்த* ஶப்₃த₃த்தால் சொல்லப்படுகிறது. 96.

स महान् सात्त्विकराजसतामसभेदात् त्रिधाऽवस्थितः॥ ९७॥ महतोऽहङ्कार उत्पद्यते। सोऽपि सात्त्विकाहङ्कारो राजसाहङ्कारस्तामसाहङ्कारश्चेति त्रिविधो भवति। एतेषां त्रयाणां वैकारिकस्तैजसो भूतादिरिति नामान्तराण्यपि संभवन्ति॥ ९८॥

---

१४८. सङ्कल्पात्स्यात्तदाऽव्यक्तशब्देनेयं प्रकीर्त्यते।
अव्यक्ताज्जायते तस्मात् महान् स त्रिविधः स्मृतः॥

१४९. सात्त्विको राजसश्चाथ तामसश्चेति भेदतः।
महतश्चाप्यहङ्कारो जायतेऽयं च पूर्ववत्॥

१५०. सात्त्विकाद्यैस्त्रिधा भिन्नश्चैते नामान्तरान्विताः।
वैकारिकस्तैजसश्च भूतादिरिति च क्रमात्॥

१५१. वैकारिकात्सात्त्विकाख्यात्तैजसोपस्कृतात्तथा।
अहङ्कारादिन्द्रियाणां सर्वेषामुद्भवस्स्मृतः॥

---

148*-*149. அந்த அவ்யக்தத்திலிருந்து '*மஹான்*' என்னும் தத்துவம் உண்டாகிறது. அது ஸாத்விகமஹான், ராஜஸமஹான், தாமஸமஹான் என்று மூன்று வகைப்படும். ஸத்வம் முதலான அந்தந்த கு₃ணங்களின் மிகுதியை முன்னிட்டு ஸாத்விகமஹான் முதலான மூன்று பிரிவுகளும் ஏற்படுகின்றன. 97.

149*-150. மஹானிடமிருந்து, *அஹங்காரம்* என்னும் தத்துவம் உண்டாகிறது. இதுவும் மஹானைப்போலவே ஸாத்விகம், ராஜஸம், தாமஸம் என்னும் முப்பிரிவுகளை உடையது. ஸாத்விகாஹங்காரத்திற்கு *வைகாரிகம்* என்றும், ராஜஸாஹங்காரத்துக்குத் *தைஜஸம்* என்றும், தாமஸாஹங்காரத்துக்கு *பூ₄தாதி₃* என்றும் வேறு பெயர்களுமுண்டு. 98.

151-152. தைஜஸம் எனப்படும் ராஜஸாஹங்காரத்தால் உபகரிக்கப்பட்ட வைகாரிகம் எனப்படும் ஸாத்விகாஹங்காரத்

तेषु वैकारिक इति प्रसिद्धात् तैजससंज्ञकराजसाहङ्कारसहकृतात्साच्त्विकाहङ्काराद्रेकादशेन्द्रियाणि जायन्ते। साच्त्विकाहङ्कारोपादानकं द्रव्यमिन्द्रियमिति इन्द्रियलक्षणम्। इन्द्रियं द्विविधम्–ज्ञानेन्द्रियं कर्मेन्द्रियं चेति॥ ९९॥ ज्ञानप्रसरणशक्तमिन्द्रियं ज्ञानेन्द्रियम्। तत्र षोढा–मनःश्रोत्रचक्षुर्घ्राणरसनात्वग्भेदात् ॥ १००॥ स्मृत्यादिकरण-

---

१५२. इन्द्रियाणामुपादानं साच्त्विकाहङ्कृतिर्मतम्।
ज्ञानकर्मप्रभेदेन द्विविधं चेन्द्रियं स्मृतम्॥

१५३. संविद्विकासानुकूलं ज्ञानेन्द्रियमितीर्यते।
मनश्चक्षुःश्रोत्रजिह्वाघ्राणत्वक्प्रभेदवत्॥

१५४. स्मृत्यादिकरणं तत्र मनो हृदयवर्ति च।
बुद्ध्यहङ्कारचित्ताख्यं कारणं बन्धमोक्षयोः॥

---

திலிருந்து எல்லா *இந்திரியங்களும்* உண்டாகின்றன. இந்திரியங்களனைத்துக்கும் ஸாத்விகாஹங்காரமே உபாத₃ானமாகச் சொல்லப்படுகிறது. ‘ஸாத்விகாஹங்காரத்தை உபாத₃ானமாகக் கொண்ட திரவியம் இந்திரியம்’ என்பது இந்திரிய லக்ஷணம். இவ்விந்திரியங்களும், *ஞானேந்திரியம்* என்றும், *கர்மேந்திரியம்* என்றும் இரண்டு வகைப்படும். 99.

153. அறிவு வெளிப்படுவதற்கு உதவிசெய்வது *ஞானேந்திரியம்* எனப்படுகிறது. அது, *மனம், கண், செவி, நா, மூக்கு, மெய் (த்வக்)* என்று ஆறுவகைப்படும். 100.

154. நினைவு முதலானவற்றுக்குக் கரணமாய் -(அஸாத₄ாரண காரணமாய்) இருப்பது *மனம்*. அது ஹ்ருத₃யத்திலிருக்கிறது. மனத்துக்கு *அந்த:கரணம்* என்றும் பெயருண்டு. அது மூன்று வித₄மான காரியம் செய்கிறது. 1 இது இன்ன பொருள் என்று நிச்சயிக்கிறது. அப்போது மனத்துக்கு *பு₃த்₃தி₄* என்று பெயர். 2. தே₃ஹத்தையும், ஆத்மாவையும் ஒன்றாகவும், தே₃ஹத்தைச் சேர்ந்த பொருள்

मिन्द्रियं मनः। तच्च हृदयप्रदेशवर्ति बुद्ध्यहङ्कारचित्तादिशब्दवाच्यम्, बन्धमोक्षहेतुभूतं च॥१०१॥ शब्दादिपञ्चके शब्दमात्रग्रहणशक्तमिन्द्रियं श्रोत्रेन्द्रियम्। तत् मनुष्यादीनां श्रवणकुहरवर्ति। द्विजिह्वादीनां नयनवर्ति। एवं रूपमात्रग्रहणशक्तमिन्द्रियं चक्षुः, सर्वेषां नयनवर्ति।

---

१५५. रूपमात्रग्रहे शक्तमिन्द्रियं चक्षुरुच्यते।
शब्दमात्रग्रहे शक्तं श्रोत्रेन्द्रियमुदाहृतम्॥

---

களை ஆத்மாவைச் சேர்ந்த பொருள்களாகவும் எண்ணுகிறது மனம். அப்போது அதற்கு *அஹங்காரம்* என்று பெயராகிறது. 3. விஷயத்தை நினைக்கிறது. அப்போது அதற்குச் *சித்தம்* என்று பெயர்.

"மந ஏவ மநுஷ்யாணும் காரணம் ப₃ந்த₄மோக்ஷயோ: ।
ப₃ந்த₄ாய விஷயாஸங்கி₃ முக்த்யை நிர்விஷயம் மந:॥"
[வி-பு 6-7-28]

[மனமே மனிதர்களின் ப₃ந்த₄மோக்ஷங்களுக்குக் காரணமாகிறது. விஷயங்களில் ஈடுபட்டதாகில் ஸம்ஸாரப₃ந்த₄த்திற்கும், விஷயங்களிலிருந்து விடுபட்டால் முக்திக்கும் காரணமாகிறது] என்கிறபடியே இந்த மனம் ப₃ந்த₄மோக்ஷங்களுக்குக் காரணமாகும். 101.

155-157. இனி, மற்ற ஞானேந்திரியங்களுக்கு லக்ஷணம் சொல்லப்படுகிறது. *ஶப்₃த₃ம்*, *ஸ்பர்ஶம்*, ரூபம், ரஸம், க₃ந்த₄ம் என்பவை முறையே ஆகாயம், வாயு, அக்₃னி ஜலம், பூ₄மி என்னும் பஞ்சபூ₄தங்களுடைய தனிக்குணங்களாக உள்ளன. இவற்றில், ரூபத்தை மாத்திரம் கிரஹிக்கவல்ல இந்திரியம் *கண்* எனப்படும். இது நாம் காணும் கண்ணினுள்ளே (இந்திரியங்களுக்குப் புலப்படாததாய்) இருக்கிறது. ஶப்₃த₃த்தை மாத்திரம் அறியவல்ல இந்திரியம் *செவி* எனப்படும். இது நாம் காணும் காது துவாரத்தினுள் இருக்கிறது. காதற்ற பாம்பு முதலானவற்றுக்குக் கண்ணினுள் இருக்கிறது

गन्धमात्रग्रहणशक्तमिन्द्रियं घ्राणेन्द्रियम्, नासाग्रवर्ति। (गजादेः कराग्रवर्ति)। रसमात्रग्रहणशक्तमिन्द्रियं रसनेन्द्रियम्, जिह्वाग्रवर्ति। स्पर्शमात्रग्रहणशक्तमिन्द्रियं त्वगिन्द्रियम्, सर्वशरीरवर्ति। नखदन्तकेशादिषु प्राणमान्द्यतारतम्यात् स्पर्शानुपलम्भः। श्रोत्रादीन्द्रियाणां भौतिकत्वप्रतिपादनं भूताप्यायितत्वेनौपचारिकम्॥ १०२॥ एतेषां

---

१५६. रसमात्रग्रहे शक्तं रसनेन्द्रियमुच्यते।
गन्धमात्रग्रहे शक्तमिन्द्रियं घ्राणनामकम्॥

१५७. स्पर्शमात्रग्रहे शक्तं त्वगिन्द्रियमुदाहृतम्।
एतानि तत्तत्स्थानेषु वर्तन्ते नयनादिषु॥

---

ரஸத்தை மாத்திரம் கிரஹிக்கவல்ல இந்திரியம் *'நா'* எனப்படும். இது நாம் காணும் நாக்கின் நுனியிலுள்ளது. க₃ந்த₄த்தை மாத்திரம் கிரஹிக்கவல்ல இந்திரியம் *க்₄ராணம் அல்லது மூக்கு* எனப்படுகிறது. நாம் காணும் மூக்கின் நுனியிலுள்ளது இது (யானை முதலான துதிக்கையை உடைய பிராணிகளுக்கு துதிக்கையின் நுனியில் உள்ளது.) ஸ்பர்ஶத்தை மாத்திரம் அறியவல்ல இந்திரியம் *'த்வக்' அல்லது மெய்* எனப்படுகிறது. இது ஶரீரம் முழுவதுமுள்ளது. நக₂ம், டல், மயிர் முதலானவற்றில் பிராணன் மந்த₃மாயிருப்பதால் ஸ்பர்ஶம் அவற்றில் தோன்றுவதில்லை. கண் முதலான இந்த இந்திரியங்கள் எல்லாம் இந்திரியங்களுக்குப் புலப்படாதவை. நாம் கண்ணால் காணும் கண் முதலானவை இந்திரியங்களல்ல. இதனாலேயே கண்ணிருந்தும் குருடர்கள், காதிருந்தும் செவிடர்கள் முதலானவர்களைக் காண்கிறோம். ஶப்₃த₃ம் முதலான அஸாத₄ாரணகு₃ணங்களை உடைய அந்தந்த பூ₄தங்களிலிருந்து, அந்தந்த கு₃ணங்களை க்₃ரஹிக்கும் இந்த்₃ரியங்கள் உண்டாவதாகக் கூறும் வசனங்கள், அந்தந்த பூ₄தங்களால் அவ்விந்த்₃ரியங்கள் போஷிக்கப்படுவதையிட்டே அப்படிக் கூறுகையால், (அவை) ஔபசாரிகமே. 102.

विषयसम्बन्धः क्वचित्संयोगः, क्वचित्संयुक्ताश्रयणमिति वृद्धसंप्रदायः ॥ १०३ ॥

उच्चारणादिष्वन्यतमक्रियाशक्तत्वं कर्मेन्द्रियसामान्यलक्षणम्। तच्च, वाक्पाणिपादपायूपस्थभेदात् पञ्चधाऽवस्थितम्॥ १०४ ॥ वर्णोच्चारणकरणमिन्द्रियं वाक्। सा च हृत्कण्ठजिह्वामूलतालुदन्तोष्ठनासामूर्ध-

---

१५८. एषां विषयसम्बन्धः संयोगः क्वचिदिष्यते।
संयुक्ताश्रयणं चापि क्वचिदित्यार्यसंमतम् ॥

१५९. उच्चारणाद्यन्यतमशक्तं कर्मेन्द्रियं मतम्।
वाक्पाण्यङ्घ्रिगुदोपस्थप्रभेदात् तच्च पञ्चधा ॥

---

158. இவ்விந்திரியங்கள், குடம் முதலான விஷயங்களுடன் *ஸம்யோக₃* ஸம்ப₃ந்த₄த்தால் சேருகின்றன என்றும், குடம் முதலானவற்றிலுள்ள கு₄டத்வம் முதலான ஜாதிகளோடும், நிறம் முதலான கு₃ணங்களோடும் *'ஸம்யுக்தாஶ்ரயணம்'* என்னும் ஸம்ப₃ந்த₄த்தால் சேருகின்றனவென்றும் அறிவாளிகள் உரைக்கின்றனர். 103.

159. '1. வர்ணங்(எழுத்துக்)களை உச்சரிப்பது, 2. வேலைகளைச் செய்வது, 3. நடப்பது, 4. மலம் முதலியவற்றைத் தள்ளுவது, 5.சிற்றின்பத்தை அநுப₄விக்கச்செய்வது ஆகிய ஐந்து காரியங்களில் ஏதாவது ஒன்றில் வல்லமையுள்ளது *கர்மேந்திரியம்'* என்பது கர்மேந்திரியலக்ஷணமாகச் சொல்லப்படுகிறது. அக்கர்மேந்திரியம் *1. வாக்கு, 2. கை, 3. கால், 4. கு₃த₃ம் அல்லது பாயு, 5. உபஸ்த₂ம்* என்று ஐவகைப்படும். 104.

160-161. இனி இவ்வைந்துக்கும் தனித்தனியாக லக்ஷணம் சொல்லப்படுகிறது. அகரமுதலான எழுத்துக்களை உச்சரிப்பதற்குக் கரணமாயிருக்கும் கர்மேந்திரியம் *'வாக்'* எனப்படும். அது - ஹ்ருத₃யம், தொண்டை, நாக்கின் அடிப்பாகம், தாளு

त्पष्ट्यानाष्टकवर्तिनी। (मूका)मृगादिष्वदृष्टविरहात्तदभावः। शिल्प-करणमिन्द्रियं पाणिः। स च मनुष्यादीनामङ्गुल्यग्रवर्ती। वारणादीनां नासाग्रवर्ती। संचरणकरणमिन्द्रियं पादः। स च मनुष्यादीनां चरणवर्ती। भुजगपतगादीनां उरःपक्षादिवर्ती। मलादित्यागकरण-मिन्द्रियं पायुः। स च तत्तदवयववर्ती। आनन्दविशेषकरणमिन्द्रिय-मुपस्थः। स च मेहनादिवर्ती॥ १०५॥

---

१६०. वाग्वर्णोच्चारणे हेतुः हृदाद्यष्टकवर्तिनी।
शिल्पादिहेतुः पाणिस्स्यात्पादस्सञ्चारकारणम्॥

१६१. मलादित्यागकरणमिन्द्रियं पायुरिष्यते।
[illegible]शेषकरणं तथा॥

---

(தாடை), பற்கள், உதடு, மூக்கு, தலை ஆகிய எட்டு இடங்களில் உள்ளது. ஊமையிடமும், மிருகங்களிடமும், பறவைகளிடத்தும், *அத்ருஷ்டம்* எனப்படும் *கர்ம* வசத்தால் இவ்விந்திரியம் மனிதரிடம்போல் வேலைசெய்வது இல்லை. வேலைகளைச் செய்ய ஸாதனமாயிருக்கும் இந்திரியம் *'பாணி'* அல்லது, *'கை'* எனப்படும். இது மனிதர்களுக்குக் கைவிரல்களிலுள்ளது. யானைக்குத் துதிக்கை நுனியிலும், பக்ஷிகள் முதலியவற்றுக்கு மூக்கிலுமுள்ளது. ஓரிடத்திலிருந்து மற்றோரிடம் செல்லுவதற்கு ஸாதனமாயிருக்கும் இந்திரியம் *'கால்'* எனப்படும். இது மனிதர்களுக்கு நாம் காணும் கால்களிலிருக்கிறது. பாம்புக்கு மார்பிலும், பக்ஷிகளுக்கு இறக்கைகளிலுமிருக்கிறது. மலம் முதலிய கழிபொருள்களை உடம்பிலிருந்து தள்ளுவதற்கு ஸாதனம் *'பாயு'* அல்லது *'குதம்'* எனப்படும் கருமேந்திரியம். அது ஆஸனவாயிலுள்ளது. சிற்றின்பத்துக்குக் கரணமாயிருப்பது *'உபஸ்தம்'* எனப்படும் கருமேந்திரியம். அது ஆண்களுக்கு ஆண்குறியிலும், பெண்களுக்குப் பெண்குறியிலுமுள்ளது. ஞானேந்திரியங்களைப்போலே இக்கருமேந்திரியங்களும் இந்திரியங்களுக்குப் புலப்படாதவையே. 105.

एतानीन्द्रियाण्यणूनि। परकायप्रवेशे लोकान्तरगमनादिषु च जीवेन सह गच्छन्ति। इन्द्रियाणां मुक्तिदशायामप्राकृतदेशगमनासंभवादिहैव यावत्प्रलयं स्थितिः। करणविधुरैरन्यैः परिग्रहो वा॥ १०६॥ कर्मेन्द्रियाणां शरीरनाशान्नाश इति पक्षस्तु भाष्यादिविरोधेन हेयः।

---

१६२. अणून्येतानि जीवेन यान्ति लोकान्तरादिकम्।
यावत्प्रलयमत्रैव सन्ति मुक्तेन्द्रियाण्यपि॥

१६३. कर्मेन्द्रियाण्यङ्गनाशान्नश्यन्तीति वचस्तथा।
पुमिन्द्रियस्त्रीन्द्रियादिकल्पनं च न युक्तिमत्॥

---

162. இந்த ஞானகர்மேந்திரியங்கள் அணுக்களாயிருப்பவை; அதாவது - அளவுபட்ட பரிமாணத்தையுடையவை. பரகாய ப்ரவேஶம் செய்ய ஶக்தியுள்ள ஜீவன் வேறு ஶரீரங்களில் நுழையும்போதும், சுவர்க்கம், நரகம் முதலான மற்ற லோகங்களுக்குச் செல்லும்போதும், ஸூக்ஷ்மமான இவ்விந்திரியங்கள் ஜீவனுடன் கூடச்செல்லுகின்றன. ஜீவன் முக்தியடையும்போது முக்தனுக்குப் பரமபதத்தில் ப்ராக்ருதமான இந்திரியங்கள் அவசியமில்லையாகையாலும், அவனுக்குக் கர்ம ஸம்ப₃ந்த₄மில்லையாகையாலும், பரமபதம் ப்ரக்ருதிஸம்ப₃ந்த₄ மற்ற தே₃ஶமாகையாலும் முக்தனால் விடப்பட்ட இவ்விந்திரியங்கள் ப்ரக்ருதி மண்ட₃லத்திலேயே மஹாப்ரளயம் வரையில் இருக்கும். 'இந்திரியங்களுக்குக் குறைவேற்பட்டவர்களால் அவை கைக்கொள்ளப்படுகின்றன' என்றும் கூறுவதுண்டு. ஆகையால், ஸ்ருஷ்டியின்போது உண்டாகும் இந்திரியங்களுக்கு ப்ரளயம் வரையில் அழிவில்லையென்றதாயிற்று. 106.

163. ஸ்தூ₂லமான கை முதலானவை அழியும்போது, ஸூக்ஷ்மமான 'கை' முதலிய இந்திரியங்கள் அழிகின்றனவென்றும், ஶரீரமழியும்போது அவையழிகின்றனவென்றும், புருஷர்களுடைய இந்திரியம் வேறுவகை, ஸ்திரீகளின் இந்திரியம் வேறுவகை என்றும், இந்திரியம் ஒன்றேயென்றும், 'த்வக்'

एतेन पुरुषेन्द्रिय-स्त्रीन्द्रिय-एकेन्द्रिय-वादः त्वगिन्द्रियैकत्वस्वीकारः इत्यादिविमतपक्षा निरस्ताः ॥ १०७ ॥

राजसाहङ्कारसहकृताद्भूतादिसंज्ञकतामसाहङ्काराच्छब्दादिपञ्च - तन्मात्राणि आकाशादि-पञ्च-महाभूतानि च उत्पद्यन्ते। भूतानां अव्यवहितसूक्ष्मावस्थाविशिष्टं द्रव्यं तन्मात्रम्। तदेव भूतोपादानम्। विशिष्टशब्दादिविषयाधिकरणं भूतम्। तन्मात्राणि, शब्दतन्मात्रं

---

१६४. भूताद्याख्यात्तामसाहङ्काराद्राजससत्कृतात्।
तन्मात्राणि च पञ्च स्युः खादिभूतानि च क्रमात्॥

१६५. तत्तद्भूताऽव्यवहितसूक्ष्मावस्थाविशेषकम्।
द्रव्यं तन्मात्रसंज्ञं स्यात् शब्दतन्मात्रमादिमम्॥

१६६. द्वितीयं स्पर्शतन्मात्रं रूपतन्मात्रमप्यथ।
चतुर्थं रसतन्मात्रं गन्धतन्मात्रमन्तिमम्॥

---

என்கிற இந்திரியம் ஒன்றே போதும் என்றும் சொல்லும் பக்ஷங்கள். ப்ரத்யக்ஷம் முதலான ப்ரமாணங்களுக்கும், யுக்திக்கும் ஸ்ரீபா$_{4}$ஷ்யம் முதலானவற்றுக்கும் ஒவ்வாதாகையால் அறிவாளிகளால் தள்ளப்படுகின்றன. 107.

164-*168. இனி, பஞ்சபூ$_{4}$தங்களுடைய ஸ்ருஷ்டிப்ரகாரம் விவரிக்கப்படுகிறது. ராஜஸாஹங்காரத்தால் உதவிசெய்யப் பட்ட *பூ$_{4}$தாதி$_{3}$* எனப்பட்ட தாமஸாஹங்காரத்திலிருந்து, மேலே விவரிக்கப்போகும் வரிசையில் *ஐந்து தந்மாத்ரங்களும், ஆகாயம் முதலிய ஐந்து பூ$_{4}$தங்களும்* உண்டாகின்றன. அந்தந்த பூ$_{4}$தங்களை அடுத்து முன்நிலேயிருப்பதும், ஸூக்ஷ்மமான அவஸ்தை$_{2}$யை (நிலையை) உடையதுமான திரவியம் *தன்மாத்ரம்* என்னும் பெயருள்ளதாகிறது. அதில் *ஶப்$_{3}$த$_{3}$தந்மாத்ரம்* முதலாவது; *ஸ்பர்ஶதந்மாத்ரம்* இரண்டாவது; *ரூபதந்மாத்ரம்* மூன்றாவது; *ரஸதந்மாத்ரம்* நான்காவது; *க$_{3}$ந்த$_{4}$தந்மாத்ரம்* ஐந்தாவதும்

स्पर्शतन्मात्रं रूपतन्मात्रं रसतन्मात्रं गन्धतन्मात्रमिति पञ्च। भूतानि च तथा, आकाशं वायुस्तेज आपः पृथिवीति भेदात् ॥ १०८ ॥ तत्र तामसाहङ्काराकाशयोः मध्यमावस्थाविशिष्टं द्रव्यं शब्दतन्मात्रम्। क्षीरदध्नोरन्तराल (ले कलिल) परिणामवत्। तस्मादाकाशो जायते ॥ १०९ ॥ अस्पर्शवत्त्वे सति विशिष्टशब्दाधारत्वम्, श्रोत्राप्यायकत्वं चाकाशलक्षणम्। स च शब्दमात्रगुणकः अवकाशहेतुः, नीलं नभ

---

१६७. पञ्चभूतानि चाकाशवायुज्योतिःपयोभुवः।
तन्मात्रपञ्चकं चेदं भूतोपादानमिष्यते॥

१६८. सूक्ष्मशब्दाद्याश्रयश्च, भूताद्याकाशयोस्तथा।
मध्यावस्थायुतं द्रव्यं शब्दतन्मात्रमिष्यते॥

१६९. क्षीरदध्यन्तरालस्थपरिणामसदृङ्मतम्।
अस्माच्च शब्दतन्मात्रात् आकाशस्योद्भवस्स्मृतः॥

---

கடைசியானதுமாகும். *ஆகாயம், காற்று, தீ, நீர், நிலம்* என்பவை ஐந்து பூ₄தங்களாகும். வெளிப்படையான *ஶப்₃த₃*ம் முதலான கு₃ணங்களில் ஒன்றுக்கோ, பலவற்றிற்கோ இருப்பிடமாயிருப்பது பூ₄தமாகும். ஸூக்ஷ்மமான இவற்றுக்கு இருப்பிடமாயிருப்பது தன்மாத்ரமாகும். முற்கூறிய ஐந்து தந்மாத்ரங்களும், முறையே இவ்வைந்து பூ₄தங்களுக்கும் உபாத₃ான காரணமாகின்றன. 108.

*168-169. 'பூ₄தாதி₃க்கும் ஆகாஶத்திற்கும் நடுவான நிலையையுடையதான திரவியமாயிருக்கை' என்பது *ஶப்₃த₃தந்மாத்ர* லக்ஷணம். பால் தயிராவதற்கு முன் உள்ளதாய், தயிரின் கு₃ணங்கள் வெளிப்படையாகத் தெரியாததாயுள்ள திரவியம் போன்றது இந்த *ஶப்₃த₃*தந்மாத்ரம். ஆகாஶகு₃ணமான *ஶப்₃த₃*ம் இதில் வெளிப்படையாகத் தெரியாததாய் உள்ளது. இந்த *ஶப்₃த₃*தந்மாத்ரத்திலிருந்து ***ஆகாஶம்*** எனும் முதல் பூ₄தம் உண்டாகிறது. 109.

इति प्रतीतेः प्रत्यक्षः, पञ्चीकरणप्रक्रियया च सावयवो रूपवान् (रूपवांश्च)। एतेन आकाशस्याजन्यत्वनिरासः। सूर्यपरिस्पन्दयुक्ताकाशस्यैव (सूर्यपरिस्पन्दादिभिराकाशस्यैव) प्राच्यादिव्यवहारोपपत्तौ दिगिति न पृथग्द्रव्यकल्पनम्। दिक्सृष्टिस्त्वन्तरिक्षादिसृष्टिवदुपपद्यते॥ ११०॥

---

१७०. उद्भूतशब्दाधारत्वं स्पर्शशून्यत्वसंयुतम्।
तथा श्रोत्राप्यायकत्वं तस्याकाशस्य लक्षणम्॥

१७१. स च शब्दैकगुणकः नभो नीलमिति ग्रहात्।
प्रत्यक्षविषयश्चायमवकाशस्य कारणम्॥

---

170-171 'ஸ்பர்ஶமில்லாமலிருக்கச்செய்தே வெளிப்படையான ஶப்₃த₃த்துக்கு ஆதா₄ரமாயிருக்கை' என்பதும், 'காதைப்போஷிப்பதாயிருக்கை' என்பதும் அவ்வாகாசத்திற்கு லக்ஷணங்கள். அது ஶப்₃த₃ம் ஒன்றையே கு₃ணமாக உடையது. "ஆகாயம் நீலமாயுள்ளது" என்று அறியப்படுவதால் இது ப்ரத்யக்ஷத்திற்கு விஷயமாகிறது. அவயவமும் ரூபமுமற்ற ஆகாஶத்தில், மேல் விவரிக்கப்போகும் பஞ்சீகரண ப்ரக்ரியையாலே அவயவமும் ரூபமும் தோற்றக் குறையில்லை. இவ்வாகாஶம் எல்லாப்பொருள்களுக்கும் இடமளிக்கக் காரணமாகிறது. இப்படி ஶப்₃த₃தன்மாத்ரத்திலிருந்து உண்டாவதாகையால் ஆகாஶம் நித்யமானது என்னும் பக்ஷம் தவறுனது. ஸூர்யனுடைய க₃திபே₄த₃த்தோடுகூடிய ஆகாஶமே கிழக்கு, மேற்கு முதலான தி₃க்குகளாக வழங்கப்படுவதால், தி₃க்கைத் தனித்தத்துவமாகக் கொள்ளமுடியாது. *"தி₃ஶ: ஶ்ரோத்ராத்"* என்று புருஷஸூக்தத்தில் தி₃க்குகளுக்கு ஆகாஶத்தைக் காட்டிலும் தனியாக ஸ்ருஷ்டி சொல்லியிருக்கிறதே எனில்: *"நாப்₄யா ஆஸீத₃ந்தரிக்ஷம்"* என்று ஆகாஶத்திலும் வேறுபடாத அந்தரிக்ஷத்திற்கு ஆகாஶத்தைக் காட்டிலும் தனியாக ஸ்ருஷ்டி சொல்லப்பட்டபோதிலும் அந்தரிக்ஷலோக ஸ்ருஷ்டியைக் கூறுவதாகக்கொள்வதுபோல், இங்கும் தி₃க்கு

आकाशात् स्पर्शतन्मात्रम्। आकाशवाय्वोर्मध्यमावस्थाविशिष्टं द्रव्यं स्पर्शतन्मात्रम्। तस्माद्वायुः ॥ १११ ॥ विशिष्टस्पर्शवत्त्वे सति रूपशून्यत्वम्, अस्मदादिस्पर्शनैकेन्द्रियग्राह्यद्रव्यत्वम्, अनुष्णाशीत-विशिष्टस्पर्शवत्त्वे सति रूपशून्यत्वमित्यादिकं वायोर्लक्षणम्। तस्मिन् नानासलिलातपकुसुमादि( द्यवयव )योगात् शीतोष्णसौरभादिव्यपदेशः। स च त्वगिन्द्रियाप्यायकत्वेनोपकरोति। तस्य शब्दस्पर्शौ गुणौ।

---

१७२. अकाशात्स्पर्शतन्मात्रं द्रव्यमाकाशवातयोः।
मध्यावस्थायुतं चेदमस्माद्वायूद्भवस्स्मृतः ॥

१७३. उद्भूतस्पर्शयुग्रूपशून्यत्वाद्यस्य लक्षणम्।
त्वगिन्द्रियाप्यायकश्च शब्दस्पर्शगुणान्वितः ॥ 4465

---

களனைத்திலுமுள்ள லோகஸ்ருஷ்டியைக் கூறுவதாகக்கொள்ள லாமாகையால் குறையில்லை. 110.

172. ஆகாஶத்திலிருந்து *ஸ்பர்ஶதந்மாத்ரம்* உண்டாகிறது; 'ஆகாஶத்திற்கும், வாயுவிற்கும் நடுவான நிலையையுடைய திரவியமாயிருக்கை' என்பது ஸ்பர்ஶதந்மாத்ரலக்ஷணம். இதிலிருந்து வாயுவென்னும் இரண்டாவது பூ₄தம் உண்டாகிறது. 111.

173-174. ரூபமில்லாமலிருக்கச்செய்தே வெளிப்படையான ஸ்பர்ஶத்தை உடைத்தாயிருக்கை, நம்மைப்போன்றவர்களுடைய 'த்வக்' எனும் ஓரிந்திரியத்தாலேயே அறியத்தக்க த்₃ரவ்யமாயிருக்கை, உஷ்ணமும், குளிர்த்தியுமில்லாத ஸ்பர்ஶத்தோடு கூடியிருந்துகொண்டு ரூபமற்றிருக்கை முதலானவை இதன் லக்ஷணம். இதில் நீர், வெயில், பூ முதலான பொருள்களின் ஸம்யோக₃த்தால், 'குளிர்ந்த, அல்லது உஷ்ணமான, அல்லது மணம்மிக்க காற்று' முதலான வழக்குகள் ஏற்படுகின்றன. இது 'த்வக்' எனும் ஞானேந்திரியத்தைப் போஷிப்பது; ஶப்₃த₃ம், ஸ்பர்ஶம் என்னும் இரண்டு கு₃ணங்களையுடையது. தே₃ஹம், இந்திரியம் முதலானவை த₄ரித்து நிற்பதுக்குக்

तत्र, शरीरधारणादिहेतुर्वायुविशेषः प्राणः। स च पञ्चप्रकारः, प्राणापानव्यानोदानसमानभेदात्। हृदि प्राणः, गुदेऽपानः, सर्वशरीरगो व्यानः, कण्ठे उदानः, नाभिदेशे समानः इति नियमो जङ्गमेष्वेव। स्थावरेषु तु प्राणसंबन्धस्स्वल्प एव। वायोस्स्पार्शनप्रत्यक्षत्वेनानुमेयवादनिरासः॥ ११२॥ वायुतेजसोर्मध्यमावस्थाविशिष्टं द्रव्यं रूपतन्मात्रम्। तस्मात्तेजः॥ ११३॥ उष्णस्पर्शवत्त्वभास्वररूपवत्त्वादिकं

---

१७४. देहादिधृतिहेतुर्यो वायुः प्राण इतीर्यते।
स च पञ्चप्रकारस्स्यात् प्राणापानादिभेदतः॥

१७५. वायोश्च रूपतन्मात्रं वायुज्वलनयोस्तथा।
मध्यावस्थायुतं द्रव्यं अस्मात्तेजः प्रजायते॥

---

காரணமானதொரு வாயுவே 'ப்ராணன்' எனப்படுகிறது. அது *ப்ராணன், அபானம், வ்யானம், உதா₃னம், ஸமானம்* என்று ஐவகைப்படும். ஜங்க₃ம (அசையும்) *ஶரீரங்களிலேயே* இருதயத்தில் ப்ராணனும், கு₃த₃த்தில் அபானமும், *ஶரீரம்* முழுவதிலும் வ்யானமும், தொண்டையில் உதா₃னமும், நாபி₄யில் ஸமானமும் இருக்கின்றன. ஸ்தா₂வர *ஶரீரங்களில்* ப்ராணஸம்ப₃ந்த₄ம் ஸ்வல்பமே. வாயுவை 'த்வக்' எனும் இந்திரியத்தால் ப்ரத்யக்ஷமாக அறிகிறோம். ஆகையால், அது ஸ்பர்*ஶ*த்தாலே அநுமானம் செய்யப்படுகிறது என்ற வை*ஶே*ஷிகமதம் தள்ளப்படுகிறது. 112.

175. வாயுவிலிருந்து *ரூபதந்மாத்ரம்* உண்டாகிறது. 'வாயுவுக்கும், தீக்கும் நடுவான நிலையையுடைய திரவியமாயிருக்கை' என்பது ரூபதந்மாத்ரலக்ஷணம். இதிலிருந்து '*தேஜஸ்*', '*அக்னி*', '*தீ*', '*நெருப்பு*' என்றுசொல்லப்படும் மூன்றுவது பூ₄தம் உண்டாகிறது. 113.

176-178 உஷ்ணமான ஸ்பர்*ஶ*த்தை உடைத்தாயிருக்கை, வெளிப்படையான ஒளியுள்ள ரூபத்தை உடைத்தாயிருக்கை

तु तेजसो लक्षणम्। तस्य बहिः पचनादिहेतुत्वमग्निसूर्यात्मना, अन्तर्वैश्वानरसंज्ञकजाठराग्निरूपेण। दिवाभीतादिव्यतिरिक्तानां चाक्षुषज्ञाने आलोकद्वारा सहकारि च भवति। तच्चतुर्धा, भौमं दिव्यमुदर्यमाकरजं चेति। तत्र पार्थिवमात्रेन्धनं तेजो भौमं दीपादि। जलमात्रेन्धनं दिव्यं सूर्यादि। जलपार्थिवेन्धनमुदर्यं जाठ(रं)रादि। निरिन्धनं तेज आकरजं सुवर्णादि। सुवर्णस्य द्रव्यान्तरसंसर्गादुष्ण-

---

१७६. एतदुष्णस्पर्शवच्चोद्भूतभास्वररूपवत्।
इदं चतुर्धा भिन्नं स्यात् भौमदिव्यादिभेदतः॥

१७७. दीपादितेजो भौमं स्यात् पार्थिवेन्धनमेव तत्।
जलमात्रेन्धनं दिव्यं तच्च सूर्यादिकं भवेत्॥

---

முதலானவை தேஜஸ்ஸின் லக்ஷணம். இதுவே அக்₃னி; ஸூர்யன் முதலானவையாயிருந்துகொண்டு சமைத்தல் முதலான கார்யங்களை வெளியுலகில் செய்கிறது. இதுவே உடலினுள் வைச்வானரன் எனும் ஜாட₂ராக்₃னியாயிருந்துகொண்டு உண்ட உணவை ஜரிக்கச்செய்கிறது. இதுவே சூரியன் விளக்கு முதலானவற்றின் ஒளியாயிருந்துகொண்டு, கோட்டான் முதலான சில ஜந்துக்கள் தவிர மற்ற ப்ராணிகளுக்குக் கண்ணால் உண்டாகும் அறிவுக்குக் காரணமாகிறது. இவ்வக்₃னியானது *பௌ₄மம், தி₃வ்யம், ஔத₃ர்யம், ஆகரஜம்* என்று நாலுவகைப் படும். பிருதி₂வியைச் சேர்ந்த எண்ணெய் விறகு முதலானவற்றை மாத்திரம் இந்த₄னமாகக் –(எரிபொருளாகக்)- கொண்ட விளக்கு, சமயலறைத்தீ முதலானவை *பௌ₄மம்* எனப்படும். ஜலத்தை மாத்திரம் எரிபொருளாகக்கொண்ட சூரியன் மின்னல் முதலானவை *தி₃வ்யம்* எனப்படும். ஜலத்தையும், பிருதி₂வீபா₄க₃த்தையும் மாத்திரம் எரிபொருளாகக்கொண்டதாய், வயிற்றிலுள்ளதான *ஜாட₂ராக்₃னியே ஔத₃ர்யம்* எனப் படும். எரிபொருளே இல்லாததாய் சுரங்கத்திலிருந்து தோன்றும் தங்கம் முதலானவை *ஆகரஜம்* எனப்படும். இதில் பிருதி₂வீ

स्पर्शाभावः ॥ ११४ ॥ पुनस्सामान्येन प्रभा प्रभावांश्चेति विभक्तम्। आवरणसदसद्भावाधीनसंकोचविकासप्रसारितेजोविशेषः प्रभा। सा च प्रभावद्भिस्सहोत्पद्यते, सह नश्यति। द्रव्यरूपा गुणभूता सावयवा च। अनेन प्रभायाः केवलगुणत्वमतनिरासः। प्रभाविशिष्टं तेजः प्रभावत्। तत्र चतुर्विधमिति प्रतिपादितम् ॥ ११५ ॥

---

१७८. औदर्यं जाठरादि स्यात् जलपार्थिवदीपितम्।
सुवर्णं स्यादाकरजं इदं तेजो निरिन्धनम् ॥

१७९. प्रभाप्रभावद्भेदेन पुनस्तेजो द्विधा भवेत्।
प्रभेयं द्रव्यरूपा स्यात् गुणभूता प्रभावतः ॥

---

பாகமும் அதிகமாகச் சேர்ந்திருப்பதால் உஷ்ணஸ்பர்சம் முதலான தேஜோகுணம் தோன்றுவதில்லை. 114.

179-*180. எல்லாவிதமான இந்தத் தேஜஸ்ஸுக்களும், *ப்ரபை (ஒளி)* என்றும், *ப்ரபாவாந் (ஒளியுடையது)* என்றும் இருவகைப்படும். தடையிருந்தால் சுருங்குவதையும், தடையில்லாவிடில் விரிவதையும் இயற்கையாகக்கொண்டதாய், நாற்புறமும் விரியும் தன்மையுள்ளதான தேஜஸ்ஸே *ப்ரபை (ஒளி)* எனப்படும். உதாஹரணம் :— சூரிய வெளிச்சமும் விளக்கொளியும். ஒளியானது ஒளிவிடும் ரூபம் முதலான குணங்களுக்கு இருப்பிடமாயிருப்பதால் திரவியமாகவும் ஆகிறது. ஒளியாகிற தன்னையுடைய பொருளுக்கு குணமாகவும் ஆகிறது. தடையால் சுருங்குவதையும், தடை நீங்கினால் விரிவதையும் காண்கையாலே, இது *ஸாவயவம்* (அவயவங்களோடு கூடியது) என்று நிச்சயிக்கப்படுகிறது. இத்தால், ஒளியானது, ரூபம் முதலானவற்றைப்போல் வெறும் குணம் என்னும் பக்ஷம் தள்ளப்படுகிறது. தனக்கு இருப்பிடமான *ஒளியுடைய பொருள்* தோன்றும்போது தோன்றி, அது அழியும்போது அழியும் தன்மையையுடையது இவ்வொளி. 115.

ततेजः शब्दस्पर्शरूपगुणवच्च ॥११६॥ तेजस्सलिलयोर्मध्यमावस्था-विशिष्टं द्रव्यं रसतन्मात्रम्। तस्मादापः॥११७॥ शीतस्पर्शवत्त्वं निर्गन्धत्वे सति विशिष्टरसवत्त्वमित्यादि अपां लक्षणम्। तासां

---

१८०. सेयं सावयवा साच्च जनिनाशौ च धर्मिणा।
वाचा च चक्षुषा युक्तं तेज आप्यायकं तयोः॥

१८१. इदं शब्दस्पर्शरूपगुणत्रितयभाक् भवेत्।
तेजसो रसतन्मात्रं तेजस्सलिलयोरिदम्॥

१८२. मध्यावस्थायुतं द्रव्यमस्मादुत्पद्यते जलम्।
अस्य शीतस्पर्शवत्त्वं गन्धशून्यत्वसंयुतम्॥

१८३. विशिष्टरसवत्त्वादि लक्षणं बुधसंमतम्।
इदं बहुप्रकारं च समुद्रसरिदादिना॥

---

180*-*181. '*வாக்*' எனும் இந்திரியத்தோடும், '*கண்*' எனும் இந்திரியத்தோடும் கூடியிருந்து, இத்தேஜஸ் தத்துவம் அவ்விந்திரியங்களைப் போஷிக்கிறது. இது *ஶப்தம், ஸ்பர்ஶம், ரூபம்* என்னும் மூன்று குணங்களை உடையது. 116.

181*-*182. தீயிலிருந்து *ரஸதந்மாத்ரம்* உண்டாகிறது. தேஜஸ்ஸிற்கும், ஜலத்திற்கும் நடுவான நிலையை உடைய திரவியம் என்பது ரஸதந்மாத்ரலக்ஷணம். இதிலிருந்து *அப்பு, நீர், ஜலம்* என்னும் நான்காவது பூதம் உண்டாகிறது. 117.

182*-184. குளிர்ந்த ஸ்பர்ஶத்தை உடையதாயிருக்கை, கந்தமற்றதாயிருந்துகொண்டு வெளிப்படையான ரஸமுடையதாயிருக்கை முதலானவை, ஜலத்துக்கு லக்ஷணமாக அறிவாளிகளால் அறுதியிடப்பட்டுள்ளன. வெள்ளைநிறம், இனிமைச் சுவை, குளிர்ந்த ஸ்பர்ஶம் ஆகியவை ஜலத்தின் இயல்வு. வேறு நிறம், சுவை, ஸ்பர்ஶம் இதில் காணப்படுவது, அவற்றைக்

शुक्लमधुरशीतस्पर्शैकस्वभावानां आश्रयादिभिर्भेदात् रूपरसस्पर्शैश्चित्रसा-रोपः। ताः समुद्रसरिदादिरूपेण बहुप्रकाराः। शब्दस्पर्शरूपरस-गुणाश्च। सेचनपिण्डीकरणादिहेतवश्च ॥ ११८ ॥ अप्पृथिव्योर्मध्या-वस्थाविशिष्टं द्रव्यं गन्धतन्मात्रम्। तस्मात् पृथिवी ॥ ११९ ॥ विशिष्ट-गन्धवत्त्वम्, रसवत्त्वे सति अनुष्णाशीतस्पर्शवत्त्वमित्यादि पृथिवी-

---

१८४. एताश्चाप्यायकं घ्राणरसनेन्द्रिययोस्सदा।
तथा शब्दस्पर्शरूपरसानामाश्रया मताः॥

१८५. जलाच्च गन्धतन्मात्रं जलपृथ्व्योरिदं तथा।
मध्यावस्थायुतं द्रव्यमस्मादुत्पद्यते मही॥

१८६. विशिष्टगन्धवत्त्वं च रसवत्त्वयुतं भुवः।
अनुष्णाशीतसंस्पर्शवत्त्वमित्यादि लक्षणम्॥

---

கொண்ட வேறு பூதங்களின் சேர்த்தியாலேயேயாகும். கடல் என்றும் நதியென்றும் ஜலம் பலவிதமாயுள்ளது. இது ப்ராணனையும் 'நாக்கு' எனும் இந்திரியத்தையும் எப்போதும் போஷிப்பது. ஶப்தம், ஸ்பர்ஶம், ரூபம், ரஸம் என்னும் நான்கு குணங்களையுடையது இந்த ஜலதத்துவம். இது நனைத்தல், பிடித்துவைத்தல் முதலிய காரியங்களுக்கு உதவுகிறது. 118.

185. ஜலத்திலிருந்து *கந்ததந்மாத்ரம்* உண்டாகிறது. ஜலத்திற்கும், ப்ருதிவிக்கும் நடுவான நிலையையுடைய திரவியம் என்பது கந்ததந்மாத்ரலக்ஷணம். இதிலிருந்து *ப்ருதிவீ* எனப்படும் ஐந்தாவது பூதம் உண்டாகிறது. 119.

186-187. வெளிப்படையான கந்தமுடையதாயிருக்கை, ரஸத்தோடு கூடியிருந்துகொண்டு உஷ்ணமும், குளிர்த்தியுமற்ற ஸ்பர்ஶத்தை உடைத்தாயிருக்கை முதலானவை ப்ருதிவியின் லக்ஷணம். மனத்தையும், 'மூக்கு' எனும் இந்திரியத்தையும் போஷிப்பது இது. நறுமணம், இனிமைச்சுவை, கருமைநிறம்,

लक्षणगन्धः। सा सुरभिः मधुरा कृष्णरूपा अनुष्णाशीतस्पर्शवती। पाकभेदात् (पाकजभेदात्तु) विचित्रवर्णगन्धरसा च। मनोघ्राणाप्यायकत्वेनोपकरोति। मृत्पाषाणान्नौषधादिबहुप्रकारवती शब्दस्पर्शरूपरसगन्धगुणका धारणहेतुश्च ॥ १२० ॥ तमसः पृथिव्यामन्तर्भावः।

---

१८७. मनोघ्राणाऽऽप्यायिका च बहुरूपा शिलादिना।
अस्या शब्दस्पर्शरूपरसगन्धा गुणा मताः॥

---

உஷ்ணமும் குளிர்த்தியுமற்ற ஸ்பர்ஶம் ஆகியவை ப்ருதி₂வியின் இயல்வு. மற்ற பூ₄தங்களின் சேர்த்தியால் பக்குவத்தில் மாறுபாடுகள் ஏற்படும்போது மற்ற மணம், சுவை, நிறம், ஸ்பர்ஶம் ஆகியவை உண்டாகின்றன. கல், மண்கட்டி, அன்னம், ஔஷத₄ம் முதலாகப் பல வகைப்பட்டிருப்பது இது. ஶப்₃த₃ம், ஸ்பர்ஶம், ரூபம், ரஸம், க₃ந்த₄ம் என்னும் ஐந்து குணங்களை யுமுடையதாக அறிவாளிகள் இதை உரைக்கின்றனர். இது பொருள்களை த₄ரிப்பதுமாகும். ஆகாஶம் முதலான ஐந்து பூ₄தங்களும், ஶப்₃த₃ம் முதலான ஐந்து கு₃ணங்களில் முறையே ஒன்றுமுதல் ஐந்து குணங்களையும் உடையனவென்பதையும், அக்குணங்கள் அவற்றுக்கு எம்பெருமானிட்ட பிச்சையே யாகையால் அவனென்றே சொல்லத்தக்கவையென்பதையும்

"பூநிலாய ஐந்துமாய்ப் புனற்கண் நின்ற நான்குமாய்
தீநிலாய மூன்றுமாய்ச் சிறந்த காலிரண்டுமாய்
மீநிலாய தொன்றுமாகி வேறுவேறு தன்மையாய்
நீ நிலாய வண்ண நின்னை யார் நினைக்கவல்லரே"

என்று திருச்சந்தவிருத்தத் தொடக்கத்தில் திருமழிசையாழ்வார் அருளிச்செய்தார். 120.

188. 'தமஸ்' (இருட்டு) என்னும் பொருள் திரவியமே யாகும். பிருதி₂வீகு₃ணமான 'நீலம்' (கருமை) அதிலிருப்பதால், அது பிருதி₂வியில் அடங்கியது. "தமஸ்ஸு பார்த்தி₂வமான திரவியம்; 'இருட்டு கறுத்தது' என்னும் பா₃தி₄க்கப்படாத ப்ரத்யக்ஷ ஜ்ஞானத்துக்கு விஷயமாயிருப்பதால். கறுத்த

तद्गुणकत्वात् तद्व्यक्त्यन्तरत्वाद्वा । अत एव आलोकाभाव एवं तमः, न द्रव्यान्तरमित्यादिपक्षा निरस्ताः ॥ १२१ ॥

---

१८८. तमो द्रव्यं पृथिव्यां तदन्तर्भूतं गुणान्वयात् ।
तद्व्यक्त्यन्तरत्वाद्वा नालोकाभावमात्रकम् ॥

---

குடத்தைப்போல்" என்பது, இதை ஸாதி₄க்கும் அனுமானம். 'பிருதிவியின் மற்றோர் விசேஷாயிருக்கை' என்னும் ஹேதுவைக் கொண்டும் 'தமஸ்ஸு' த்ரவ்யம் என்பதை ஸாதி₄க்கலாம். இதனால் 'வெளிச்சத்தின் இன்மையே இருட்டாகும்; அது வேறு திரவியமன்று' முதலிய பக்ஷங்கள் தள்ளுண்டதாகின்றன. 'தமஸ்' எனும் இருட்டு த்₃ரவ்யமே என்பதை,

"தமோ நாம த்₃ரவ்யம் ப₃ஹுளவிரளம் மேசகசலம்
ப்ரதிம: கேநாபி க்வசித₃பி ந பா₃த₄ஶ்ச த₃த்₃ருஶே ।
அத: கல்ப்யோ ஹேது: ப்ரமிதிரபி ஶாப்₃தி₃ விஜயதே
நிராலோகம் சக்ஷு: ப்ரத₃யதி ஹி தத்₃த₃ர்ஶநவஶாத் ॥"

[ஒருசமயம் அதி₄கமாகவும், மற்றொரு சமயம் குறைவாகவும், கறுத்தும் அசைவதாகவும் 'தமஸ்' (இருட்டு) என்னும் திரவியத்தை ப்ரத்யக்ஷமாகக் காண்கிறோம். எவராலும் எங்கும் இக்காட்சிக்குத் தடை காணப்படவில்லை; ஆகையால் இது த்₃ரவ்யம் என்பதை ஸாதி₄க்கும் ஹேதுவைக்கற்பிக்கவேண்டும்; *'தம: ஸஸர்ஜ'* [தமஸ்ஸை ஸ்ருஷ்டித்தான்] என்னும் ஶப்₃த₃ ப்ரமாணமும் விளங்குகிறது. வெளிச்சமின்மையைப்போலே, இத்தமஸ்ஸையும் ஒளியில்லாமலிருக்கும்போதே கண் காட்டும் இயல்புடையது; லோகத்தில் அப்படிக்காண்கையால்.] என்று நடாதூரம்மாள் தத்வஸாரத்தில் நிரூபித்தருளினார். ஆக, இவ்வளவால் ப்ரக்ருதி தொடங்கி, பிருதிவி முடிவாக இருபத்துநாலு அசேதநதத்துவங்களும் விவரிக்கப்பட்டன. 121.

189-193. ஐந்து பூ₄தங்களிலும், ஶப்₃த₃ம் முதலான எல்லா கு₃ணங்களும் தோன்றுகின்றன. உதா₃ஹரணமாக, ரூபமற்ற

भूतेषु सर्वत्र पञ्चीकरणप्रक्रियया शब्दादीनां गुणानामुपलम्भः। पञ्चीकरणप्रक्रिया तु, भगवान् भूतानि सृष्ट्वा एकैकमेव भूतं द्विधा कृत्वा द्वयोर्भागयोः स्वभागमेकं निधाय भागान्तरं चतुर्धा करोति। तान् चतुर्भागान् भूतान्तरेषु चतुर्षु योजयति। एवं सर्वेषु भूतेषु क्रियमाणेषु एकैकस्य भूतस्यार्धं स्वभागः, अर्धान्तरं चतुर्णां भूतानां

---

१८९. पञ्चभूतेषु शब्दादिगुणस्फुरणकारणम्।
पञ्चीकारप्रक्रिया स्यात् शास्त्रोक्ता सा निरूप्यते॥

१९०. विष्णुर्भूतानि सृष्ट्वादावेकैकमकरोत् द्विधा।
निधायैकं चाविभक्तं चतुर्धान्यं विभक्तवान्॥

१९१. भूतान्तरेषु तान् भागान् संयुनक्ति चतुर्ष्वपि।
आकाशादिष्वेवमेव क्रियमाणेषु पञ्चसु॥

१९२. एकैकभूतस्यार्धं च स्वभागोऽर्धान्तरं तथा।
चतुर्णामपि भूतानां भागानां स्याच्चतुष्टयम्॥

---

ஆகாசத்திலும் ரூபம் தோன்றுகிறது. இதற்குக் காரணமென்ன வெனில்: *பஞ்சீகரணம்* என்னும் ப்ரக்ரியையேயாகும். சாஸ்திரங்களில் விவரிக்கப்பட்ட ரீதியில் அது இனி நிரூபிக்கப்படுகிறது :— ப$_4$க$_3$வான் விஷ்ணுவானவர் ஆதி$_3$யில் ஐந்து பூ$_4$தங்களையும் ஸ்ருஷ்டிசெய்து ஒவ்வொரு பூ$_4$தத்தை இரண்டிரண்டு பாதிகளாக ஆக்கினார். ஒவ்வொரு பூ$_4$தத்திலும் ஒருபாதியை அப்படியே வைத்துக்கொண்டு, மறுபாதியை நாலு பகுதிகளாகப் பிரித்தார். அந்த நாலு பகுதிகளில் ஒவ்வொன்றை மற்ற நாலு பூ$_4$தங்கள் ஒவ்வொன்றிலும் ஒவ்வொரு பகுதியாகச் சேர்த்தார். இப்படி ஆகாசம் முதலிய ஐந்து பூ$_4$தங்களையும் பிரித்துச் சேர்த்தவளவில். ஒவ்வொரு பூ$_4$தத்திலும் தன் பகுதி பாதியும், மறுபாதியில் நாலில் ஒருபங்கு மற்ற நாலு பூ$_4$தங்களுமாயிருக்கிறது. உதா$_3$ஹரணமாக-ஆகாசமெனும் பூ$_4$தத்தில் ஆகாசம் பாதியும், வாயு, அக்$_3$னி, நீர், பூ$_4$மி என்னும் நாலு பூ$_4$தங்கள்

भागसमुच्चयो भवति। तथाऽत्र स्वभागस्य भूयस्त्वात्, परभागस्याल्पीय-स्त्वाच्च पृथिव्यादिव्यपदेशः ॥ १२२ ॥ वेदे त्रिवृत्करणोपदेशस्तु पञ्ची-करणस्याप्युपलक्षणम्। भूतैस्साकं महदहङ्कारौ मिलित्वा सप्तीकरण-मित्यप्याहुः ॥ १२३ ॥ एतेषु चतुर्विंशतिसंख्याकेषु पञ्चभूतानि

---

१९३. स्वभागस्य च भूयस्त्वात् परभागेषु सत्स्वपि।
पृथ्व्यादिव्यपदेशस्स्यात्तत्तद्भूतेषु पञ्चसु ॥

१९४. त्रिवृत्कृतिवचो वेदे पञ्चीकारोपलक्षकम्।
पञ्चभूतमहत्तत्त्वाहङ्काराणां च मिश्रणम् ॥

१९५. सप्तीकरणं, अस्यापि तद्वचश्चोपलक्षकम्।
पञ्चभूताव्यक्तमहदहङ्काराख्यमष्टकम् ॥

---

ஒவ்வொன்றும் அரைக்கால் பகுதியும் கலந்திருக்கின்றன. இப்படியே மற்ற பூ₄தங்களிலும், இப்படி ஐந்து பூ₄தங்களிலும் ஒன்றில் மற்றொன்றைக் கலக்கும் முறையே *பஞ்சீகரண ப்ரக்ரியை* எனப்படுகிறது. ஒவ்வொரு பூ₄தத்திலும் மற்ற பூ₄தங்கள் கலந்திருந்தபோதிலும் தன் பகுதியே அதி₄கமாக இருப்பதால் அந்தந்த பூ₄தங்கள் பூ₄மி, நீர், தீ, வாயு, ஆகாஶம் என்றே அழைக்கப்படுகின்றன. 122.

194-*195. வேத₃த்தில் தீ, நீர், பூ₄மி என்னும் மூன்று பூ₄தங்களும் ஒன்றோடொன்று கலக்கப்பெறுவதாகிற *த்ரிவ்ருத் கரணம்* சொல்லப்பட்டிருக்கிறது. இது *பஞ்சீகரணத்தையும்* உபலக்ஷிக்கிறது. விஷ்ணுபுராணத்தில், ஐந்து பூ₄தங்களோடு, 'மஹான்' 'அஹங்காரம்' என்னும் தத்துவங்களும் சேர்க்கப் படுவதாகச் சொல்லப்படுகிறது. இது ஸப்தீகரணம் எனப்படும். வேத₃த்தில் ஓதப்படும் த்ரிவ்ருத்கரணவசனம் இந்த ஸப்தீ கரணத்தையும் உபலக்ஷிக்கிறது. 123.

195*-*197. ஐந்து பூ₄தங்கள், அவ்யக்தமெனப்படும் ப்ரக்ருதி, மஹான், அஹங்காரம் என்னும் எட்டும் ஶரீரத்திற்கு

प्रकृतिमहदहङ्काराश्च शरीरोपादानानि। एकादशेन्द्रियाणि प्रत्येकम-संख्यानानि प्रतिपुरुषं भिन्नानि आभरणार्पितरत्नानीव शरीरमाक्रम्य तिष्ठन्ति॥ १२४॥

शरीरं नाम चेतनं प्रत्याधेयत्वविधेयत्वशेषत्वनियमैरपृथक्सिद्धो द्रव्यविशेष इत्येकं लक्षणम्। नियमेन यदाधेयम्, नियमेन यद्विधेयम्,

---

१९६. उपादानं शरीरस्य भिन्नानि प्रतिपूरुषम्।
इन्द्रियाणि स्युरेतानि स्वर्णन्युप्तरत्नवत्॥

१९७. भूषयन्ति शरीराणि तेषां संख्या न विद्यते।
नियमेन यदाधेयं विधेयं नियमेन च॥

१९८. नियमेन च यच्छेषं द्रव्यं यच्चेतनस्य तत्।
तस्य वर्ष्म भवत्यत्र लक्षणत्रयमिष्यते॥

---

உபாதா₃ன காரணமாகின்றன. பதினொரு இந்திரியங்களும் ஒவ்வொரு புருஷனுக்கும் தனித்தனியாயிருக்கின்றன. பொன்னகையில் பதிக்கப்பெற்ற ரத்தினங்கள்போலே இவைகள் *ஶரீரங்களை* அலங்கரிக்கின்றன. ஒவ்வொரு வகையான இந்திரியத்திற்கும் தொகையில்லை. 124.

197*-*199. இனி, *ஶரீரலக்ஷணம்* விசாரிக்கப்படுகிறது. யாவனொரு சேதனனுக்கு, யாதொரு திரவியம் எப்போதும் த₄ரிக்கப்படுவதாகவும், எப்போதும் ஏவப்படுவதாகவும், எப்போதும் உடைமைப்பொருளாகவும் உள்ளதோ, அந்த திரவியம் அந்தச் சேதனனுக்கு *ஶரீரம்* என்பது *ஶரீரலக்ஷணம்*. இதில் *ஶரீரத்து*க்கு மூன்று லக்ஷணங்கள் அடங்கியுள்ளன. அவையாவன :— 1. எது தானிருக்கும் வரையில் எந்தச்சேதனனால் எப்போதும் தாங்க(த₄ரிக்க)ப்படுகிறதோ, அது அவனுக்கு *ஶரீரம்*. 2. எது தானிருக்கும் வரையில் எந்தச்சேதனனால் எப்போதும் ஏவப்படுகிறதோ, அது அவனுக்கு *ஶரீரம்*. 3. எது தானிருக்கும்

नियमेन यच्छेषम्, तदेव तस्य शरीरं च भवति। ईश्वरतज्ज्ञान-व्यतिरिक्तद्रव्यमिति च सामान्यलक्षणम्। अन्ये—चेष्टाश्रयः शरीरम्, इन्द्रियाश्रयः शरीरम्, भोगायतनं शरीरम्, शिरःपाणिपादादिमत् शरीरमित्यादीनि [illegible] शरीरलक्षणानि निरस्तानि ॥ १२५ ॥

---

१२६. [illegible] दोषदुष्टानि सर्वथा।
शरीरं द्विविधं नित्यमनित्यं चेति भेदतः ॥

---

வரையில் எந்தச் சேதனனுக்கு எப்போதும் ஶேஷமாய் (உடைமையாய்) உள்ளதோ, அது அவனுக்கு ஶரீரம். இந்த மூன்று லக்ஷணங்களிறல் ஏற்பட்டதாய், ஸ்ரீபாஷ்யகாரஸம்மதமாயிருக்கும் லக்ஷணம் ஒன்றுமுண்டு. 'எந்தச் சேதனனுக்கு எந்த அவஸ்தையில் அவனை விட்டுப் பிரிந்திருக்க முடியாத விஶேஷணமாய் எந்த த்₃ரவ்யம் இருக்கிறதோ, அந்த அவஸ்தை₂யில் அது அவனுக்கு ஶரீரம்'' என்பது அது. ஈஶ்வரன், அவனுடைய ஜ்ஞானம் ஆகிய இவை தவிர்ந்த த்₃ரவ்யம் ஶரீரம் என்று ஶரீரமனைத்துக்கும் பொதுவான லக்ஷணம். இவையனைத்தும் ஈஶ்வரனுக்கு ஶரீரமாயுள்ளன வன்றோ. பிற மதத்தவர்கள், — ''சேஷ்டாஶ்ரயம் ஶரீரம்; இந்த்₃ரியாஶ்ரயம் ஶரீரம்; போ₄கா₃யதநம் ஶரீரம்; தலை, கை, கால் முதலியவையுடையது ஶரீரம்'' என்றெல்லாம் ஶரீரத்திற்கு லக்ஷணமுரைத்தனர். சேஷ்டை (செயல்), கைகால் முதலியவை ஆகியவை இல்லாத கல் முதலானவையும் சில சேதனர்க்கு ஶரீரமாவதால் சேஷ்டாஶ்ரயம் ஶரீரம் முதலிய லக்ஷணங்கள் பொருந்தமாட்டா. உலகெல்லாம் ப₄க₃வானுக்கு ஶரீரமாவதால் சேஷ்டாஶ்ரயம் ஶரீரம், இந்த்₃ரியாஶ்ரயம் ஶரீரம், போ₄கா₃யதனம் ஶரீரம்; தலை, கால் முதலியவையுடையது ஶரீரம் என்பவை ப₄க₃வச்ச₂ரீரமான உலகிற்கு ஒட்டமாட்டா. இந்த லக்ஷணங்களில் மற்றும் பல தோ₃ஷங்களுண்டு. ஆகையால் முற்கூறியவையே ஶரீரலக்ஷணமாகும். 125.

शरीरं द्विविधम्—नित्यमनित्यमिति। तत्र नित्यं त्रिगुणद्रव्यकालजीवशुभाश्रयादिकमीश्वरशरीरम्, नित्यसूरीणां स्वाभाविकं गरुडभुजगादिरूपं च॥१२६॥ अनित्यं द्विविधम्—अकर्मकृतं कर्मकृतं चेति। प्रथममीश्वरस्य महदादिरूपम्। तथाऽनन्तगरुडादीनां मुक्तानामीश्वरस्य च इच्छागृहीतं तत्तद्रूपम्॥ कर्मकृतमपि द्विविधम्—

---

२००. त्रैगुण्यकालजीवादिशरीरं नित्यमीशितुः।
शुभाश्रयश्च सूरीणां नित्यं स्वाभाविकं वपुः॥

२०१. कर्माकृतं तत्कृतं चेत्यनित्यमपि च द्विधा।
महदादीशितू रूपं नित्यमुक्तात्मनां तथा॥

२०२. इच्छागृहीतं तत्तच्च कर्माकृतमितीर्यते।
तत्कृतं च द्विधा भिन्नं सङ्कल्पयुतकर्मजम्॥

---

199*-200. *நித்யஶரீரம்* என்றும் *அநித்யஶரீரம்* என்றும் ஶரீரம் இருவகைப்படும். ஸத்வம், ரஜஸ், தமஸ் எனும் முக்கு$_3$ணங்களுள்ள *ப்ரக்ருதி, காலம், ஜீவன்கள், 'ஶுபா$_4$ஶ்ரயம்'* எனப்படும் ப$_4$க$_3$வானுடைய தி$_3$வ்யமங்க$_3$ளவிக்$_3$ரஹம் ஆகியவை எம்பெருமானுக்கேயும், அநந்தன், க$_3$ருட$_3$ன் முதலான நித்ய ஸூரிகளின் இயற்கையான ஶரீரங்கள் நித்யஸூரிகளுக்கும் அழிவில்லாத *நித்யஶரீரங்கள்.* 126.

201-203. அழிவுள்ளதான *அநித்யஶரீரம், கர்மத்திறல் உண்டு பண்ணப்படாத ஶரீரம், கர்மத்திறல் உண்டான ஶரீரம்* என்று இருவகைப்படும். மஹாந் முதலான (கார்யங்களான) ஈஶ்வரஶரீரங்களும், நித்யர்களும், முக்தர்களும் தங்கள் விருப்பத்திறல் எடுத்துக்கொண்ட ஶரீரங்களும் கர்மத்திறல் உண்டு பண்ணப்படாத அநித்யஶரீரப்பிரிவைச் சேர்ந்தவை; கர்மத்திறலுண்டான (அநித்ய) ஶரீரமும், *ஸங்கல்பத்தோடு கூடின கர்மத்திறல் உண்டானது* என்றும், *கர்மத்திறல் மாத்திரம்*

स्वसङ्कल्पसहकृतकर्मकृतं केवलकर्मकृतं चेति। पूर्वं महतां सौभरिप्रभृतीनाम्, इतरदन्येषाम्॥१२७॥ पुनस्सामान्येन द्विविधम्, स्थावरजङ्गमभेदात्। स्थावराः शिलावृक्षगुल्मादयः। जङ्गमाश्चतुर्धा देवमनुष्यतिर्यङ्नारकिभेदात्। उद्भिज्जस्वेदजाण्डजजरायुजभेदा अपि विभाजकधर्माः। अयोनिजशरीराण्यपि सन्ति॥१२८॥

---

२०३. तदयुक्कर्मजं चेति सौभर्यादेस्तदादिमम्।
उत्तरं रूपमन्येषां चेतनानां यथाक्रमम्॥

२०४. स्थावरं जङ्गमं चेति पुनस्सामान्यतो द्विधा।
स्थावरञ्च शिलावृक्षलतागुल्मादिकं भवेत्॥

२०५. जङ्गमं स्याद्देवतिर्यङ्मर्त्यनारकिभेदतः।
चतुर्धा भिन्नमुल्बाण्डस्वेदोद्भिज्जादिका अपि॥

---

*உண்டானது* என்றும் இருவகைப்படும். ஸௌப₄ரி முதலான ஶக்திமான்கள் தம் ஸங்கல்பத்தினால் எடுத்துக்கொள்ளும் பல ஶரீரங்கள் முதல் பிரிவைச் சேர்ந்தவை. நம்மைப்போன்ற விஶேஷஶக்தியில்லாத சேதனருடைய ஶரீரங்கள் இரண்டாவது பிரிவைச் சேர்ந்தவை. 127.

204-*206. மறுபடியும் பொதுவாக ஶரீரங்களை *ஸ்த₂ாவரம்* என்றும், *ஜங்க₃மம்* என்றும் இரு பிரிவாகப் பிரிக்கலாம். நடக்காத கற்கள், மரங்கள், கொடிகள், புதர்கள் முதலியவை *ஸ்த₂ாவர ஶரீரமாகும்*. தே₃வஶரீரம், மனிதஶரீரம், மிருகஶரீரம், நரகத்தை அனுப₄விப்போரின் யாதநாஶரீரம் என ஜங்க₃ம (அசையும்) ஶரீரம் நாலுவகைப்படும். க₃ர்ப்ப₄ப்பையிலிருந்து உண்டாகும் ஶரீரம், முட்டையிலிருந்து உண்டாகும் ஶரீரம், வியர்வையிலிருந்து தோன்றும் ஶரீரம், விதையை அல்லது பூ₄மியைப்பிளந்துகொண்டு தோன்றும் ஶரீரம் என்றும் ஶரீரங்களைப் பிரிக்கலாம். அநித்யஶரீரங்களுக்குள் யோனியிலிருந்து உண்டாகாத ஶரீரங்களும் உண்டு. 128.

एवं पञ्चीकृतानां भूतानामेवाण्डोत्पादकत्वम् ॥ १२९ ॥ अण्डोत्पादात्पूर्वसृष्टिस्समष्टिसृष्टिः । अनन्तरसृष्टिर्व्यष्टिसृष्टिः ॥ १३० ॥ महदादीनामुत्पत्तिर्नाम तालपलाशताटङ्कन्यायेनावस्थान्तरापत्तिरेव । सेना-

२०६. देहभेदास्सन्ति चैतेष्वयोनिजवपूंषि च ।
पञ्चीकृतानां भूतानामेवाण्डोत्पत्तिहेतुता ॥
२०७. समष्टिव्यष्टिभेदेन सृष्टिश्च द्विविधा मता ।
अण्डोत्पत्तेः पूर्वसृष्टिराद्याऽन्त्या च तदुत्तरा ॥
२०८. उत्पत्तिर्महदादीनामवस्थान्तरयोगिता ।
पूर्वावस्थायुतं द्रव्यं कारणत्वेन कथ्यते ॥

206*. முன் சொல்லப்பட்ட ரீதியில் பஞ்சீகரணம் செய்யப்பட்ட பூ₄தங்களே இந்த ப்₃ரஹ்மாண்ட₃ம் உண்டாகக் காரணமாகின்றன. 129.

207. *ஸமஷ்டி ஸ்ருஷ்டி*யென்றும், *வ்யஷ்டி ஸ்ருஷ்டி*யென்றும், ஸ்ருஷ்டியானது இருவகைப்படும்; அண்ட₃ம் உண்டாவதற்கு முன்னால் நடந்த மஹாந், அஹங்காரம், இந்திரியங்கள், தந்மாத்ரங்கள், பூ₄தங்கள் ஆகியவற்றின் ஸ்ருஷ்டி ஸமஷ்டி ஸ்ருஷ்டியெனப்படும். அண்ட₃ம் உண்டானபின் ஏற்படும் தே₃வர் மனுஷ்யர் முதலானவற்றின் ஸ்ருஷ்டி வ்யஷ்டிஸ்ருஷ்டி எனப்படும். 130.

208-210. மஹான் முதலிய தத்துவங்களுக்கு உத்பத்தியாவது-முன்னிருந்த நிலையைவிட்டு மற்றோர் நிலையை அடைகை. தாளபலாஶதாடங்க ந்யாயத்தாலே ஒரு நிலையிலிருந்து மற்றொரு நிலையை அடைவதே உலகத்தில் பொருள்களுக்கு உத்பத்தியெனப்படுகிறது. தாளபலாஶம் - பனையோலை; தாடங்கம் - பனைத்தோடு. பனையின் ஓலையானது, மனிதர்களின் காதுகளில் அணிந்துகொள்ளத்தக்க தோடாகப் பண்ணப் படும்போது பனைத்தோடு உண்டாகிறது என்னும் வழக்கு ஏற்படுகிறது. உண்மையில் அங்கு பனையோலை ஒருநிலையிலிருந்து மற்றொரு

वनराश्यादिव्यवहारवत् पूर्वापरावस्थाविशेषसंबन्धमात्रेण कार्यकारणभेदव्यवहारः। तत्र पूर्वावस्थाप्रहाणेन विजातीयावस्थाप्राप्तौ तत्त्वान्तरव्यपदेशः पृथिवीपर्यन्त एव। इत्थम्, प्रकृतिमहदहंकारैकादशेन्द्रियतन्मात्रपञ्चकभूतपञ्चकविभागेन चतुर्विंशतितत्त्वानि वर्णितानि। एतेन

---

२०९. तदेव चोत्तरावस्थायुतं कार्यमितीर्यते।
प्रागवस्थाविजातीयावस्थं तत्त्वान्तरं मतम्॥

२१०. प्रकृतिश्च महत्तत्त्वमहङ्कारेन्द्रियाणि च।
पञ्चतन्मात्रभूतानि वर्णितानीत्थमादितः॥

---

நிலையையே அடைகிறது. ஆகையால் முன் நிலையை விட்டு மற்றோர் நிலையை அடைவதே உத்பத்தியாகும். அதில் முன் நிலையோடு கூடியிருக்கும் திரவியம் *காரணம்* எனப்படுகிறது. அதே திரவியம் பின் நிலையோடு கூடியிருக்கும்போது *கார்யம்* எனப்படுகிறது. உதா₃ஹரணம் – மண் உருண்டை காரணம்; (மண்) குடம் கார்யம். பல ரத₂க₃ஜதுரக₃பதா₃திகள்—கூடியிருக்கும்போதே 'ஸேனை' எனும் புதுப்பெயரால் வழங்கப் படுகின்றன; பல மரங்கள் ஓரிடத்தில் சேர்ந்திருக்கும்போதே 'வனம்' எனும் புதுப்பெயரால் வழங்கப்படுகின்றன. அதே போல், ஒரே திரவியமாயினும். வெவ்வேறு நிலையுடன் கூடியிருக்கையால் கார்யகாரணங்கள் வெவ்வேறாக உலகில் வழங்கப் படுகின்றன. முன் நிலையிலும் மிகவும் வேறுபட்டு (விஜாதீயமாக) வேறு நிலை உண்டாயிற்றென்றால், அது மற்றொரு தத்வம் எனப்படுகிறது. உதா₃ஹரணம்—மஹான், அஹங்காரம் இந்திரியங்கள், தந்மாத்ரங்கள், பூ₄தங்கள் ஆகியவை ஒவ்வொன்றும் தம்முடைய பூர்வாவஸ்தை₂யைக் காட்டிலும் மிகவும் வேறுபட்டிருக்கிறபடியால் தனித்தனித் தத்துவங்கள் எனப்படுகின்றன. ஆக இப்ரகரணத்தொடக்கத்திலிருந்து இது வரையில் ப்ரக்ருதி, மஹான், அஹங்காரம், பதினொரு இந்திரியங்கள், ஐந்து தன்மாத்ரங்கள், ஐந்து பூ₄தங்கள் ஆகிய

न्यूनाधिकसंख्याकतत्त्ववादिनो बाह्याः पाशुपताश्च निरस्ताः। परमाणुकारणत्ववादिनोऽपि निरस्ताः॥ १३१॥

प्रकृत्यादयः ईश्वरस्य जीवस्य च भोग्यभोगोपकरणभोगस्थानानि च भवन्ति। भोग्यानि विषयाः। भोगोपकरणानि तु चक्षुरादिकरणानि। भोगस्थानानि चतुर्दशभुवनसहितान्यण्डजातानि॥ १३२॥ अण्डं नाम

---

२११. प्रकृत्याद्या इमे सर्वे श्रीशजीवात्मनोस्तथा।
भोग्यभोगोपकरणभोगस्थानात्मकास्सदा॥

२१२. भोगदा विषयास्सर्वे साधनं चेन्द्रियादिकम्।
द्विसप्तभुवनोपेतमण्डं तत्स्थानमुच्यते॥

---

இருபத்துநாலு தத்துவங்களும் விவரிக்கப்பட்டன. ஆகையால் தத்துவங்களை ஏற்றியும் தாழ்த்தியும் சொல்லும் பாசுபதம் முதலான புறச்சமயங்கள் தள்ளப்பட்டன. பரமாணுக்களே ஜக₃த் காரணம் என்னும் வைஶேஷிகமதமும் தள்ளப்பட்டது. 131.

211-212. ப்ரக்ருதி முதலான இவையெல்லாம் பரமாத்மாவுக்கும் ஜீவனுக்கும் *போ₄க்₃யமாகவும், போ₄கோ₃பகரணமாகவும், போ₄கஸ்₃த₂ானமாகவும்* ஆகின்றன. போ₄க₃த்தைக் கொடுப்பவையாகையால், *ஶப்₃த₃ம், ஸ்பர்ஶம், ரூபம், ரஸம், க₃ந்த₄ம்* ஆகிய கு₃ணங்களையுடைய விஷயங்கள் (பொருள்கள்) *போ₄க்₃யங்கள்* எனப்படுகின்றன. அந்த போ₄க₃ங்களை அனுப₄விக்க ஸாத₄னங்களாயிருக்கும் இந்திரியங்கள் *போ₄கோ₃பகரணங்கள்* எனப்படுகின்றன. அந்த போ₄க₃ங்களை அனுப₄விக்கும் இடமாயிருக்கும் ஈரேழு (பதினாலு) லோகங்கள் அடங்கிய அண்ட₃ங்களின் ஸமூஹம் *போ₄க₃ஸ்த₂ானம்* எனப்படுகிறது. 132.

213-223. இனி, போ₄க₃ஸ்த₂ானமான இவ்வண்ட₃ம் புராணங்களில் சொல்லப்பட்ட ரீதியில் விவரிக்கப்படுகிறது. அதில் முதல் பதினொரு ஶ்லோகங்களாலே பூ₄மி விவரிக்கப் படுகிறது. அண்ட₃மானது விளாம்பழம்போன்ற உருவமுள்ளது. பஞ்சீகரண முறையாலே ஒன்றோடொன்று சேர்க்கப்

कपित्थफलाकारं पञ्चीकृतपञ्चभूतारब्धं प्राकृतं द्रव्यम्। तद्यथा—पद्माकारा भूः, कर्णिकाकारो मेरुः। मेरोर्दक्षिणतो भारत-किम्पुरुष-हरि-वर्षाणि त्रीणि। उत्तरतो रम्यक-हिरण्यक-कुरु-वर्षाणि त्रीणि। पुरतो भद्राश्ववर्षम्। पश्चात्केतुमालवर्षम्। मध्ये त्विलावृतम्। एवं नववर्षयुक्तं जम्बूद्वीपं लक्षयोजनविस्तीर्णं समपरिमाणेन लवणसिन्धुनावृतम्। स

---

२१३. पञ्चीकृतमहाभूतपञ्चकारब्धमण्डकम्।
कपित्थफलरूपं च प्राकृतद्रव्यमुच्यते॥
२१४. पद्माकारयुतो मेरुः कर्णिकाकारसंयुतः।
मेरोर्दक्षिणतो वर्षत्रयं स्याद्देशरूपकम्॥
२१५. भारतं किंपूरुषं च हरिवर्षमितीरितम्।
उत्तरे रम्यकं वर्षं हिरण्यककुरू तथा॥
२१६. भद्राश्वं पुरतः पश्चात् केतुमालाख्यवर्षकम्।
मध्ये त्विलावृतं जम्बूद्वीपं च नववर्षकम्॥
२१७. लक्षयोजनविस्तीर्णमेतल्लवणसिन्धुना।
तावन्मानेनावृतं स्यात्स सिन्धुर्द्विगुणेन च॥

---

பட்ட ஐந்து பூ₄தங்களால் ஏற்பட்டது. அது ப்ரக்ருதியி லிருந்து உண்டான த்₃ரவ்யமாகையால் ப்ராக்ருதம் எனப்படு கிறது. அதில் தாமரைப்பூ ஆகாரமுள்ளது பூ₄மி; தாமரைக் காயைப்போல் மேருபர்வதம்; அதற்குத் தெற்கே ப₄ாரதம், கிம்புருஷம், ஹரி என்கிற தே₃ஶரூபமான மூன்று வர்ஷங் களும், மேருவுக்கு வடக்கே ரம்யம், ஹிரண்யகம், குரு என்கிற மூன்று வர்ஷங்களும், மேருவுக்குக் கிழக்கே ப₄த்₃ராஶ்வம் என்கிற வர்ஷமும், மேருவுக்கு மேற்கே கேதுமாலம் என்கிற வர்ஷமும் இருக்கின்றன. இவைகளுக்கு நடுவில் இளாவிருதம். இப்படி ஒன்பது வர்ஷங்களோடு கூடினது ஜம்பூ₃த்₃வீபம். அது லக்ஷம் யோஜனை விஸ்தீர்ணம் உள்ளது. அதே அளவுள்ள உப்பு ஸமுத்₃ரம் அதைச் சுற்றிலும் இருக்கிறது. அதைச்

सिन्धुर्द्विगुणेन सप्तवर्षात्मकेन प्लक्षद्वीपेन वेष्टितः। सोऽपीक्षुसमुद्रेण। सोऽब्धिश्शाल्मलिद्वीपेन। स पुनस्सुरासमुद्रेण। स कुशद्वीपेन। स सर्पिस्समुद्रेण। सोऽपि क्रौञ्चद्वीपेन। स दध्यर्णवेन। सोऽपि शाकद्वीपेन। स च क्षीरार्णवेन। सोऽपि वर्षद्वयविभाजकवलयाकारमानसोत्तरपर्वतसहितेन पुष्करद्वीपेन। स शुद्धजलार्णवेन। एवम्, द्वीपानामुत्तरोत्तरद्वैगुण्यं द्रष्टव्यम्। प्लक्षद्वीपादयश्च (पञ्च) सप्तवर्षात्मकाः। सप्तद्वीपात्मकोऽयं द्विगुणया

---

२१८. सप्तवर्षयुतप्लक्षद्वीपेन परिवेष्टितः।
सोपीक्षुसिन्धुना सोऽब्धिः शाल्मलिद्वीपसंवृतः॥

२१९. सुराब्धिना स च द्वीपः कुशद्वीपेन सोऽर्णवः।
द्वीपस्सर्पिस्सिन्धुना स क्रौञ्चद्वीपेन सोऽर्णवः॥

२२०. दध्यब्धिना स च द्वीपः शाकद्वीपेन सोऽर्णवः।
क्षीराब्धिना स च द्वीपः पुष्करेण स चार्णवः॥

२२१. मानसोत्तरपृथ्वीभृत्सहितेन स पुष्करः।
शुद्धोदकाब्धिसंवीतः द्वीपानामुत्तरोत्तरम्॥

---

சுற்றிலும் ப்லக்ஷத்3வீபமிருக்கிறது. அதில் ஏழு வர்ஷங்களிருக்கின்றன. அதின் அளவு ஜம்பூ3த்3வீபத்தைப்போல் இரண்டு பங்கு. இந்தத் தீவு இக்ஷு (கருப்பஞ்சாறு) ஸமுத்3ரத்தால் சூழப்பெற்றுள்ளது. அதைச் சுற்றிலும் ஶால்மலித்3வீபம். அதைச்சுற்றிலும் ஸுரா (கள்) ஸமுத்3ரம். அதைச்சுற்றிலும் குஶத்3வீபம். அதைச் சுற்றிலும் நெய்ஸமுத்3ரம். அதைச் சுற்றிலும் க்ரௌஞ்சத்3வீபம். அதைச்சுற்றிலும் தயிர்ஸமுத்3ரம். அதைச்சுற்றிலும் ஶாகத்3வீபம். அதைச்சுற்றிலும் பால் ஸமுத்3ரம். அதைச்சுற்றிலும் புஷ்கரத்3வீபமும், மானஸபர்வதமும். அந்த த்3வீபத்தில் இரண்டே வர்ஷங்களிருக்கின்றன. அது வளையின் ஆகாரமுடையது. அதைச்சுற்றிலும் ஶுத்3த4 ஜலஸமுத்3ரம். இப்படி ஒவ்வொரு த்3வீபமும் முன் த்3வீபத்துக்கு இரண்டுபங்கு அளவுள்ளது. ப்லக்ஷத்3வீபம் முதலானவைகளில் ஏழு வர்ஷங்கள் இருக்கின்றன. ஒவ்வொரு கடலும் தனக்கு முன்னுள்ள தீவைப்போன்று விஸ்தீர்ணமுள்ளது.

काञ्चनभूम्याऽऽवृतः। काञ्चनभूमिस्तु लोकालोकपर्वतेन। स पर्वतस्तमसा, तमो गर्तोदकेन, ततोऽण्डकटाहः॥ १३३॥ एवं भूमेरधः अतलवितलसुतलतलातलमहातलरसातलपातालभेदात् सप्त लोकाः। अधो नरकाः। ते च पापकर्मणां पापानुभवभूमयः। रौरवाद्याः मुख्यतया एकविंशतिप्रभेदाः। ततस्तमः, ततो गर्तोदकम्। ततोऽण्डकटाहः॥ १३४॥

---

२२२. द्वैगुण्यं परिमाणे स्यादब्धयो द्वीपमानकाः।
शुद्धोदाब्धिर्द्विगुणया स्वर्णभूम्या समावृतः॥
२२३. सा लोकालोकगिरिणा स गिरिस्तमसाऽऽवृतः।
गर्तोदेन तमो वीतमण्डभित्तिस्ततो बहिः॥
२२४. भूमेरधस्सप्तलोकास्सन्ति चातलपूर्वकाः।
तदधो नरकास्ते च पापिनां यातनालयाः॥
२२५. रौरवाद्या मुख्यतया चैकविंशतिभेदकाः।
तदधश्च तमस्तोमः गर्तोदकमधस्ततः॥
२२६. ततश्चाण्डकटाहः स्यात् कोटियोजनविस्तृतः।
भूमेरुपर्येकलक्षयोजने सूर्यमण्डलम्॥

---

முன்சொன்ன ஶுத்₃த₄ஜலக்கடல் இரண்டு பங்கு அளவுள்ள தங்கபூ₄மியினால் சூழப்பட்டிருக்கின்றது. அதைச்சுற்றிலும் லோகாலோகபர்வதம். அதற்கு வெளியில் தமஸ் (இருட்டு). அதற்கு வெளியில் அகழாயிருப்பது க₃ர்த்தோத₃கம். அதற்கு வெளியில் அண்ட₃கடாஹம். 133

224-*226. இனி, பூ₄மிக்குக் கீழுள்ள உலகங்கள் விவரிக்கப்படுகின்றன பூ₄மியின் கீழே ஏழு உலகங்கள் இருக்கின்றன,—அதலம், விதலம், ஸுதலம், தலாதலம், மஹாதலம், ரஸாதலம், பாதாளம்—என்று. அவைகளின் கீழ் நரகங்கள். அவைகள், பாபம் பண்ணினவர்கள் அதின் ப₂லத்தை அநுப₄விக்கும் இடங்கள். அவைகளில் முக்கியமானவைகள் ரௌரவம் முதலான இருபத்தொரு நரகங்கள். அதற்குக் கீழ் தமஸ்ஸு. அதன்கீழ் க₃ர்த்தோத₃கம். அதற்குக் கீழ் அண்ட₃கடாஹம். அது கோடியோஜனை விஸ்தீர்ணமுள்ளது 134.

एवं भूमेरुपरि लक्षयोजनात् सूर्यमण्डलम्। तावदेव भुवर्लोकः। तदुपरि चन्द्रमण्डलम्। तस्मादुपर्युपरि नक्षत्रबुधशुक्राङ्गारकबृहस्पतिशनिसप्तर्षिमण्डलानि। तदुपरि ध्रुवः। सूर्यमण्डलमारभ्य ध्रुवलोकपर्यन्तं स्वर्लोकः। चतुर्दशलक्षोपरि कोटियोजनोच्छ्रायो महर्लोकः।

---

२२७. तावत्सीमा भुवर्लोकः तदूर्ध्वं चन्द्रमण्डलम्।
तस्मादुपरि नक्षत्रमण्डलं तदुपर्यपि॥

२२८. बुधस्य मण्डलं तस्मात् शुक्रस्योपरि मण्डलम्।
तस्मादुपरि भौमस्य गुरोश्च तदुपर्यपि॥

२२९. तस्मादुपरि मन्दस्य तस्मात्सप्तर्षिमण्डलम्।
तदूर्ध्वं ध्रुवलोकस्स्वर्लोक इत्यन्तमुच्यते॥

२३०. ततः परं महर्लोकः तत्प्रमाणं निगद्यते।
द्विसप्तलक्षैककोटियोजनानीति पण्डितैः॥

---

226*-233 இனி, பூ₄மிக்கு மேலுள்ள உலகங்கள் விவரிக்கப்படுகின்றன. பூ₄மிக்குமேலே லக்ஷயோஜனைக்கு அப்புறம் ஸூர்யமண்ட₃லம். அதுவரையில் பு₄வர்லோகம். ஸூர்யமண்ட₃லத்திற்கு மேலே சந்த்₃ரமண்ட₃லம். அதற்குமேலே நக்ஷத்ரமண்ட₃லம். அதற்குமேலே பு₃த₄னுடையவும் சுக்ரனுடையவும் மண்ட₃லங்கள். அதற்கு மேன்மேலே அங்கா₃ரகன், ப்₃ருஹஸ்பதி, சனி, ஸப்தருஷிகள் இவர்களின் மண்ட₃லங்கள். அதன்மேல் த்₄ருவலோகம். இதுவரையில் ஸுவர்லோகம். அதற்குமேல் மஹர்லோகம். அதின் உயரத்தின் அளவு—ஒரு கோடியே பதினாலு லக்ஷம் யோஜனை என்று அறிவாளிகளால் சொல்லப்படுகிறது. அதற்கு இரண்டு பங்கு அளவுள்ளது ஜனோலோகம். அதற்கு நாலு பங்கு அளவுள்ளது தபோலோகம். அதற்குமேலே பத்துகோடி யோஜனை உயரமுள்ளது ஸத்யலோகம். அதற்குமேலே தமஸ்ஸு; அதன்மேல் கூ₃ர்த்

तस्मात् द्विगुणो जनोलोकः। ततश्चतुर्गुणः तपोलोकः। तस्मात् दशकोट्यच्छ्रायस्सत्यलोकः। ततस्तमो गर्तोदकमण्डकटाहश्च। एवं तिर्यगूर्ध्वप्रमाणेन पञ्चाशत्कोटियोजनत्वं भूमेरुक्तं भवति। शतकोटि-योजनविस्तीर्णत्ववादो मानभेदेन। अण्डकटाहः कोटियोजनोच्छ्रायः ॥१३५॥ तदण्डं दशोत्तरावरणावृतम्। एतादृशान्यण्डान्यनन्तानि।

---

२३१. ततः परं तद्द्विगुणो जनोलोकस्ततः परम्।
चतुर्गुणस्तपोलोकः सत्यलोकस्ततः परम्॥

२३२. दशकोटिसमुच्छ्रायस्ततश्च ध्वान्तसञ्चयः।
ततो गर्तोदकं चाण्डकटाहश्च ततः परम्॥

२३३. अण्डस्य तिर्यङ्मानं च पञ्चाशत्कोटियोजनम्।
तथैवोर्ध्वप्रमाणं च कोट्युच्छ्रायोऽण्डभित्तिकः॥

२३४. दशोत्तरैरावरणैरण्डं च बहिरावृतम्।
ईदृगण्डान्यनन्तानि सृष्टानीशेन लीलया॥

---

தோத₃கம்; அதற்குப்பின் அண்ட₂கடாஹம். இப்படி அண்ட₃த்துக்குக் குறுக்கேயும் மேலேயும் ஐம்பது கோடி யோஜனைகள் என்று சொன்னதாக ஏற்படுகிறது. சிலவிடங்களில் நூறுகோடி யோஜனைகள் என்று கூறுவது, யோஜனையில் பாதியையே யோஜனையாகக்கொண்டு கூறப்பட்டதெனக் கொள்ளவேண்டும். அண்ட₂கடாஹம் கோடியோஜனை உயரமுள்ளது. 135.

234-236. இந்த அண்ட₃மானது பூ₄மி, நீர், தீ, வாயு, ஆகாசம், அஹங்காரம், மஹான் ஆகிய ஏழு ஆவரணங்களால் சூழப்பட்டிருக்கிறது. ஒவ்வொரு ஆவரணமும் கீழ் ஆவரணத்துக்குப் பத்துபங்கு அதி₄க அளவுள்ளது. இவ்விதமான அண்ட₃ங்கள் கணக்கில்லாமல் இருக்கின்றன. ஜலத்தில் குமிழிகள் போலே ஒரேகாலத்தில் ஈச்வரனாலே விளையாட்டாக உண்டு

जलबुद्बुदवद्युगपदीश्वरसृष्टानि। ईश्वरस्य चतुर्मुखपर्यन्ता सृष्टिरद्वारिका, तदनन्तरं सद्वारिकेति विवेकः। विस्तरस्तु पुराणरत्नादिषु द्रष्टव्यः। इति प्रकृतिर्निरूपिता॥ १३६॥

इति श्रीवाधूलकुलतिलक - श्रीमन्महाचार्यप्रथमकृपापात्रेण श्रीनिवासदासेन विरचितायां यतीन्द्रमतदीपिकायां शारीरकपरिभाषायां प्रकृतिनिरूपणं नाम चतुर्थोऽवतारः॥

## ॥ अथ पञ्चमोऽवतारः॥

अथाचिद्विशेषः कालो निरूप्यते। कालो नाम गुणत्रयरहितो जडद्रव्यविशेषः। स च नित्यो विभुश्च। भूतभविष्यद्वर्तमानभेदेन

---

२३५. युगपज्जलसंभूतबुद्बुदौघोपमानि च।
चतुर्मुखान्तसृष्टिः प्राक् विष्णोरद्वारिका भवेत्॥

२३६. तदनन्तरसृष्टिस्तु चतुराननमूलतः।
पुराणरत्नमुख्येषु द्रष्टव्यो ह्यस्य विस्तरः॥

॥इति प्रकृतिप्रकरणम्॥ ४॥

---

பண்ணப்படுகின்றன. பிரமன் வரையில் ஸ்ருஷ்டியானது ஈச்வர ஞலே செய்யப்படுகிறது. அதன் மேல் ஸ்ருஷ்டிகள் பிரமன் வழியாய் நடக்கிறது. இதன் விரிவை ஸ்ரீவிஷ்ணுபுராணம் முத லானவற்றில் காணலாம். ஆக, இவ்வளவால் ப்ரக்ருதியின் நிருபணம் செய்யப்பட்டது. 136.

ப்ரக்ருதிப்ரகரணம் முற்றிற்று.

## 5. காலப்ரகரணம்

237-*240. இனி—ப்ரக்ருதி, காலம், என்னும் இரண்டு ஜட₃த்₃ரவ்ய தத்துவங்களில் இரண்டாவதான காலம் நிருபிக்கப் படுகிறது. ப்ரக்ருதி, காலம், நித்யவிபூ₄தி, த₄ர்மபூ₄தஜ்ஞானம் என்னும் நான்கும் அசேதன த்₃ரவ்யங்கள். அவற்றில்

त्रिविधः, युगपत्क्षिप्रचिरादिव्यपदेशहेतुः, निमेष - काष्ठा - (तत्परा विनाडी) - कला-घटिका-मुहूर्त-दिवस-पक्ष-मास-ऋतु-अयन-संवत्सरादि -

---

## ॥ अथ कालप्रकरणम् ॥ ५ ॥

२३७. कालो जडोऽचिद्विशेषो गुणत्रयविवर्जितः ।
अखण्डः खण्ड इति च द्विप्रकारोऽयमिष्यते ॥

२३८. नित्यो विभुर्भूतभाविवर्तमानप्रभेदवान् ।
अखण्डोऽन्त्यो बहुविधो निमेषादिप्रभेदतः ॥

२३९. सर्वकार्येऽप्यखण्डस्य सहकारित्वमिष्यते ।
निमेषादिस्वकार्यं प्रत्युपादानत्वमुच्यते ॥

---

ப்ரக்ருதியும் காலமும் அறிவின் உதவியில்லாமல் தாமே பிரகாசிக்கமாட்டாவாகையால் ஜட₃ங்கள் எனப்படுகின்றன. நித்ய விபூ₄தியும், த₄ர்மபூ₄தஜ்ஞானமும் தாமே பிரகாசிக்குமாகையால் அஜட₃த்₃ரவ்யங்கள் எனப்படுகின்றன. ஜட₃மான அசித்₃ த்₃ரவ்யங்களில் முந்தியதான ப்ரக்ருதி சென்ற ப்ரகரணத்தில் நிருபிக்கப்பட்டுவிட்டது. பிந்தியதான காலம் இந்த ப்ரகரணத்தில் நிருபிக்கப்படுகிறது. *காலமானது* ஜட₃மாயிருக்கும் ஒரு அசித். ஸத்வம், ரஜஸ், தமஸ் என்று ப்ரக்ருதியிலிருக்கும் முக்குணங்களும் இதிலில்லை. இந்தக் காலம் *அக₂ண்ட₃காலம், க₂ண்ட₃காலம்* என்று இருவகைப்படும். நித்யமாயும், எங்குமுள்ளதாயும், *சென்றகாலம், நிகழ்காலம், வருங்காலம்* என்னும் மூன்று பிரிவையுடையதாயுமிருக்கிறது *அக₂ண்ட₃காலம்.* *''அநாதி₃ர் ப₄க₃வாந் காலோ நாந்தோऽஸ்ய த்₃விஜ வித்₃யதே''* [அந்தணரே! காலமானது ஆதி யர்தமற்றது] என்னும் விஷ்ணுபுராண வசனம் காலம் நித்தியம் என்பதைக் காட்டுகிறது. *க₂ண்ட₃காலமாவது*— அக₂ண்ட₃காலத்தின் அவயவங்கள். *''ஸர்வே நிமேஷா ஜஜ்ஞிரே வித்₃யுத: புருஷாத₃தி₄, கலா முஹூர்த்தா: காஷ்டா₂ஶ்ச''* என்கிற ஶ்ருதியிலும், *''கலா முஹூர்த்தாதி₃மயஶ்ச கால:''* முதலான உபப்₃ரும்ஹணங்களிலும் தெரிவிக்கப்பட்ட நிமிஷம் முதலான

व्यवहारहेतुश्च ॥ १३७ ॥ मनुष्यमानेन मासः पितॄणां दिनम् । तेषाममावास्या मध्याह्नः । मनुष्यमानेन संवत्सरो देवानां दिनम् । तेषामुत्तरायणमहः । दक्षिणायनं रात्रिः । एवं देवमानेन द्वादशवर्षसहस्रसंख्याकं चतुर्युगमित्युच्यते । तत्र चतुस्सहस्रवर्षसंख्याकं कृतयुगम् ।

---

२४०. कालोऽयं च निमेषादिव्यवहारस्य कारणम् ।
खण्डकालप्रभेदाश्च निरूप्यन्ते विशेषतः ॥

२४१. मर्त्यमानेनैकमासः पितॄणां दिनमुच्यते ।
अमावास्या च तेषां तु मध्याह्नसमयो मतः ॥

२४२. मर्त्यैकाब्दश्च देवानामेकाहोरात्रमिष्यते ।
तत्रोत्तरायणमहः तम्येषां दक्षिणायनम् ॥

---

பலவித₄மான அக₂ண்ட₃காலாவயவங்கள் *க₂ண்ட₃காலமாகும்.* எல்லாக்காரியங்களின் உற்பத்தி முதலானவற்றுக்கும் அக₂ண்ட₃ காலம் ஸஹகாரி காரணமாகச் சொல்லப்படுகிறது. தன் காரியங்களான நிமிஷம் முதலிய க₂ண்ட₃காலங்களுக்கு உபாத₃ானமாகவும் அக₂ண்ட₃காலம் சொல்லப்படுகிறது. ஒரே சமயம், விரைவு, நீண்டகாலம் முதலான வழக்குகளுக்குக் காரணமாயிருப்பது காலம். நிமிஷம் (கண்மூடித்திறக்கும் காலம்), காஷ்டை₂, கலை, முஹூர்த்தம், நாள், பக்ஷம், மாதம், ருது, அயநம், வருஷம் முதலிய வியவஹாரங்களுக்குக் காரணமாயிருப்பது காலம். 137.

240*-*249. க₂ண்ட₃காலத்தின் வகைகள் இனி விசேஷித்து நிருபிக்கப்படுகின்றன. மனிதர்களுக்கு ஏற்பட்ட அளவுள்ள ஒரு மாதம் பித்ருக்களுக்கு ஒருநாள். அவர்களுக்கு அமாவாஸ்யை மத்₄யாஹ்நகாலம். மநுஷ்யர்களுக்கு ஏற்பட்ட அளவினாலே ஒரு வருஷம் தே₃வர்களுக்கு ஒரு நாள். உத்தராயணம் அவர்களுக்குப் பகல். த₃க்ஷிணாயநம் ராத்ரி. இப்படி தே₃வர்களுக்கு ஏற்பட்ட அளவுப்படி பன்னீராயிரம் வருஷம் அளவுள்ளது ஒரு சதுர்யுக₃ம் என்று சொல்லப்படுகிறது

तत्र पूर्णो धर्मः। त्रिसहस्रवर्षसंख्याकं त्रिपाद्धर्मवत् त्रेतायुगम्। द्विसहस्रवर्षपरिमितं (सार्धपादधर्म) द्विपाद्धर्मवत् द्वापरम्। सहस्रवर्ष-संख्याकमेकपाद्धर्मयुतं कलियुगम्। एतेषां सन्धिः द्विसहस्रसंख्याकः। एवम्भूतचतुर्युगसहस्राणि ब्रह्मणो दिवसप्रमाणम्। एवं रात्रिः। ब्रह्मणोऽह्नि चतुर्दश मनवः। तथेन्द्रास्सप्तर्षयश्च। एकैकमनोरेक-

---

२४३. द्विषट्सहस्राब्दमितं देवमानाच्चतुर्युगम्।
चतुस्सहस्राब्दमितं युगं तत्र कृताख्यकम्॥

२४४. परिपूर्णस्तत्र धर्मस्त्रिसहस्राब्दसंमितम्।
त्रेतायुगं त्रिपाद्धर्मयुतं युगमथापरम्॥

२४५. द्वापरं द्विसहस्राब्दमितं द्विपदधर्मकम्।
युगमन्त्यं सहस्राब्दमितं पादैकधर्मकम्॥

२४६. द्विसहस्राब्दसंख्याकस्सन्धिरेषां प्रकीर्तितः।
ईदृक्चतुर्युगानां तु सहस्रं ब्रह्मणो दिनम्॥

२४७. रात्रिश्चैवंप्रमाणा स्यात् ब्रह्मणोऽह्नि चतुर्दश।
मनवस्सन्ति देवेन्द्रास्सप्तर्षिप्रमुखास्तथा॥

---

இந்தப்பன்னிராயிரம் வருஷத்தில் நாலாயிரம் வருஷம் அளவுள்ளது க்ருதயுக₃ம். அதில் த₄ர்மம் பூர்ணமாயிருக்கிறது. த்ரேதாயுக₃ம் மூவாயிரம் வருஷம் அளவுள்ளது. அதில் த₄ர்மம் முக்கால் பங்கு. த்₃வாபரம் இரண்டாயிரம் வருஷம் அளவுள்ளது. அதில் த₄ர்மம் அரைப்பங்கு. கலியுக₃ம் ஆயிரம் வருஷம் அளவுள்ளது. அதில் த₄ர்மம் கால் பங்குள்ளது. இவைகளின் ஸந்தி₄ (இடைப்பகுதி) இரண்டாயிரம் வருஷங்களுள்ளது. இவ்விதமான ஆயிரம் சதுர்யுக₃ம் கொண்டது ப்₃ரஹ்மாவின் பகல். அப்படியே ராத்திரியும். ப்₃ரஹ்மாவின் ஒரு பகலில் பதினான்கு மநுக்கள் ஏற்படுகிறார்கள். அப்படியே பதினான்கு இந்திரர்களும், பதினான்கு ஸப்தரிஷிகளும் ஏற்படு

सप्ततिचयुगपरिमाणकालः। एवं ब्रह्ममानेन ब्रह्मणश्शतवर्षजीवित्वम् ॥ १३८ ॥ एतत्सर्वं कालाधीनम्। एवं नित्यनैमित्तिकप्राकृतादिप्रलया

---

२४८. एकसप्ततिसंख्याकचतुर्युगमितस्तथा।
एकैकमनुकालस्स्यात् तथेन्द्राद्यायुषः क्रमः॥

२४९. चतुर्मुखायुर्मानं च तन्मानेन शतं समाः।
कालाधीनमिदं सर्वं त्रयश्च प्रलयास्तथा॥

---

கிறார்கள். ஒவ்வொரு மநுவின் காலமான மந்வந்தரம் எழுபத்தொரு சதுர்யுக₃ம் கொண்டது. அப்படியே இந்திரன் முதலானுருடைய ஆயுளும். இப்படி ப்₃ரஹ்மாவுக்கு ஏற்பட்ட அளவுப்படி அவன் நூறு வருஷம் இருக்கிறுன். பிரமனுடைய ஆயுட்காலம் 'பரம்' எனப்படும். 138.

249*-*250. இனி, காலத்தின் தன்மைகள் நிருபிக்கப்படுகின்றன. மேலே குறிப்பிட்ட க₂ண்ட₃காலங்கள் முழுவதும் அக₂ண்ட₃காலத்திற்கு வரைப்பட்டவை; அக₂ண்ட₃காலம் க₂ண்ட₃காலங்களுக்கு உபாத₃ானமாயிருப்பது. அக₂ண்ட₃காலம் நித்யமானது; க₂ண்ட₃காலங்கள் அநித்யமானவை. *நித்யப்ரளயம், நைமித்திகப்ரளயம், ப்ராக்ருதப்ரளயம்* என்னும் மூவகைப்பிரளயங்களும் காலத்திற்கு வரைப்பட்டவை. *''ஜாதஸ்ய ஹி த்₄ருவோ ம்ருத்யு:''* [தோன்றிய பொருளுக்கெல்லாம் அழிவுண்டு] என்னும் நியதியின்படியே தினந்தோறும் உண்டாகும் அழிவுகள் *நித்யப்ரளயம்* ஆகும். பிரமனின் பகலான ஒவ்வொரு கல்பத்தின் முடிவிலும் வருகிற பிரளயம் *நைமித்திகப்ரளயம்* எனப்படுகிறது. இதில் 'பூ₄:' 'பு₄வ:' 'ஸுவ:' என்கிற மூன்று உலகங்களும் அழிந்துவிடுகின்றன; மஹர்லோகத்திற்கு அழிவில்லையானுலும் அங்குள்ளவர்கள் ஜநோலோகத்திற்குப் போகிறுர்கள்; 'ஜந:' 'தப:' 'ஸத்யம்' எனப்படும் மூன்று உலகங்களும் அழிவதில்லை. இக்காரணத்தாலேயே நைமித்திகப்ரளயத்தில் அழியும் பூ₄ர்பு₄வஸ்ஸுவர் லோகங்களை *'க்ருதகம்'* என்றும், அதில் அழியாத ஜநஸ்தபஸ்

अपि कालाधीनाः। कालस्य स्वकार्यं प्रति स्वस्योपादानत्वम्। अखण्डकालो नित्यः। खण्डकालाः पुनरनित्याः॥ १३९॥ एवम्भूतः कालः ईश्वरस्य क्रीडापरिकरो भवति। लीलाविभूतावीश्वरः कालाधीन एव कार्यं करोति। नित्यविभूतौ तु कालस्य विद्यमानत्वेऽपि तस्य न स्वातन्त्र्यम्॥ १४०॥

---

२५०. नित्यनैमित्तिकप्राकृताख्याः कालानुयायिनः।
ईदृशः काल ईशस्य क्रीडापरिकरः स्मृतः॥

---

ஸத்யலோகங்களை *'அக்ருதகம்'* என்றும், அழியாமலிருந்தும்குடியிருப்பாரில்லாமலிருக்கும் மஹர்லோகத்தை *'க்ருதகாக்ருதகம்'* என்றும் சொல்லுகின்றனர். இப்படி மூவகைப்பட்டிருக்கையாலே பூ₄ராதி₃ ஸப்தலோகங்கள் 'மூவுலகங்கள்' என்றும் வழங்கப்படுகின்றன. பிரமனின் ஆயுட்காலம் முடிவடையும் போது ஏற்படுவது *ப்ராக்ருதப்ரளயம்* எனப்படுகிறது. இதில் ப்ரக்ருதி கார்யமான ஸகலபதா₃ர்த்த₂ங்களும் *'ப்ருதி₂வ்யப்ஸு ப்ரலீயதே'* என்று தொடங்கி வேத₃த்தில் சொல்லப்பட்ட ரீதியில் தம் தம் காரணப்பொருள்களில் ஒடுங்கி, கடைசியில் எல்லாம் 'தமஸ்ஸு' என்றும் 'மூலப்ரக்ருதி' என்றும் சொல்லப்படும் நிலையுடையதாக ஆகிப் பரமபுருஷனிடம் ஒடுங்குகிறது. 139.

250*-251. இப்படிப்பட்ட காலம்—ஸர்வேஶ்வரனுக்கு உலகம் யாவையும் தாமுளவாக்கலும் நிலைபெறுத்தலும் நீக்கலுமாகிற நீங்கலா அலகிலா விளையாட்டுக்குத் துணைக்கருவியாகச் சொல்லப்படுகிறது. ப்ரக்ருதிவிஶிஷ்டனை ப₄க₃வான் உலகிற்கு உபாதா₃னகாரணமாகவும், ஸங்கல்ப விஶிஷ்டனை ப₄க₃வான் நிமித்தகாரணமாகவும், காலவிஶிஷ்டனை ப₄க₃வான் ஸஹகாரிகாரணமாகவும் ஆகிறான் என்பது மறைகளின் முடிவு. ப்ரக்ருதிகார்யமான இந்த லீலாவிபூ₄தியிலேயே ஸர்வேஶ்வரன் இப்படிக் காலத்தைத் துணைகொண்டு காரியம் செய்கிறான். ஸ்ரீ வைகுண்ட₂மாகிற நித்யவிபூ₄தியிலோவெனில், காலம் இருந்தபோதிலும் காலத்தின் துணையில்லாமல் தானே எல்லாம் செய்கிறான் ப₄க₃வான்.

केचित्काल एव नास्तीति वदन्ति। अन्ये तु तामसो महान् काल इति। उभयेषामागमबाधः प्रत्यक्षबाधश्च॥ १४१॥ षडिन्द्रियवेद्यः काल इत्याचार्याः। तेनानुमेयत्वादिनिरासः। इति कालो निरूपितः॥ १४२॥

इति श्रीवाधूलकुलतिलक - श्रीमन्महाचार्यस्य प्रथमदासेन श्रीनिवासदासेन विरचितायां यतीन्द्रमतदीपिकायां शारीरकपरिभाषायां कालनिरूपणं नाम पञ्चमोऽवतारः॥

---

२५१. लीलाविभूतावेवेशः कालानुगुणकार्यकृत्।
स्थितेऽपि काले वैकुण्ठे स्वतन्त्रः कुरुतेऽखिलम्॥

२५२. षडिन्द्रियाभिसंवेद्यः काल इत्युच्यते बुधैः।
तेनानुमेयवादश्च निरस्तस्स्यात्प्रमाणतः॥

॥ इति कालप्रकरणम्॥ ५॥

---

"காலம் ஸ பசதே தத்ர ந காலஸ் தத்ர வை ப்ரபு₄:"

[அப்பரமபத₃த்திலிருந்துகொண்டு அந்த ப₄க₃வான் காலத்தை மாறுதலடையச்செய்கிறுன்; அங்கு காலத்திற்கு (வஸ்துக்களை மாறுதலடையச்செய்யும்) வல்லமையில்லை.] என்னும் ஸ்ரீவிஷ்ணு புராணச்லோகம் இவ்விஷயத்தில் ப்ரமாணம். 140.

/ சிலர் 'காலம் எனும் தத்துவமே கிடையாது'என்கிறுர்கள். மற்றும் சிலர் 'தமோகு₃ணமுடைய மஹானே காலம்' என்கிறுர்கள். சாஸ்த்ரவிரோத₄மும், ப்ரத்யக்ஷவிரோத₄மும் வருகையாலே இவை பொருந்தமாட்டா. 141.

252. ஆறு இந்திரியங்களாலும் ப்ரத்யக்ஷமாக அறியப்படுகிறது காலதத்துவம் என்பது ஆசாரியர்களின் முடிவு. இந்திரியங்களால் ஒரு பொருளை 'இது இருக்கிறது' என்று அறிகிறேம், 'இருக்கிறது' என்றதாலே நிகழ்காலத்தோடு ஸம்ப₃ந்த₄ப்பட்டதாக அப்பொருளை அறிகிறேம். 'இருந்தது'

/ காரிகாவளியில் இல்லை.

## ॥ अथ षष्ठोऽवतारः ॥

अथ नित्यविभूतिर्निरूप्यते ॥ १४३ ॥ शुद्धसत्त्वधर्मभूतज्ञानजीवेश्वर-साधारणं लक्षणमजडत्वम्। अजडत्वं नाम स्वयंप्रकाशत्वम् ॥ १४४ ॥

---

## ॥ अथ नित्यविभूतिप्रकरणम् ॥ ६ ॥

२५३. शुद्धसत्त्वात्मिका नित्यविभूतिः कथ्यते बुधैः।
बहुप्रमाणसिद्धैषा ब्रह्माण्डोपरि संस्थिता॥

---

'இருக்கப்போகிறது' என்னும்போது முறையே இறந்த காலத்தோடும் வருங்காலத்தோடும் ஸம்ப₃ந்த₄ப்பட்டதாக அதை அறிகிறோம். இப்படி பொருள்களை அறிவிக்கும் இந்திரியங்கள் அவற்றுக்கு விசேஷணமாக மிளிரும் காலத்தையும் அறிவிக்கின்றன. ஆகையால் காலம் அனுமானத்தாலேயே அறியப்படுகிறது என்னும் வைசேஷிகமதம் தள்ளுண்டதாகிறது, ஆக, இவ்வளவால் ஜட₃மான அசித்துக்களில் இரண்டாவதான காலம் நிருபிக்கப்பட்டதாயிற்று. 142.

காலப்ரகரணம் முற்றிற்று

## 6. நித்யவிபூ₄திப்ரகரணம்

253. இனி, அஜட₃மான அசித்துக்கள் நித்யவிபூ₄தியென்றும், த₄ர்மபூ₄தஜ்ஞானமென்றும் இருவகைப்படும். அவற்றில் நித்யவிபூ₄தி இப்ரகரணத்தில் நிருபிக்கப்படுகிறது. இந்த நித்ய விபூ₄தியானது ரஜஸ்தமஸ்ஸுக்கள் சேராத ஶுத்₃த₄மான ஸத்வ குணத்தையுடையது என்று அறிவாளிகளால் உரைக்கப்படுகின்றது. "*தமஸ: பரஸ்தாத்*" "*ரஜஸ: பராகே*" "*தத் விஷ்ணோ: பரமம் பத₃ம்*" "*ஹிரண்மயே பரே லோகே*" "*நாகஸ்ய ப்ருஷ்டே₂*" "*பரமே வ்யோமந்*" இத்யாதி₃ ஶ்ருதிகளிலும், "*அத்யர்க்காநலதீ₃ப்தம் தத் ஸ்தா₂நம் விஷ்ணோ:*" "*தமஸ: பரம:*" "*வைகுண்டே₂ து பரே லோகே*" இத்யாதி₃களான உபப்₃ரும்ஹணங்களிலும் ப்ரஸித்₃த₄மாயிருக்கும் இந்த நித்யவிபூ₄தி ப்₃ரஹ்மாண்ட₃த்தின் மேலே உள்ளது. 143.

तत्र शुद्धसत्त्वधर्मभूतज्ञानसाधारणलक्षणम् पराक्त्वे सति अजडत्वम्। तत्तु स्वयम्प्रकाशत्वे सति परस्मा एव भासमानत्वम्॥१४५॥

२५४. अजडत्वं शुद्धसत्त्वधर्मभूतधियोस्तथा।
जीवेशयोश्च सामान्यलक्षणं बुधसंमतम्॥

२५५. स्वयंप्रकाशत्वमेतदजडत्वं निगद्यते।
धर्मभूतज्ञानशुद्धसत्त्वयोरपि लक्षणम्॥

२५६. पराक्त्वे सत्यजडता परस्मै भासमानता।
पराक्त्वं शुद्धसत्त्वस्य त्रिगुणान्यत्वसंयुतम्॥

254-*255. ஶுத்₃த₄ஸத்வம், த₄ர்மபூ₄தஜ்ஞானம், ஜீவன், ஈஶ்வரன் என்னும் நாலு தத்துவங்களுக்கும் அறிவாளிகளால் ஒப்புக்கொள்ளப்பட்ட பொது லக்ஷணம் '*அஜட₃மாயிருக்கை*' என்பதாகும். அஜட₃மாயிருக்கையாவது—தானே பிரகாஶிப்பதாயிருக்கை. 144.

255*-*256. த₄ர்மபூ₄தஜ்ஞானத்துக்கும், ஶுத்₃த₄ஸத்வமாகிற நித்யவிபூ₄திக்கும் பொதுவான லக்ஷணம் '*பராக்காயிருந்துகொண்டு அஜட₃மாயிருக்கை*' என்பதாகும். ஜீவன், ஈஶ்வரன் ஆகிய இருவர்க்கும் பொதுவான லக்ஷணம் '*ப்ரத்யக்காயிருந்துகொண்டு அஜட₃மாயிருக்கை*' என்பதாகும். *பராக்காயிருக்கையாவது* — பிறர்க்கே பிரகாஶிப்பதாயிருக்கை. இதற்கு எதிர்த்தட்டாய், 'தனக்குப் பிரகாஶிப்பதாயிருக்கை' *ப்ரத்யக்காயிருக்கை* எனப்படுகிறது. ஜீவன், ஈஶ்வரன் என்னும் இரண்டு தத்துவங்களே தமக்குத்தாமே பிரகாஶிப்பவையாகையால் அவையிரண்டு திரவியங்களே 'ப்ரத்யக்' எனப்படுகின்றன. மற்ற எல்லா திரவியங்களும் இந்த ஜீவேஶ்வரர்களுக்கே பிரகாஶிக்கிறபடியால் அவை 'பராக்' எனப்படுகின்றன. அவற்றுள் ப்ரக்ருதியும் காலமும் ஜட₃மாயிருந்துகொண்டு பராக்காயிருப்பவை. அதாவது:—பிறிதொன்றாலே, பிறர்க்குப் பிரகாஶிப்பதாயிருப்பவை. நித்யவிபூ₄தியும், த₄ர்மபூ₄தஜ்ஞானமும் அஜட₃மாயிருந்துகொண்டு பராக்காயிருப்பவை; அதாவது:— தாமே பிறர்க்குப் பிரகாஶிப்பவை. 145·

शुद्धसत्त्वं नाम त्रिगुणद्रव्यव्यतिरिक्तत्वे सति सत्त्ववत्त्वम्। निःशेषाविद्यानिवृत्तिदेशविजातीयान्यत्वं वा ॥ १४६ ॥ सा विभूतिः ऊर्ध्वप्रदेशेनानन्ता, अधःप्रदेशेन परिच्छिन्ना, अचेतना, स्वयम्प्रकाशा

---

२५७. सत्त्ववत्त्वं लक्षणं स्यात् अचेतनमिदं मतम्।
विष्णोर्नित्यविभूतिस्साऽनवच्छिन्नोर्ध्वदेशतः ॥

---

256*-*257. இனி, ஶுத்₃த₄ஸத்வமாகிற நித்யவிபூ₄திக்கு லக்ஷணம் — *'முக்கு₃ணமுள்ள திரவியத்தைக் காட்டிலும் வேறுபட்டதாய், ஸத்வகு₃ணத்தையுடையதாயிருக்கை'* என்பது. ஸத்வகு₃ணத்தையுடைய திரவியங்கள். ப்ரக்ருதியும், நித்யவிபூ₄தியுமாகிய இரண்டுமேயாகும். முக்கு₃ண திரவியமான ப்ரக்ருதியிலிருந்து இதை வேறுபடுத்துவதற்காக, *'முக்கு₃ணமுள்ள திரவியத்தைக்காட்டிலும் வேறுபட்டதாய்,* ஸத்வகு₃ணமுடையதாயிருக்கை" என்று லக்ஷணம் உரைக்கப்பட்டது. இந்த நித்யவிபூ₄தியானது த₄ர்மபூ₄தஜ்ஞானத்தைப்போலே ஜ்ஞானமயமாகச் சொல்லப்பட்டிருக்கிறது. ஆயினும் ஜீவேஶ்வரர்களைப்போலே இது அறிவுக்கு இருப்பிடமாயிருப்பதன்று; ஆகையால் இது அசேதனதிரவ்யமேயாகும். *ஸத்வகு₃ணத்தை மாத்திரமுடையது* என்றும் இதற்கு லக்ஷணமுரைக்கலாம். கர்மங்கள் அடியோடு அழியப்பெறும் தே₃ஶவிஶேஷத்திலும் வேறுவகைப்பட்டதைக் காட்டிலும் வேறுபட்டிருக்கை என்றும் இதற்கு லக்ஷணம் உரைக்கலாம். 146.

257*-258. விஷ்ணுவினுடைய இந்த நித்யவிபூ₄தி மேலேயும், பக்கங்களிலும் எல்லையற்றது; கீழே ப்ரக்ருதி மண்ட₃லத்தை எல்லையாக உடையது. அறிவுக்கு ஆஶ்ரயமல்லாமையாலே அசேதனமாயிருப்பது. ஆநந்த₃த்தையளிப்பதாய் ஆநந்த₃மயமாயிருக்கிறது; ஆத்மாவையும் அறிவையும் போலே தானே பிரகாஶிப்பது; கர்மம் காரணமாகவே ப₃த்₃த₄ஜீவர்களுக்கு இது பிரகாஶிப்பதில்லை. ஈஶ்வரன், நித்ய

च। आनन्दावहत्वादानन्दनामिका। पञ्चोपनिषन्मन्त्रप्रतिपाद्यतया पञ्चोपनिषदात्मिका ॥ १४७ ॥ अप्राकृतपञ्चशक्तिमत्तया(मयतया) पञ्चशक्तिमयीति निगद्यते॥ १४८ ॥

---

२५८. अधोदेशे परिच्छिन्नाऽचेतनाऽऽनन्दरूपिणी।
स्वयंप्रकाशा पञ्चोपनिषन्मन्त्रात्मिका स्मृता॥

२५९. पञ्चशक्तिमयी प्रोक्ता सत्त्वमात्रस्वरूपिणी।
ईश्वरस्य च नित्यानां मुक्तानामीश्वरेच्छया॥

---

முக்தர்கள் இவர்களுடைய அறிவுக்கு இது விஷயமாயிருந்த போதிலும், தம் தம் ஆத்மஸ்வரூபத்தைப்போலே அவ்வறிவையும் எதிர்பாராமல் தானே அவர்களுக்குப் பிரகாஶிப்பது இது. அதனாலேயே இது ஸ்வயம்ப்ரகாஶம், ஜ்ஞானமயம், அஜட₃ம் என்று சொல்லப்படுகிறது. சில ஆசாரியர்கள் இதை ஜட₃மாகவும் கருதினர் என்று ந்யாயஸித்₃த₄ாஞ்ஜனம் முதலியவற்றில் ஸ்ரீ வேதா₃ந்ததே₃ஶிகரால் காட்டப்பட்டது. பஞ்சோபநிஷந்மந்திரங்களாலே சொல்லப்படுவதாலே 'பஞ்சோபநிஷந்மயமானது' என்றும் கூறப்படுகிறது இந்த ஶுத்₃த₄ஸத்வ திரவியம். அப்ராக்ருதமான பஞ்சபூ₄தங்களும் பதினொரு இந்திரியங்களுமாயிருப்பது இது. 147.

*259 இந்த ஶுத்₃த₄ஸத்வதிரவியம், அப்ராக்ருதமான *ஶப்₃த₃ ஶக்தி, ஸ்பர்ஶஶக்தி, ரூபஶக்தி, ரஸஶக்தி, க₃ந்த₄ஶக்தி* என்னும் ***ஐந்து ஶக்திகளை*** உடையதாகச் சொல்லப்படுகிறது; இதனாலேயே பரமபத₃த்திலும் மிக மநோஹரமான ஶப்₃த₃ ஸ்பர்ஶரூபரஸக₃ந்த₄ங்கள் உள்ளனவாகச் சொல்லப்படுகின்றன; இதனாலேயே ***"ஸர்வக₃ந்த₄: ஸர்வரஸ:" "ஆதி₃த்ய வர்ணம்'*** முதலான வேத₃வாக்யங்கள் பொருளுடையவையாகின்றன. இந்த ஐந்து ஶக்திகளும் அப்ராக்ருதமாகையால், தியவையான ஶப்₃த₃ம், ஸ்பர்ஶம், ரூபம், ரஸம், க₃ந்த₄ம் ஆகியவை ப்ரக்ருதி மண்ட₃லத்திற்போலே நித்ய விபூ₄தியில் கிடையாதென்று ஏற்படுகிறது. இந்த நித்யவிபூ₄தி ஸத்வம் ஒன்றையே ஸ்வரூப

सा विभूतिरीश्वरस्य नित्यानां मुक्तानां चेश्वरसंकल्पात् भोग्य भोगोपकरणभोगस्थानरूपा च भवति। भोग्यानीश्वरशरीरादीनि। भोगोपकरणानि चन्दनकुसुमवस्त्रभूषणायुधादीनि। भोगस्थानानि तु गोपुरप्राकारमण्डपविमानोद्यानपद्मिन्यादीनि॥ १४९॥ तत्रेश्वरस्य नित्यमुक्तानां च

---

२६०. भोग्यभोगोपकरणभोगस्थानात्मिका भवेत्।
ईशदेहादि भोग्यं स्याद्वस्त्रस्रक्चन्दनादिकम्॥

२६१. भोगोपकरणं भोगस्थानं नानाविधं भवेत्।
प्राकारगोपुरोद्यानपद्मिनीमण्टपादिकम्॥

२६२. श्रीशस्य नित्यदेहाश्च नित्यानामपि ते तथा।
तस्य नित्येच्छयैव स्युः मुक्तानां देहसङ्ग्रहः॥

---

நிரூபககு₃ணமாகவுடையது; ரஜஸ்தமஸ்ஸுக்கள் கிடையாது. "*தமஸ: பரஸ்தாத்*" "*ரஜஸ: பராகே*" என்னும் வேத₃வாக்கியங்கள் இவ்வர்த்த₂த்தில் ப்ரமாணம். இதனாலேயே இது *ஶுத்₃த₄ஸத்வம்* எனப்படுகிறது. 148.

259*-261. இந்த ஶுத்₃த₄ஸத்வத்ரவியமானது, ஈஶ்வரன், நித்யர்கள், முக்தர்கள் ஆகியவர்க்கு ஈஶ்வரனுடைய ஸங்கல்பத்தால் *போ₄க்₃யமாகவும், போ₄கோ₃பகரணமாகவும், போ₄க₃ஸ்த₂ானமாகவும்* ஆகின்றது. ஈஶ்வரனுடைய தே₃ஹம் முதலியவை அனுப₄விக்கப்படும் *போ₄க்₃யங்களாகின்றன.* வஸ்திரம், மாலை, சந்த₃னம் முதலியவை அனுப₄வத்திற்குத் துணைப்பொருளான *போ₄க₃ உபகரணங்கள்* எனப்படுகின்றன. கொடியணி நெடுமதிள்கள், கோபுரங்கள், தோட்டங்கள், தாமரைக் குளங்கள், மண்டபங்கள் முதலியவை அநுப₄விக்குமிடங்களான *போ₄க₃ஸ்த₂ானங்கள்* எனப்படுகின்றன. 149.

262-*263. ஸ்ரீமந்நாராயணனின் நித்ய தே₃ஹங்களும், நித்யஸூரிகளின் நித்யதே₃ஹங்களும் அந்தப் பரமபுருஷனு

शरीराणि भगवन्नित्येच्छासिद्धानि। मुक्तानां शरीराणि, तेषां पित्रादि-
सृष्टिः, युगपदनेकशरीरपरिग्रह इत्यादीनि भगवत्संकल्पादेव भवन्ति
१५०। भगवतो व्यूहविभवार्चावतारशरीराण्यप्राकृतानि। अर्चाव-

---

२६३. पितृसृष्ट्यादिकाश्चापि भवन्ति श्रीपतीच्छया।
भगवद्व्यूहविभवार्चावताराख्यविग्रहाः॥

२६४. शुद्धसत्त्वमयाः प्रोक्तास्तस्मादप्राकृताश्च ते।
प्रतिष्ठितार्चारूपेषु महामन्त्रप्रभावतः॥

---

டைய நித்யமான இச்சை2யாலேயே ஸத்தைபெற்றுள்ளன. இவர்களுடைய அநித்யதே3ஹங்களும் அநித்யமான ப4க3வத் ஸங்கல்பத்தாலேயே உண்டாகின்றன. முக்தர்கள் எடுத்துக் கொள்ளும் தே3ஹங்களும், *"ஸ யதி3 பித்ருலோககாமோ ப4வதி ஸங்கல்பாதே3வாஸ்ய பிதரஸ் ஸமுத்திஷ்ட2ந்தி"* [அந்த முக்தன் பித்ருக்களை அடையவிரும்பினால், ஸங்கல்பத்தினாலேயே இவனுடைய பித்ருக்கள் வருகின்றனர்.] முதலான ஶ்ருதிகளில் சொல்லப்படும் 'பித்ருக்களை வரவழைத்தல்' 'ஒரே சமயத்தில் பல ஶரீரங்களை எடுத்துக்கொள்ளல்' முதலான செயல்களும் ப4க3வத்ஸங்கல்பத்தாலேயே நடைபெறுகின்றன. ப4க3வத் ஸங்கல்பமில்லாமல் நித்யமுக்தர்களுடைய ஸ்வரூபஸ்தி2தி ப்ரவ்ருத்திகளும் உளவாகமாட்டா என்பது ஶாஸ்த்ர ஸித்3த4ம். 150.

263*-265. ப4க3வானுடைய பரரூபத்தைப்போலே வ்யூஹம், விப4வம், அந்தர்யாமி, /அர்ச்சாவதாரம் என்னும்

---

/ அர்ச்சாரூபத்திலும் ஶுத்3த4ஸத்வ திரவியமுள்ளது என்பது ஸ்ரீவேதா3ந்ததே3ஶிகர் முதலான ஆசாரியர்களால் ஆத3ரிக்கப்பட்டது. ப்ராக்ருதமான அர்ச்சாரூபத்தில், தமருகந்தவுருவமென்பதையே கொண்டு, அப்ராக்ருத உருவிலுள்ள உகப்பைச் செய்துகொண்டு எழுந்தருளியிருக்குமிருப்பு அர்ச்சாவதாரம் என்று நம்பிள்ளை முதலான தென்னாசாரியர்களின் திருவுள்ளமென்பது பல பெரியோர்களின் கருத்து.

तारेषु प्रतिष्ठानन्तरं प्रसादोन्मुखभगवत्संकल्पाधीनमप्राकृतशरीरमत्रा - विर्भवति ॥ १५१ ॥ प्राकृताप्राकृतसंसर्गः कथमिति न शङ्कनीयम्। श्रीराम कृष्णाद्यवतारशरीरवदिति प्रमाणानुसारेण परिहारो द्रष्टव्यः ॥ १५२ ॥

---

२६५. शुद्धसत्त्वात्मिका मूर्तिः प्रसन्नस्य श्रियःपतेः।
आविर्भवति संकल्पादर्थोऽयं शास्त्रसंमतः ॥

२६६. प्राकृतस्याप्राकृतस्य संसर्गः कथमित्यलम्।
चर्चया रामकृष्णादिशरीरवदिहापि च ॥

२६७. ज्ञेयश्शास्त्रानुसारेण परिहारो मनीषिभिः।
तथाचेदुद्भवो लोके प्राकृते कथमीशितुः ॥

---

உருவங்களும் ஶுத்₃த₄ஸத்வமயங்கள் என்று சொல்லப்படு கின்றன. ஆகையால் அவையும் அப்ராக்ருதங்களே. ஶாஸ்திர முறைப்படி பிரதிஷ்டை₂ செய்யப்பட்ட அர்ச்சையுருவங்களில் மஹாமந்திரத்தின் பெருமையால் உகந்தருளிய ஸ்ரீமந்நாராயண னுடைய ஶுத்₃த₄ஸத்வத் திருமேனியொன்று, ஸுவர்ண ரஜதாதி₃களாலான அர்ச்சாவிக்₃ரஹத்தினுள், பாலினுள் நீர்கலந்து நிற்பதுபோல் ப₄க₃வத் ஸங்கல்பத்தால் கலந்து நிற்கிறது. இவ்வர்த்த₂ம் ஶாஸ்திரஸம்மதமுமாகும். 151.

266-267. இவ்வர்ச்சையில், ப்ராக்ருதத்₃ரவ்யத்தோடு அதற் கெதிரிடையான அப்ராக்ருதத்₃ரவ்யம் ப்ராக்ருதங்களான பாலும் நீரும்போலே கலந்துநிற்பது எப்படிக் கூடும்? என்று விசாரப்படவேண்டியதில்லை. ராமபிரான், கண்ணன் முதலிய அப்ராக்ருதத் திருமேனிகள் ப்ராக்ருதமான இவ்வுலகில் கலந்து நிற்கவில்லையோ? அப்படியே இங்கும் ஶாஸ்த்ரத்தையொட்டி அறிவாளிகள் ஶங்காபரிஹாரம் செய்துகொள்ளவேணும். அப்ராக்ருத ப்ராக்ருத த்₃ரவ்யங்கள் ஒன்று சேராதாகில் நாராயணன் நாட்டில் பிறந்து மனிசர்க்காகப் படாதனபட்டது எப்படிப் பொருந்தும்? 152.

मुक्तानां (शरीरपरिग्रहादिस्तु) शरीरादिपरिग्रहस्तु वसन्तोत्सव वेषपरिग्रहादिवत् स्वामिनो मुखविकासहेतुत्वात्कैङ्कर्यमेव ॥ १५३ ॥ ईश्वरशरीरस्य षाड्गुण्यप्रकाशकत्वात् षाड्गुण्यमिति व्यवहारः। नित्य-निरवद्यनिरतिशयौज्ज्वल्यसौन्दर्यसौगन्ध्यसौकुमार्यलावण्ययौवनमार्दवार्जवा-

---

२६८. स्वामिकैङ्कर्यसिद्ध्यर्थं मुक्तानां देहसंग्रहः।
भगवद्विग्रहस्सोऽपि षड्गुणैः पूर्ण इष्यते ॥

२६९. सौन्दर्यसौकुमार्यादिकल्याणगुणशेवधिः।
व्यापकत्वं विग्रहस्य तस्य गीतादिषु स्मृतम् ॥

---

*268. நித்யமுக்தர்கள் அனுப₄விப்பதற்காக ப₄க₃வானுக்குத் திருமேனி இருப்பது ஒட்டும். நித்யமுக்தர்களுக்குத் திருமேனி எதற்கு? எனில்: வஸந்தோத்ஸவஸமயத்தில் வேலைக்காரர்கள் பலவித₄வேஷங்கள் த₄ரித்து ஸ்வாமியை உகப்பிப்பதுபோலே, நித்யமுக்தர்கள் பலவித₄மான *ஶரீ*ரங்களை எடுத்துக்கொள்வதும் எம்பெருமானுடைய முகமலர்த்திக் குறுப்பான கைங்கர்யமேயாகும். ஸர்வதே₃*ஶ* ஸர்வகால ஸர்வாவஸ்தை₂களிலும் உசிதமான ஸர்வவித₄கைங்கர்யங்களையும் செய்வதே அவர்களுக்கு ஸ்வரூபமாகையால், அதற்காகவும் அவர்களுக்குத் திருமேனி அவசியமாகிறது. 153.

268*-269. ப₄க₃வானுடைய தி₃வ்யமங்க₃ளத் திருமேனி ஜ்ஞான*ஶ*க்தி ப₃லை*ஶ்*வர்ய வீர்யதேஜஸ்ஸுக்களாகிற ஆறு கு₃ணங்களையும் பிரகாசிக்கச் செய்வதாகையால் ஷட்₃கு₃ண பூர்ணமானது என்றும், ஷாட்₃கு₃ண்யமயமானது என்றும் சொல்லப்படுகிறது. நித்யமாய், குற்றமற்றதான ஒப்பற்ற ஒளி, ஸௌந்த₃ர்யம் (அவயவ அழகு), நறுமணம், ஸௌகுமார்யம் (திருமேனி மென்மை), திருமேனியழகு, யௌவனம், மனத்தின்மென்மை, நேர்மை முதலான எண்ணிறந்த கு₃ணங்களுக்கு இருப்பிடமாகவுமிருப்பது தி₃வ்யமங்க₃ளவிக்₃ரஹம்.

द्यो दिव्यमङ्गलविग्रहगुणाः। तस्य व्यापकत्वं गीतासु प्रसिद्धम्
॥ १५४ ॥ मुक्तस्य शरीरं नास्तीति वचनं तु कर्मकृतशरीराभावपरम्।
तत्रेन्द्रियादीनां नित्यत्वादत एव कार्यकारणभावाभावात् प्राकृतवन्न
तत्त्वान्तरव्यपदेशः। एतेन तत्र शरीरादिकं नास्तीति मतनिरासः।
* तमसः परस्तादित्युक्त्या प्रकृत्येकदेशवादनिरासः। अप्राकृत
शब्दस्पर्शरूपरसगन्धाश्रयत्वादाकाशव्यावृत्तिः। ज्ञानात्मकत्वप्रतिपादनात्
जडमिति मतनिरासः॥ १५५ ॥

---

ப4க3வத்3கீ3தை விச்வருபத3ர்சனப்ரகரணம் முதலானவிடங்களில் தி3வ்யமங்க3ளவிக்3ரஹம் எங்கும் வியாபித்திருப்பது என்பதுவும் காட்டப்பட்டிருக்கிறது. 154.

/ "அசரீரம் வாவ ஸந்தம்" [ சா2ந் 8-12-1 ] முதலான உபநிஷத்3வாக்யங்களில் முக்தனுக்கு சரீரமில்லை என்றது கர்மத்தால் ஏற்படும் ப்ராக்ருதமான சரீரமில்லை என்னும் கருத்திலேயேயாகும். அந்த அப்ராக்ருதசரீரத்தில் இந்த்3ரியங்கள் நித்யமாகையால், ப்ராக்ருத இந்த்3ரியங்களைப்போலே ஒன்றிலிருந்து உண்டாவதில்லையாகையால், அவற்றைப் போலே இவ்விந்திரியங்கள் தனித் தத்துவமாகக் குறிக்கப் படுவதில்லை. இத்தால், பரமபத3த்தில் சரீரம் இல்லை என்னும் வாத3ம் தள்ளப்பட்டது. "தமஸ: பரஸ்தாத்" [பு. ஸூ] [ தமஸ் எனப்படும் ப்ரக்ருதிக்கு அப்பாற்பட்டது ] என்று வேத3ம் பரமபத3த்தைக் குறிக்கையால், 'பரமபத3மானது ப்ரக்ருதியின் ஒரு பகுதியாயிருப்பது' என்னும் யாத3வப்ரகாச மதம் தள்ளப்படுகிறது. பரமாகாசம் எனப்படும் நித்ய விபூ4தியானது அப்ராக்ருதமான சப்3த3ம், ஸ்பர்சம், ருபம், ரஸம், க3ந்த4ம் என்னும் ஐந்து சக்திகளுக்கும் ஆச்ரயமா யிருப்பதால், சப்3த3ம் ஒன்றுக்கே ஆச்ரயமான ப்ராக்ருத மான ஆகாசத்தைக்காட்டிலும் அது வேறுபட்டது என விளங்குகிறது. "சிந்மயை: ஸ்வப்ரகாசைச்ச" முதலான ப்ரமாணங்களில் நித்யவிபூ4தியானது ஸ்வயம்ப்ரகாசமான ஜ்ஞாநஸ்வருபமாயிருப்பது என்று சொல்லப்படுகையால் "நித்ய

भगवतोऽप्राकृतदिव्यमङ्गलविग्रहस्यास्त्रभूषणाध्यायोक्तं (सर्वतत्त्वो) सर्वापाश्रयत्वम्। तद्यथा — पुरुषस्य कौस्तुभाकारत्वम्। प्रकृतेः श्रीवत्सरूपत्वम्। महतो गदारूपत्वम्। सात्त्विकाहङ्कारस्य शङ्खरूपत्वम्। तामसाहङ्कारस्य शार्ङ्गरूपत्वम्। ज्ञानस्यासिरूपत्वम्। अज्ञानस्य तदा-

---

२७०. सर्वतत्त्वाऽऽधारतोक्ता पुराणे तस्य वर्ष्मणः।
देशिकैरप्येवमुक्ता तत्प्रमाणानुसारिभिः॥

२७१. पुरुषः कौस्तुभाकारः श्रीवत्सः प्रकृतिस्तथा।
महान् गदा खड्गकोशौ ज्ञानाज्ञाने उभावपि॥

---

விபூ₄தி ஜட₃மான (ஸ்வயம் ப்ரகாஶமல்லாத) பொருள் என்னும் மதம் தள்ளப்படுகிறது. 155.

270-273. அத்திருமேனியானது ப்ரக்ருதி மண்ட₃லத்தி லுள்ள எல்லாத் தத்துவங்களுக்கும் ஆத₄ாரமாகவுமுள்ளது என்பது ஸ்ரீவிஷ்ணுபுராணம் அஸ்த்ரபூ₄ஷணாத்₄யாயம் [ 1-22 ] முதலானவிடங்களில் கோ₄ஷிக்கப்பட்டது. அந்த ப்ரமாணங் களைப் பின்பற்றிநிற்கும் ஆசாரியர்களாலும் இவ்வர்த்த₂ம் ஆத₃ரிக்கப்படுகிறது. புருஷதத்துவத்தை ப₄க₃வானின் திரு மார்விலிருக்கும் ஸ்ரீ கௌஸ்துப₄மணி த₄ரித்து நிற்கிறது: ப்ரக்ருதிதத்வத்தை ஸ்ரீவத்ஸமென்னும் மறு த₄ரித்து நிற்கிறது, 'மஹான்' என்னும் தத்வத்தை கௌமோத₃கீ என்னும் க₃தை₃யும், த₄ர்மபூ₄தஜ்ஞானத்தை நாந்த₃கமென்னும் வாளும்; அவ்வறிவை மறைக்கும் அஜ்ஞானத்தை அவ்வாளின் உறை யும், ஸாத்விகாஹங்காரத்தை ஶார்ங்க₃மென்னும் வில்லும், தாமஸாஹங்காரத்தைப் பாஞ்சசன்னியமெனும் ஶங்க₂மும், அதிசஞ்சலமான மனமென்னும் தத்துவத்தை அதிவேக₃மாகச் சுழலும் ஸுத₃ர்ஶனசக்ரமும், பத்து இந்திரியங்களைப் பத்து அம்புகளும், ஐந்து தந்மாத்ரைகளையும் ஐந்து பூ₄தங்களையும் பல மலர்களால் தொடுக்கப்பட்ட வனமாலையும் த₄ரித்து நிற்கின்றன. இவ்விடத்தில், ஸ்ரீவேதா₃ந்த தே₃ஶிகர் அருளிய

चारकरूपत्वम्। मनसश्चक्रत्वम्। ज्ञानेन्द्रियकर्मेन्द्रियाणां शररूपत्वम्। सूक्ष्मस्थूलभूतानां वनमालाकारत्वम्। अत्र

* चेतश्चक्रति चेतनासिरमतिस्तत्संवृत्तिर्मालिका
भूतानि स्वगुणैरहंकृतियुगं शंखेन शार्ङ्गायते।
बाणाः खानि दशापि कौस्तुभमणिर्जीवः प्रधानं पुनः
श्रीवत्सं कमलापते! तव गदामाहुर्महान्तं बुधाः॥

इति संगृह्योक्तं पद्यमनुसंधेयम्॥ १५६॥ सा विभूतिरामोदप्रमोद-

---

२७२. सात्त्विकाहङ्कृतिश्शार्ङ्गं तामसी शङ्खरूपभृत्।
मनश्चक्रं चेन्द्रियाणि दशाभूवन् शरास्तथा॥

२७३. तन्मात्रभूतदशकं वनमालास्वरूपधृत्।
वेदान्तार्योक्तगाथात्रानुसन्धेया बुधोत्तमैः॥

---

பின் வரும் பாசுரமும், "சேதச்சக்ரதி" என்று தொடங்கி தீபிகையில் எடுக்கப்பட்டுள்ள இதே பொருளுள்ள ஸ்ரீவேதாந்த தேசிக குமாரரான வரதாசார்யர் அருளிய ச்லோகமும் அறிவிற்சிறந்தவர்களால் அநுஸந்திக்கத்தக்கவை:-

**பாசுரம்**

"புருடன் மணிவரமாகப் பொன்று மூலப்
பிரகிருதிமறுவாக மான்தண்டாகத்
தெருள்மருள் வாள்மறைவாக ஆங்காரங்கள்
சார்ங்கஞ்சங்காக மனம்திகிரியாக
இருடிகங்களீரைந்தும் சரங்களாக
இருபூதமாலை வனமாலையாகக்
கருடனுருவமறையின் பொருளாம்கண்ணன்
கரிகிரிமேல் நின்றனைத்தும் காக்கின்றானே"
[ரஹஸ்யத்ரயஸாரம்-தத்வத்ரயசிந்தநாதிகாரம்] 156

संमोदवैकुण्ठाख्यरूपेण चतुर्विधा, पुनरनन्ता, त्रिपाद्विभूतिपरमपद-परमव्योमपरमाकाशामृतनाकाप्राकृतलोकानन्दलोकवैकुण्ठायोध्यादिशब्द - वाच्या च ॥ १५७ ॥ तस्यां विभूतौ द्वादशावरणोपेतमनेकगोपुर-प्राकारैरावृतं वैकुण्ठं नाम नगरम् । तत्रानन्दनामको दिव्यालयः । तदन्तः रत्नमयानेकस्तम्भसहस्रैर्विरचिता महामणिमण्डपाख्या सभा ।

---

२७४. वैकुण्ठपरमव्योमपराकाशाऽमृतादिभिः ।
वाच्या नित्यविभूतिस्सा श्रीशयोः परमप्रिया ॥

२७५. प्रमोदामोदसंमोदशब्दवाच्यापि सा भवेत् ।
द्वादशावरणोपेतं वैकुण्ठनगरं महत् ॥

२७६. अनेकदिव्यप्राकारगोपुराद्यैरलङ्कृतम् ।
आनन्दनामा तन्मध्ये भाति दिव्यालयो महान् ॥

---

274-*275. வைகுண்ட2ம், பரமவ்யோம, பரமாகாஶம், அம்ருதம், நாகம், அயோத்4யை, அபராஜிதை, ஆநந்த3லோகம், அப்ராக்ருதலோகம், த்ரிபாத்3விபூ4தி முதலான சொற்களால் சொல்லப்படுவது இந்த நித்யவிபூ4தி. இது மேலேயும், சுற்றுப் புறமும் அளவற்றது. பெரிய பிராட்டியார்க்கும், ஸர்வேஶ்வர னுக்கும் இனியதாயிருப்பது. ப்ரமோத3ம், ஆமோத3ம், ஸம் மோத3ம் என்று சொல்லப்படுவதும் இந்த நித்யவிபூ4தியேயாம்; ஆமோத3ம், ப்ரமோத3ம், ஸம்மோத3ம் வைகுண்ட2ம் என்பவை பரமபத3த்தில் நாலு வ்யூஹங்களுக்கு ஸ்த2ாநமான நான்குவித4 மான பகுதிகள் என்பர். 157.

275*-281. அந்த நித்யவிபூ4தியில் ஸ்ரீவைகுண்ட2ம் என் னும் பெயருள்ளதொரு பெரிய தி3வ்யநக3ரம் பனிரண்டு ஆவரணங்களாலே சூழப்பெற்றதாய் விளங்குகிறது. தி3வ்ய மான பல மதில்கள், கோ3புரங்கள், நந்த3வனங்கள், குளங்கள், ஆறுகள், ஓடைகள் முதலானவற்றாலே அலங்கரிக்கப்பட்டு விளங்குகிறது அது. அதன் நடுவில் ஆநந்த3ம் என்னும்

तस्यां सहस्रफणामणितेजोविराजितोऽनन्तः। तस्मिन् धर्मादिमयदिव्य-सिंहासनम्। तदुपरि चामरहस्ताभिः विमलादिभिः सेव्यमानमष्ट-

२७७. तत्र सभा भाति महामणिमण्टपनामिका।
फणासहस्रमणिभिस्तेजिष्ठो भगवान् सदा॥
२७८. विराजते तत्र शेषस्तस्मिन् सिंहासनं महत्।
धर्मादिमयमत्रास्ति विमलाद्याभिरुज्ज्वलम्॥
२७९. स्त्रीभिश्चामरहस्ताभिः पद्ममष्टदलैर्युतम्।
प्रकृष्टज्ञानधामा स आदिशेषोऽत्र दीप्यते॥
२८०. तस्मिन् वाङ्मनसातीतभूमम‌ङ्गलविग्रहः।
विभूतिद्वयनाथश्च कल्याणगुणसागरः॥

பெயரையுடைய திருக்கோயில் ஒன்று உள்ளது. அங்கு, மணிமயமான ஆயிரக்கணக்கான தூண்களையுடைய *திரு மாமணி மண்டபம்* என்னும் பெயருடைய ஸபை₄யொன்று விளங்குகிறது. அதில் ஆயிரம் படங்களிலுள்ள ரத்தினங்களின் ஒளியால் விளங்குகிற திருவநந்தாழ்வான் எழுந்தருளியிருக்கிறார். அவர்மேல் த₄ர்மம், அத₄ர்மம், ஜ்ஞாநம், அஜ்ஞாநம், வைராக்₃யம், அவைராக்₃யம், ஐச்₂வர்யம், அநைச்₂வர்யம் என்னும் எட்டு கால்களை உடைய சீரிய சிங்காசனம் உள்ளது. அத₄ர்மம், அஜ்ஞானம், அவைராக்₃யம், அநைச்₂வர்யம் ஆகியவை நித்யவிபூ₄தியிலுண்டோ? எனில்: த₄ர்மம், அத₄ர்மம் முதலானவற்றுக்கு அபி₄மானிகளான நித்யஸூரிகளே கால்களாக எழுந்தருளியிருக்கிறார்களாகையாலே குறையில்லை. அதன்மேல், சாமரமேந்திய விமலை, உத்கர்ஷிணி, கிரியை, யோகா₃, ப்ரப்₄வீ, ஜ்ஞாநா, ஸத்யா, ஈசா₂நா என்னும் பெண்ணுருக்கொண்ட ஸூரிகளால் விளங்கும் எட்டு இதழ் கொண்ட தாமரைமலர் உள்ளது. அதன்மேலே '*அமிதௌஜா: பர்யங்க:*' [கௌஷீ] என்று உபனிஷத்தில் ஓதப்படும் பெருத்த ஜ்ஞாநப₃லங்களையுடையவனான ஆதி₃சே₂ஷன் ஒளிவிடுகிறான்.

दलात्मकं पद्मम्। तदुपरि प्रकृष्टविज्ञानधामा शेषः। तदुपरि वाचः परं महदद्भुतम्॥१५८॥ एवं नित्यविभूतिस्संग्रहेण निरूपिता॥१५९॥

इति श्रीवाधूलकुलतिलक—श्रीमन्महाचार्यस्य प्रथमदासेन श्रीनिवासदासेन विरचितायां यतीन्द्रमतदीपिकायां शारीरकपरिभाषायां नित्यविभूतिनिरूपणं नाम षष्ठोऽवतारः॥

---

२८१. श्रीभूनीलादिसंयुक्तः नित्यमुक्तैश्च सेवितः।
लीलाकृतजगत्सृष्टिर्वासुदेवो विराजते॥

२८२. एषा विभूतिः श्रीशस्य संग्रहेण निरूपिता।
एषा नास्तीत्यादिवादाः प्रमाणशतखण्डिताः॥

॥ इति नित्यविभूतिप्रकरणम् ॥ ६ ॥

---

அந்த ஆதி₃ஶேஷனின் மேலே — வாக்குக்கும் மனத்துக்கும் எட்டாத பெருமையையுடைய மஹாத்₃பு₄தமான தி₃வ்ய மங்க₃ளத் திருமேனியையுடையவனும், இரண்டு விபூ₄திகளுக்கும் நாத₂னும், கல்யாணகு₃ணக் கடலாயிருப்பவனும், ஸ்ரீபூ₄மி நீளாதி₃தே₃விகளோடு கூடியவனும், நித்யமுக்தர்களால் ஸேவிக்கப்படுமவனும், உலகத்தைப்படைத்தளித்தழிப்பதை விளையாட்டாகச் செய்பவனுமான வாஸுதே₃வன் விளங்குகிறான் 158.

282. ஸ்ரிய:பதியினுடைய இந்த நித்யவிபூ₄தி இவ்வாறாகச் சுருக்கமாக விளக்கப்பட்டது. "இது இல்லை; இருந்தாலும் அழிவுள்ளது; ப்ராக்ருதமானது" முதலான வாத₃ங்கள்,— *"ஸோऽத்₄வந: பாரமாப்நோதி தத்₃ விஷ்ணோ: பரமம் பத₃ம்"* [ஸம்ஸார மண்ட₃லத்தின் அக்கரையை அடைகிறான்; அதுவே விஷ்ணுவின் பரமபத₃ம்] *"தத்₃ விஷ்ணோ: பரமம் பத₃ம் ஸதா₃ பஶ்யந்தி ஸூரய:"* [விஷ்ணுவின் அந்தப் பரமபத₃த்தில் நித்யஸூரிகள் எப்போதும் (பரமபுருஷனைக்) காண்கிறார்கள்.] *"நாகஸ்ய ப்ருஷ்டே₂" "ஹிரண்மயே பரே லோகே" "பரமே வ்யோமந்" "ப்ரஜாபதேஸ் ஸப₄ாம் வேஶ்ம" "தமஸ: பரஸ்தாத்" "ரஜஸ: பராகே" "தி₃வி திஷ்ட₂த்யேக:" "ஸ ஆக₃ச்ச₂தி விசக்ஷணமாஸந்தீ₃ம்" "உருகா₃யஸ்ய வ்ருஷ்ண: பரமம் பத₃ம்*

## ॥ अथ सप्तमोऽवतारः ॥

अथ क्रमप्राप्तं धर्मभूतज्ञानं निरूप्यते ॥ १६० ॥

## ॥ अथ धर्मभूतज्ञानप्रकरणम् ॥

२८३. ज्ञानस्वरूपयोर्ज्ञानं यज्जीवपरयोस्सदा ।
धर्मतामेति तद्धर्मभूतज्ञानमितीर्यते ॥

*அவப$_4$ாதி பூ$_4$ரி" "உத$_3$ஸ்தப்$_4$நா நாகம்ருஷ்வம் ப்$_3$ருஹந்தம்" "ஸஹஸ்ரஸ்தூ$_2$ணே விமிதே த்$_3$ருட$_4$ உக்$_3$ரே யத்ர தே$_3$வாநாமதி$_4$ தே$_3$வ ஆஸ்தே" "பரோதி$_3$வோ ஜ்யோதி:"* முதலான வேத$_3$ வாக்கியங்களாலும், இவற்றை உபப்$_3$ரும்ஹணம் செய்யும் நூற்றுக்கணக்கான இதிஹாஸபுராண வசனங்களாலும் தள்ளப் படுகின்றன. 159.

நித்யவிபூ$_4$திப்ரகரணம் முற்றிற்று.

## 7. தர்மபூதஜ்ஞாநப்ரகரணம்

283. இதுவரையில் மூன்று ப்ரமாணங்களும், பிரமேயங் களுக்குள் ஜட$_3$த்$_3$ரவ்யங்களான பிரகிருதியும், காலமும், அஜட$_3$த்$_3$ரவ்யங்களில் அசேதனமான நித்யவிபூ$_4$தியும் நிருபிக்கப் பட்டன. அசேதனமான அஜட$_3$த்$_3$ரவ்யங்களிரண்டில் மற் றொன்றான த$_4$ர்மபூ$_4$தஜ்ஞாநம் இனி இப்ரகரணத்தில் நிருபிக்கப் படுகிறது. மேல் வரும் மூன்று ப்ரகரணங்களிலும் முறையே அஜட$_3$த்$_3$ரவ்யங்களில் சேதனரான ஜீவனும், ஈச்வரனும், அத்$_3$ரவ்யங்களும் நிருபிக்கப்பட்டு, ப்ரமாணப்ரமேயரூப ஸகல பதா$_3$ர்த்த$_2$ சிந்தநபரமான இந்நூல் முடிவுபெறும். நிற்க அறிவையே ஸ்வரூபமாகக்கொண்ட சேதனர்களான ஜீவ னுக்கும் ஈச்வரனுக்கும் எப்போதும் யாதொரு அறிவு த$_4$ர்மமா யிருக்கிறதோ, அதுவே த$_4$ர்மபூ$_4$தஜ்ஞானம் எனப்படுகிறது. தேஜோரூபமான சூரியன், அக்$_3$னி, முதலானவற்றுக்குத் தேஜோமயமான ஒளி த$_4$ர்மமாயிருப்பதுபோலே ஜ்ஞானமயனை ஜீவனுக்கு ஜ்ஞானமயமான அறிவு த$_4$ர்மமாயிருக்கக் குறை யில்லை. 160.

स्वयंप्रकाशत्वे सति अचेतनद्रव्यत्वे सति सविषयत्वम् (स्वयंप्रकाशाचेतनद्रव्यत्वे सति विषयित्वम्), विभुत्वे सति प्रभावत् द्रव्यगुणात्मकत्वम्, अर्थप्रकाशो बुद्धिः इत्यादि तल्लक्षणम्। तद्धर्मभूतज्ञानं ईश्वरस्य नित्यानां च सर्वदा नित्यमेव विभु च। बद्धानां तिरोहितम्।

---

२८४. इदं सविषयं नित्यं स्वप्रकाशमचेतनम्।
एतन्नित्येष्वीश्वरे च सर्वदा विभु भासते॥

२८५. बद्धेषु तु विभुत्वं तत् तत्तत्कर्मतिरोहितम्।
संकोचप्रसरावस्थां यातीदं तेषु कर्मभिः॥

---

284-286. (1) தானே பிரகாஶிப்பதாய், அசேதநத்3ரவ்யமாய், விஷயத்தை உடையதாயிருக்கை. (2) எங்கும் பரவியதாய், ஒளிபோல த்3ரவ்யமொன்றுக்கு கு3ணமாயிருக்கை. (3) பொருள்களை அறிவிக்கும் அறிவாயிருக்கை முதலானவை இந்த த4ர்மபூ4தஜ்ஞானத்தின் லக்ஷணம். அடுத்த பாராவில் இதன் விரிவு காணலாம். இந்த அறிவானது விஷயத்தை அறிவதாகவே உள்ளது. ஜீவேஶ்வரர்களுடைய ஸ்வரூபத்தைக் காட்டிலும் இதற்குள்ள ஏற்றம் இது. இவ்வறிவு நித்யமாயிருப்பது; "*ந விஜ்ஞாதுர் விஜ்ஞாதேர் விபரிலோபோ வித்3யதே*" [அறிபவனை ஜீவனின் அறிவுக்கு அழிவில்லை.] என்னும் ஶ்ருதி இவ்விஷயத்தில் ப்ரமாணம். இது ஸ்வயம்ப்ரகாஶமாயிருப்பது; அதாவது—மற்றொன்றின் உதவியில்லாமல் தானே ஆத்மாவுக்கு ப்ரகாஶிப்பது. அஜட3மாயிருப்பது என்பதும் இதுவே. அசேதனமாயிருப்பது இது; அதாவது—அறிவற்றதாயிருப்பது இவ்வறிவு; தான் ஆத்மாவுக்கு த4ர்மமாயிருப்பதுபோலே, தனக்கு த4ர்மமாக மற்றொரு அறிவை உடைத்தாயிராதது இது என்று கருத்து. நித்யர்களிடத்தும், ஈஶ்வரனிடமும் உள்ள இந்த அறிவு எப்போதும் விபு4வாகவே (ஸர்வவ்யாபியாகவே) உள்ளது. ஸம்ஸாரிகளான ப3த்3த4 ஜீவர்களிடத்தில் அந்த விபு4த்வம் அவரவர்களுடைய கர்மத்தால் மறைக்கப்பட்டுள்ளது.

मुक्तानां पूर्वं तिरोहितमनन्तरमाविर्भूतम्। ननु—ज्ञानस्य नित्यत्वे 'ज्ञानमुत्पन्नम्, ज्ञानं नष्टम्' इति व्यवहारः कथमिति चेत्; तदुच्यते—

---

२८६. नाशोत्पत्तिव्यवहृतिरेतस्यैतदवस्थया।
मुक्तेरनन्तरं त्वेतत् यावत्कालं विभु स्मृतम्॥

---

புண்யபாபரூப கர்மங்களால் இவ்வறிவு விரிவையும் சுருக்கத்தை யும் அடைகிறது. ப₄த்₃த₄ரிடம் 'அறிவு உண்டாயிற்று' என்றும், 'அறிவு அழிந்தது' என்றும் உண்டாகும் வியவஹாரம் அறிவில் ஏற்படும் இவ்வேற்றத்தாழ்வுகளையிட்டே பொருந்தியதாகிறது. கல்லாகவும் கட்டையாகவும் உருக்கொண்டு கிடக்கும் சேதனரிடத்தும் அறிவு அழிவதில்லை; பாபகர்மத்தால் அடியோடு மறைக்கப்பட்டுக் கிடக்கிறதித்தனை. அப்படியே அறிவு உண்டாவதுமில்லை; புண்ய கர்மத்தால், மறைத்த பாபம் நீங்கி அறிவு வெளிப்படுகிறதித்தனை. மோக்ஷத்தில் அடியோடு ஸர்வ பாபங்களும் நீங்கப்பெறுவதால் அதற்குப்பின் காலதத்வமுள்ள தனையும் அவர்களிடத்திலுள்ள அறிவு ஸர்வவ்யாபியாகவே விளங்குகிறது.

"யதா₂ ந க்ரியதே ஜ்யோத்ஸ்நா மலப்ரக்ஷாளநாந்மணே:।
தோ₃ஷப்ரஹாணே ந ஜ்ஞாநமாத்மந: க்ரியதே ததா₂॥
யதோ₂த₃பாநகரணாத் க்ரியதே ந ஜலாம்ப₃ரம்।
ஸதே₃வ நீயதே வ்யக்திம் அஸத: ஸம்ப₄வ: குத:॥
ததா₂ ஹேயகு₃ணத்₄வம்ஸாத் அவபோ₃த₄தா₃யோ கு₃ணா:।
ப்ரகாஶ்யந்தே ந ஜந்யந்தே நித்யா ஏவாத்மநோ ஹி தே॥

[மணியிலுள்ள மலத்தைக் கழுவுவதினால் ஒளியானது புதிதாக உண்டுபண்ணப்படுவதில்லை. அப்படியே தோ₃ஷம் நீங்கும் போது ஆத்மாவுக்கு ஞானம் புதிதாக உண்டாவதில்லை; (எப்பொழுதுமுள்ள ஒளியும் ஞானமும் பிரகாஶிக்கத் தொடங்கு கின்றன) கிணறு வெட்டுவதினால் ஜலமானது உண்டுபண்ணப் படுவதில்லை. உள்ள ஜலமே வெளிப்படுத்தப்படுகிறது. இல்லாததை எப்படி உண்டுபண்ணமுடியும்? அப்படியே (ஞானத்தை மறைக்கும் பாபம் படிப்படியாகக் குறைந்து

ज्ञानस्य संकोचविकासावस्थामादाय तत्संभवात् ॥ १६१ ॥ इतेः

२८७. सकर्तृकावभासत्वं सकर्मकविभासता ।
इत्यादि लक्षणं प्रोक्तमनेकं देशिकोत्तमैः ॥

அதுகாரணமாக அஜ்ஞானம் முதலான) கெட்ட குணங்கள் படிப்படியாக நீங்குவதால், ஞானம் முதலிய ஆத்ம குணங்கள் வெளிப்படுத்தப் படுகின்றனவேயொழிய உண்டுபண்ணப்படுவதில்லை. அவை ஆத்மாவுக்கு நித்யமாயிருப்பவையன்றோ.] என்னும் விஷ்ணுத₄ர்ம (104-54...56) ஶ்லோகங்கள் இவ்விஷயத்தில் ப்ரமாணம். 161.

287. முன் நான்கு ஶ்லோகங்களில் விவரிக்கப்பட்ட த₄ர்மபூ₄தஜ்ஞானத் தன்மைகளிலிருந்து பின்வரும் லக்ஷணங்கள் அதற்குப் பொருந்துமென்பது தெளிவாகும். (1) அசேதநத்₃ரவ்யமாயும், விஷயத்தை க்₃ரஹிப்பதாயுமிருப்பது: (2) ஸ்வயம் ப்ரகாஶமாகவும் அசேதந த்₃ரவ்யமாகவும், ஸத்வ கு₃ணமற்றதாகவுமிருப்பது. (3) விபு₄வாயிருப்பதாகவும், ஒளியைப்போல் த்₃ரவ்யமாகவும், கு₃ணமாகவுமிருப்பது. (4) விஷயங்களை அறிவிக்கும் அறிவாயிருப்பது முதலியவை. ஸ்ரீ வேதா₃ந்த தே₃ஶிகர் பின்வரும் லக்ஷணங்களை அருளியுள்ளார் :—*(1) ஸகர்த்ருகாவப₄ாஸத்வம்*—கர்த்தாவோடு கூடியதாகப் பிரகாஶிப்பது; *(2) ஸகர்மகாவப₄ாஸத்வம்* — கர்மத்தை-(விஷயத்தை)-உடையதாய் பிரகாஶிப்பது; அதாவது:—'க₄டமஹம் ஜாநாமி' [நான் குடத்தை அறிகிறேன்] என்னும் அறிவானது தான் பிரகாசிக்கும் போதே,-'அஹம்' என்று கர்த்தா (அறிவுக்கு ஆஶ்ரயம்) ஆன ஆத்மாவோடு கூடியதாகவும், 'க₄டம்' என்று அறிவுக்கு விஷயமான கர்மத்தோடு கூடியதாகவுமே பிரகாஶிக்கிறதன்றோ. இத்தன்மைகள் எல்லா அறிவுக்கும் உண்டாகையாலும், வேறு எதற்கும் கிடையாதாகையாலும் இவை அறிவின் லக்ஷணமாகின்றன. (1) மிகவும் வேக₃த்தையுடைத்தாயிருப்பது, (2) மிகவும் நுண்ணியதாயிருப்பது, (3) மிகவும் லகு₄வாயிருப்பது, (4) தானிருக்கும்போது பிரகாஶியாமலிராமை என்னும் லக்ஷணங்கள் ஸ்ரீமந்நாத₂முனிகளால் நியாயதத்துவத்திலே

पादात् यथा उदकं क्षरति, तथा ज्ञानमपीन्द्रियद्वारा निस्सृत्यार्थेन सन्निकृष्यते। अहिकुण्डलवत् संकोचविकासौ॥ १६२॥

---

२८८. निस्सृत्येन्द्रियमार्गेण ज्ञानं बाह्यार्थबोधकम्।
दृते रन्ध्राद्वारिधारा निर्गच्छति यथा बहिः॥

२८९. ऋजुकुण्डलभावौ च यथाऽहेस्तद्वदस्य च।
यदाश्रयस्सदा यस्यात्स तस्य गुण उच्यते॥

२९०. सदा चान्याश्रितत्वास्य तद्गुणत्वं प्रकीर्त्यते।
द्रव्यत्वं चात्र संकोचविकासावस्थया भवेत्॥

---

அருளிச்செய்யப்பட்டன. அவ்யாப்தி அதிவ்யாப்தி பரிஹாரத்திற்காக இவற்றில் சில பரிஷ்காரங்களைச் செய்து கொள்ள வேண்டும். ஆக இப்படி இந்த த₄ர்மபூ₄தஜ்ஞானத்திற்கு ஆசார்யர்களால் நிரூபிக்கப்பட்ட லக்ஷணங்கள் பலவாயிருக்கின்றன. 161.

288-*289. இவ்வறிவானது இந்திரியத்தின் வழியாக வெளிப்பட்டு வெளிவிஷயங்களை அறிவிக்கிறது. துருத்தியின் துளையிலிருந்து எப்படி நீர்த்த₄ாரை வெளிப்படுகிறதோ, அப்படியே இது இந்திரியங்களின் வழியாக வெளிப்படுகிறது. பாம்பு ஒருகால் தன் உடலை நீட்டியும், ஒருகால் சுருட்டியுமிருப்பதுபோல், இதுவும் சிலசமயம் விரிந்தும், சிலசமயம் சுருங்கியுமிருக்கிறது. 162.

289*-291. இந்த த₄ர்மபூ₄தஜ்ஞானம் த்₃ரவ்யமாகவும் கு₃ணமாகவுமிருக்கிறதென்பது விவரிக்கப்படுகிறதினி. *கு₃ணமாவது*:- யாதொன்று மற்றொன்றைத் தான் உள்ள வரையிலும் ஆச்ரயித்திருக்கிறதோ, அது அந்த மற்றொன்றுக்கு கு₃ணமெனப்படுகிறது. இந்த லக்ஷணத்தின்படி பார்த்தால், எப்போதும் ஆத்மாவை விட்டுப் பிரியாமலிருக்கும் அறிவு ஆத்மாவிற்கு கு₃ணம் எனத்தக்கது என்பது தெளிவாகும். பல நிலைகளுக்கு

२९१. प्रभायामिव चात्रापि धर्मद्वयमबाधितम्।
स्वाश्रयात्स्थितिरन्यत्र तद्वद्द्वोपपद्यते॥

२९२. इदं च दीपवत्स्वस्य स्वान्यस्यापि प्रकाशकम्।
स्वप्रकाशमपीदं न सदा सर्वस्य भासते॥

२९३. अर्थप्रकाशवेलायां स्वाश्रयस्यैव दीप्यते।
कालान्तरीयं ज्ञानं तु स्मृत्यैव ज्ञायते तथा॥

---

ஆ*ஶ்*ரயமாயிருப்பது த்₃ரவ்யம் என்று த்₃ரவ்ய லக்ஷணத்தைச் சொல்லியிருக்கிறோம். இந்த த₄ர்மபூ₄தஜ்ஞானத்திற்கும் சுருங்கி யிருக்கும் நிலைகளும், விரிந்திருக்கும் நிலைகளும் உண்டாகை யாலே இது த்₃ரவ்யமாகவும் ஆகிறது; ஒரே பொருள் த்₃ரவ்ய மாகவும் கு₃ணமாகவும் ஆகலாமோ? எனில்; சூரியன் முதலிய தேஜ:பதா₂ர்த்த₂ங்களின் ஒளி த்₃ரவ்யமாகவும் கு₃ணமாகவும் ஆவதுபோலே இதுவும் ஆகலாம். ந்யாய மதத்திற்போலே, நம் மதத்தில் த்₃ரவ்யமாயிருக்கையும், கு₃ணமாயிருக்கையும் ஒன்றுக்கொன்று விருத்₃த₄மன்று என்பது இவ்விடத்தில் குறிக்கொள்ளத்தக்கது. ஒரு பொருளுக்கு கு₃ணமாயிருப்பது அப்பொருளில்லாத வேறிடத்திலும் பரவியிருக்க முடியுமோ? எனில்: சூரியனுக்கு கு₃ணமான ஒளி எங்கும் பரவியிருப்பது போல, இதுவும் ஆ*ஶ்*ரயமில்லாதவிடத்திலும் பரவுவது கூடும். *

292-*295. விளக்கு முதலிய ஒளிப்பொருள்களைப்போலே இது தன்னையும், மற்றவற்றையும் ஒளிவிடச்செய்வது. தானே பிரகா*ஶி*ப்பதாயினும் இது எல்லோருக்கும் எப்போதும் பிரகா*ஶி*ப்பதில்லை. விஷயங்களை ஒளிவிடச்செய்யும்போதே, தனக்கு ஆ*ஶ்*ரயமான ஆத்மாவிற்கு மாத்திரமே இது பிரகா*ஶி*க்கிறது. இறந்த காலத்தில் ஏற்பட்ட அறிவு '*ஸ்ம்ருதி*' எனப்படும் நினைவினாலேயே அறியப்படுகிறது. தானே ஒளி விடுவதில்லை. ஒவ்வொரு ஆத்மாவுக்கும், ஈ*ஶ்*வரனுக்கும் தனித்தனியாயிருக்கும் இந்த த₄ர்மபூ₄தஜ்ஞானங்களில் ஒரு சேதனனுடைய அறிவு மற்றொருவனுக்கு ப₃த்₃த₄த₃*ஶை*யில் தானே பிரகா*ஶி*ப்பதில்லை; அவனுடைய செயல்கள் முதலிய

सर्वं ज्ञानं स्वत एव प्रमाणम्। स्वयंप्रकाशं च ॥ १६३ ॥
विप्रतिपन्ना संवित् स्वगतव्यवहारं प्रति स्वाधीनकिञ्चित्कारा; स्व-

---

२९४. आत्मान्तरगतं ज्ञानमनुमानेन गृह्यते।
एकमेव ज्ञानमतो विषयो विषयि स्वयम् ॥
२९५. यतः स्वयंप्रकाशं सत् प्रकाशयति चापरान्।
स्वतःप्रमाणमिदमित्युच्यते शास्त्रविद्वरैः ॥
२९६. स्वतो ज्ञानेषु विषयास्तित्वमेव प्रतीयते।
शुक्तौ रजतबुद्धावप्यस्तितैव प्रकारिणी ॥
२९७. प्रकारांशे परं दोषात् प्रमात्वं प्रतिबध्यते।
तस्मात्प्रमायाः प्रामाण्यं स्वत एवेति निश्चितम् ॥

---

வற்றைக்கொண்டு அநுமானத்தாலே அறியப்படுகிறது. இப்படி தானே பிரகாஶிப்பதாகவும், பிறவற்றை ஒளிவிடச்செய்வதாகவுமிருப்பதால் அறிவு ஒன்றே விஷயமாகவும் விஷயியாகவும் இருக்கிறது; அதாவது—பொருள்களைத்தான் க்₃ரஹிப்பதாகவும், தானும் க்₃ரஹிக்கப்படுவதாகவும் இருக்கிறது. *

295*-*298. 'இந்த அறிவானது தானகவே (இயற்கையிலே) பிரமாணமாய் - (உண்மையறிவாய்) - இருப்பது' என்று சிறந்த சாஸ்திர ஞானிகள் உரைக்கின்றனர். ஆனல் இங்கு ஒரு விஷயத்தைத் தெளிவாக அறியவேண்டும். 'பொருள் உள்ளது' என்பது மாத்திரமே அறிவில் தானகத் தோன்றுவது. அப்பொருளின் தன்மைகளில், மற்ற காரணங்களால் மயக்கம் ஏற்பட இடமுண்டு. சிப்பியைப் பார்த்து 'இது வெள்ளி' என்று நினைப்பதாகிற அறிவிலும் 'இது' என்னும் ப்ரகார்யம்ஶத்தாலே அப்பொருளின் உண்மை (உள்ளதாயிருக்கும் தன்மை) தானகவே அறியப்படுகிறது. 'சிப்பியாயிருக்கும் தன்மை'யாகிற ப்ரகாராம்ஶத்தில், தோ₃ஷத்தாலே உண்மை அறிவு தடைபட்டுத் தவருன அறிவு ஏற்படுகிறது. ஆகையால், அறிவுக்குத் தானகவே ப்ராமாண்யம் உண்டென்று நிர்சயிக்கப்படுகிறது. ப்₄ரமஸ்த₂லங்களில் தோ₃ஷத்தாலே ப்ரகாராம்ஶத்தில் அப்ராமாண்யம் உண்டாகிறது. 163.

सजातीयसंबन्धानपेक्षव्यवहारहेतुत्वात् ; अर्थेन्द्रियदीपादिवत् । न च

இனி, 'ஜ்ஞானம் தானே ப்ரகாசிப்பது' என்று முன் கூறியது அநுமானத்தைக்கொண்டு ஸாதி₄க்கப்படுகிறது. "விசார விஷயமாயிருக்கும் த₄ர்மபூ₄தஜ்ஞானம், தன்னால் உண்டுபண்ணப்படும் வ்யவஹாரத்தைக் (வழக்கைக்) குறித்து, தனக்கே அதி₄நமான வியாபாரத்தை (செயலை) உடையது; தன் ஜாதியைச் சேர்ந்த மற்றொன்றின் ஸம்ப₃ந்த₄த்தை (தொடர்பை) எதிர்பாராமல், தானே அவ்வழக்கிற்குக் காரண மாயிருப்பதாகையால்; விஷயங்கள், இந்திரியங்கள், விளக்கு முதலானவற்றைப்போலே" என்பது 'ஜ்ஞாநம் ஸ்வயம் ப்ரகாசம்'என்று ஸாதி₄க்கும் அநுமானமாகும். முதலில் மூன்று த்₃ருஷ்டாந்தங்களையும் எடுத்துக்கொள்வோம். (1) *விஷயங்களாகிற வெளிப்பொருள்கள்* தம்மைப்பற்றிய வழக்கை உண்டாக்கும்போது, இந்த்₃ரியங்களோடு அவற்றுக்குள்ள ஸம்ப₃ந்த₃ம் வ்யாபாரம் ஆகிறது. இங்கு வழக்கு உண்டாகும்போது, விஷயங்களைக் காட்டிலும் வேறு ஜாதியான விளக்கு முதலானவற்றோடு தொடர்பு எதிர்பார்க்கப்படுகிறதேயொழிய, ஒரே ஜாதியான மற்றொரு விஷயத்தின் தொடர்பு எதிர் பார்க்கப்படுவதில்லை. *(2) இந்த்₃ரியங்கள்* க₄டம் முதலான விஷயங்களைப் பற்றிய வ்யவஹாரத்தை உண்டாக்கும்போது, அவ்விந்திரியங்கள் குடத்துடன் சேருவதே வ்யாபாரம் ஆகிறது. இங்கு வழக்கு உண்டாகும்போது, இந்த்₃ரியங்களைக் காட்டிலும் வேறு ஜாதியான விஷயம், விளக்கு முதலானவற்றோடு தொடர்பு எதிர்பார்க்கப்படுகிறதேயொழிய, ஒரே ஜாதியான மற்றோர் இந்திரியத்தோடு தொடர்பு எதிர்பார்க்கப் படுவதில்லை. (3) *விளக்கு* க₄டம் முதலான விஷயங்களைப் பற்றிய வழக்கை உண்டாக்கும்போது, இருட்டைப் போக்குவது அதன் வ்யாபாரம் (செயல்) ஆகிறது. இங்கு வழக்கு உண்டாகும்போது, விளக்கைக் காட்டிலும் வேறு ஜாதியான விஷயம், இந்த்₃ரியங்கள் முதலியவற்றோடு தொடர்பு எதிர் பார்க்கப்படுகிறதேயொழிய, ஒரே ஜாதியான மற்றொரு விளக்கு, அல்லது ஸூர்ய வெளிச்சம் முதலானவற்றோடு தொடர்பு எதிர்பார்க்கப்படுவதில்லை. இம்மூன்று த்₃ருஷ்டாந்தங்களிற்போலவே, ஜ்ஞானமானது க₄டம் முதலான விஷயங்களைப் பற்றியோ தன்னைப் பற்றியோ வழக்கை உண்டாக்கும்

चक्षुरालोकयोस्सजातीयत्वं, आहङ्कारिकतैजसयोर्भेदात् (इन्द्रियभेदः)। अनेन—ज्ञानस्य क्षणिकत्वम्, त्रिक्षणावस्थायित्वम्, प्रातिभासिकवत् व्यावहारिकस्यापि मिथ्यात्वम्, परतः प्रामाण्यम्, ज्ञानस्यैवात्मत्वमित्यादिपक्षा निरस्ताः। स्तम्भः स्तम्भ इत्यादिधारावाहिकज्ञानं तु एकमेव॥१६४॥

போது, அவ்விஷயங்களோடு சேருவது ஜ்ஞானத்தின் வ்யாபாரமாகிறது. இங்கு வழக்கு உண்டாகும்போது, அங்குபோலே ஜ்ஞானத்தைக் காட்டிலும் வேறு ஜாதியான விஷயம், இந்த்₃ரியம், விளக்கு முதலானவற்றோடு தொடர்பு எதிர்பார்க்கப்பட்டாலும், ஒரே ஜாதியான மற்றொரு த₄ர்மபூ₄தஜ்ஞானத்தோடு தொடர்பு எதிர்பார்க்கப்படுவதில்லை. ஆகையால், இவ்வநுமானத்திலிருந்து, ஜ்ஞாநம் தன்னைக் காட்டிக்கொள்வதற்கு மற்றொரு ஜ்ஞானத்தை எதிர்பாராமையால் ஸ்வயம்ப்ரகாசம் (தானே பிரகாசிப்பது) என்று தேறிற்று. இங்கு பின்வருமாறு ஓர் ஆக்ஷேபம் எழுகிறது:— இரண்டாவது மூன்றாவது த்₃ருஷ்டாந்தங்களில் கண் எனும் இந்த்₃ரியம் தைஜஸம் (தேஜஸ்ஸினால் உண்டாகின்றது); ஆகையால், அது தைஜஸமான விளக்கோடு ஒரே ஜாதியைச் சேர்ந்ததாயிற்றே என்பது அவ்வாக்ஷேபம். இதற்கு பதிலாவது:— கண் தைஜஸம் என்று 'தேஜஸ்ஸினால் *போஷிக்கப்படுவது*' என்னும் கருத்தில் ச்ருதி முதலானவற்றில் சொல்லப்படுகிறதேயொழிய, 'தேஜஸ்ஸினால் *உண்டாவது*' என்னும் கருத்தில் சொல்லப்படவில்லை. ஆகையால் கண்ணும் விளக்கும் ஒரே ஜாதியைச் சேர்ந்தனவல்ல. இவ்வளவால்—(1) ஜ்ஞானம் க்ஷணிகம் என்னும் பௌ₃த்₃த₄மதம், (2) ஜ்ஞாநம் மூன்று க்ஷணங்களே இருப்பது என்னும் நையாயிகமதம், (3) சிப்பியை வெள்ளியென மயங்கும் ப்ராதிப₄ாஸிக ஸ்த₂லத்திற்போலே, வெளியுலகைக் காணும் வ்யாவஹாரிகஜ்ஞானமும் மயக்கமே என்னும் மாயாவாதி₃மதம். (4) ஜ்ஞாநம் பிரிதொன்றாலேயே ப்ரமாணமாகிறது என்னும் நையாயிகமதம். (5) ஜ்ஞாந மாத்ரமே ஆத்மா (ஜ்ஞாநத்தை உடையதல்ல) என்னும் அத்₃வைதிமதம் ஆகிய மதங்கள் தள்ளப்பட்டனவாகின்றன. "கம்பம், கம்பம்" என்று தொடர்ந்து ஒரே பொருளை அறிவதாகிற த₄ாராவாஹிக விஜ்ஞாநம் (அறிவுக் கோர்வை) சிலர் கூறுவது போல் பல ஜ்ஞானங்களன்று; ஒரே ஜ்ஞாநமே. 164.

ननु, आगमबलात् ज्ञानस्य नित्यत्वाङ्गीकारे कथं जागरसुषुप्त्यादिभेदसिद्धिरिति चेन्न। यथा दाहकस्य वह्नेः दाह्यसन्निधौ मण्यादिप्रतिबन्धकात् दाहाभावः, तद्वत् ज्ञानतिरोधायकतमोविशेषसंनिधानासंनिधानाभ्यां स्वापादिसिद्धिः। पुंस्त्वादिवच्च। पुंस्त्वादिकं तु बाल्ये तिरोहितं यौवने आविर्भवति ॥ १६५ ॥ यो यदाश्रितस्वभावः, स

२९८. अप्रामाण्यं प्रकारांशे भ्रमस्यायाति दोषतः।
इदं ज्ञानं नित्यमपि स्वापादौ तु तिरोहितम् ॥
२९९. प्रगाढतमसा वह्निशक्तिर्मण्यादिना यथा।
अन्तर्वस्तुस्फूर्तिरस्ति स्वापादाविति केचन ॥

298*–299. *"ந விஜ்ஞாதுர் விஜ்ஞாதேர் விபரிலோபோ வித்₃யதே"* [அறிபவனின் அறிவுக்கு அழிவில்லை.] என்னும் வேத₃வாக்கிய ப₃லத்தாலே அறிவை நித்யமாக ஒப்புக்கொண்டால், தூங்கும்போதும் மூர்ச்சை₂யுறும் போதும் அறிவற்றிருப்பதற்குக்காரணமென்ன? எனில், அப்போதும் அறிவு இருக்கிறது. ஆனால் வலிதான தமோகு₃ணத்தால் அது மறைக்கப்பட்டிருக்கிறது. எரிக்கும் சக்தியுள்ள நெருப்பு—மணி, மந்திரம் முதலான தடைகள் இருக்கும்போது வைக்கோல் முதலியவற்றை எரிப்பதில்லையென்பதைக் காண்கிறோம்; அப்படியே தூக்கம் முதலானவற்றில் அறிவை மறைக்கும் தமோகு₃ணம் இருப்பதால் அறிவு வெளிப்படுவதில்லை; அக்கு₃ணம் மேலோங்கியில்லாதபோது அறிவு வெளிப்படுகிறது. இவ்விஷயத்தில் மற்றுமோர் உத₃ாஹரணமுண்டு. ரேதஸ்ஸு (வீர்யம்) என்னும் ஆண்மைத்தாதுவானது உடம்பில் எப்போதும் இருந்தாலும் பா₃லப் பருவத்தில் தடையிருப்பதாலே அது தோன்றுவதில்லை. வாலிபப்பருவத்தில் தடையில்லாமையாலே வெளிப்படுகிறது. "தூக்கத்திலும், உள்ளேயிருக்கும் ஆத்மவஸ்துவின் அநுப₄வம் உள்ளது; அதனாலேயே 'நான் ஸுக₂மாகத் தூங்கினேன்' என்று தூங்குமவன் ஸுகா₂நுப₄வத்தை உணருகிறான்" என்று சிலர் உரைக்கிறார்கள். ஆகையால் அறிவுக்கு எக்காலத்திலும் அழிவில்லை என்பது நிச்சயம். 165.

तस्य गुण इति गुणलक्षणलक्षितत्वात् ज्ञानं गुणः; विशेषणादिवत्। यतस्संकोचविकासावस्थावत् अतो द्रव्यमपि भवति। आत्मगुणभूतस्य ज्ञानस्य द्रव्यत्वं कथमिति न शङ्कनीयम्। प्रभावत् एकस्यैव द्रव्यत्व-गुणत्वयोर्विरोधाभावात्। अवस्थाश्रयो द्रव्यमिति हि द्रव्यलक्षणम्। स्वाश्रयादन्यत्र वर्तमानत्वमपि प्रभावदुपपद्यते ॥ *१६६ ॥ प्रयोगश्च— गुणभूता बुद्धिः द्रव्यम्, प्रसरणादिमत्त्वात्, प्रभावत्; ज्ञानं द्रव्यम्, संयोगादृष्टान्यत्वे सति भावनाकारणत्वात्, आत्मवत्—इति। मुक्त-ज्ञानस्य युगपदनन्तदेशसंयोगो नयनसूर्यादितेजोवत् संभवति ॥ १६७ ॥ ज्ञानम्, मतिः प्रज्ञा संवित् धिषणा धीः मनीषा शेमुषी मेधा बुद्धिः- इत्येवमादयश्शब्दाः ज्ञानपर्यायाः ॥ १६८ ॥ बुद्धिरेवोपाधिभेदात् सुख

---

/ "கு3ணமாயிருக்கும் ஜ்ஞானம் த்3ரவ்யமாகவுமிருக்கிறது. விரிதல், சுருங்குதல் முதலான க்ரியைகளை உடைத்தாயிருக்கையால்; (ஸூர்யன் முதலியவற்றின்) ஒளியைப்போலே" "த4ர்மபூ4த ஜ்ஞானம் த்3ரவ்யமே; ஸம்யோக3ம், புண்யம் ஆகியவற்றைக் காட்டிலும் வேறுபட்டதாயிருந்துகொண்டு, பா4வநா ரூபமான த்4யானத்திற்குக் காரணமாயிருப்பதால்; ஆத்மாவைப்போலே" என்னும் அனுமானங்கள்—ஜ்ஞானம் கு3ணமாயிருந்தபோதிலும் த்3ரவ்யமாகவுமிருக்கும் என்னும் விஷயத்தை ஸாதி4க்கின்றன. கண்ணினுடைய கிரணங்களும், ஸூர்யனுடைய கிரணங்களும் ஒரே சமயத்தில் வெகுதூ3ரம் பரவுவதுபோல், முக்தனுடைய ஜ்ஞானம் ஒரே சமயத்தில் எல்லாவிடத்திலும் பரவுவதும் பொருந்தும். 167.

*300. ஸம்வித், தீ4, தி4ஷணா, ஜ்ஞானம், மதி, ப்ரஜ்ஞா, மநீஷா, ஶேமுஷீ, மேதா4, பு3த்3தி4 முதலான பத3ங்கள் த4ர்மபூ4தஜ்ஞானமாகிற அறிவைச் சொல்லுமவையாகும். 168.

---

*148, 149 பக்கங்களில் உள்ள 289* - 291 ஶ்லோகங்களின் விவரணம் தீ3பிகை 166ன் விவரணமாகும்.

दुःखेच्छाद्वेषप्रयत्नरूपा। सुखादे(रवजनकतया)र्जनकतयाऽभ्युपगतज्ञानातिरेके प्रमाणाभावात्। इच्छामि द्वेष्मीति व्यवहारस्य स्मरामीत्यादिवत् ज्ञानविशेषेणोपपत्तेः ॥ १६९ ॥

---

३००. संविद्धीर्धिषणाप्रज्ञेत्यादयो ज्ञानवाचकाः।
सुखदुःखप्रयत्नेच्छाद्वेषरूपा भवेन्मतिः॥

३०१. उपाधिभेदान्न भवेत्तेषां ज्ञानातिरिक्तता।
स्मरामीत्यादिवद्द्वेष्मीच्छामीत्याद्या हि देहिनाम्॥

३०२. व्यवहारा ज्ञानभेदकृता एवेति सम्मतम्।
कामादयो मन इति श्रुत्युक्तिर्धीभिदाजुषः॥

---

300*–*302. ஸுக₂ம், து₃க்கம், ப்ரயத்நம், விருப்பம், வெறுப்பு முதலானவை பற்பல உபாதி₄களாலே வேறுபட்டிருக்கும் ஜ்ஞானத்தின் நிலைகளேயாகும். உதா₃ஹரணமாக, அநுகூல விஷயஸம்ப₃ந்த₄மாகிற உபாதி₄யிலேலே அறிவு ஸுக₂மாக மாறுகிறது; பிரதிகூல விஷயஸம்ப₃ந்த₄மாகிற உபாதி₄யிலேலே அறிவு து₃க்க₂மாக மாறுகிறது. இந்த ஸுக₂ம் முதலானவை அறிவைக்காட்டிலும் வேறுபட்டவை என்று ஸாதி₄க்க ப்ரமாணம் ஒன்றுமில்லையாகையால், இவை அறிவைக்காட்டிலும் வேறுபட்டவையாக மாட்டா. 'நினைக்கிறேன்' என்னும் வியவஹாரத்தை அறிவின் அவஸ்தா₂விஶேஷமான ஸ்மிருதியைக் கொண்டே நிர்வஹிப்பதுபோல, 'விரும்புகிறேன்' 'வெறுக்கிறேன்' என்னும் வியவஹாரங்களையும் அறிவின் நிலைகளாகவே நிர்வஹிப்பதையே அறிவாளிகள் அங்கீ₃கரித்துள்ளனர் 169.

302*–*303. *"காமஸ் ஸங்கல்போ விசிகித்ஸா ஶ்ரத்₃தா₄ அஶ்ரத்₃தா₄ த்₄ருதி: அத்₄ருதி: ஹ்ரீர் தீ₄ர் பீ₄ரித்யேதத் ஸர்வம் மந ஏவ"* [விருப்பம், ஸங்கற்பம், விசாரிக்கவிருப்பம், ஶ்ரத்₃தை₄, அஶ்ரத்₃தை₄, தைரியம், கோழைத்தனம், வெட்கம், பு₃த்₃தி₄, ப₄யம் என்னும் இவையெல்லாம் மனமே] என்று வேத₃வாக்கியமொன்றிலே அறிவின் நிலைகளான விருப்பம்

ननु *कामस्संकल्पो विचिकित्सा श्रद्धाऽश्रद्धा धृतिरधृतिर्हीर्धीर्भीरित्येतत्सर्वं मन एवेत्युक्तम्; ज्ञानरूपत्वं कथमिति चेन्न; ज्ञानस्य मनस्सहकारित्वनियमात् मन एवेत्युपचारादुक्तमिति न विरोधः ॥ १७० ॥ एवं प्रत्यक्षानुमानागमस्मृतिसंशयनिर्णयविपर्ययभ्रमविवेकव्यवसायमोह-रागद्वेषमदमात्सर्यधैर्यचापल्यदम्भलोभक्रोधदर्पस्तम्भद्रोहाभिनिवेशनिर्वेदा-नन्दादयः; सुमतिर्दुर्मतिः प्रीतिस्तुष्टिः पुष्टिरुन्नतिः शान्तिः कीर्तिः विरक्ती रतिर्मैत्री दया मुमुक्षा लज्जा तितिक्षा विचारणा विजिगीषा मृदुता

---

३०३. सहकारित्वनियमान्मनसश्च धियं प्रति।
असंख्येयाः स्मृतिमुखाः गुणा ये जीववृत्तयः ॥

३०४. ते धर्मभूतज्ञानस्यावस्थाभेदाः प्रकीर्तिताः।
ज्ञानशक्तिबलैश्वर्यवीर्यतेजोमुखा गुणाः ॥

---

முதலியவை மனமே என்று சொல்லியிருப்பதற்குக் கருத்து என்ன? எனில்: அறிவுக்கும் அறிவின் நிலைகளான விருப்பம் முதலானவற்றுக்கும் மனம் எப்போதும் துணையாயிருப்பதால், இவை மனமாகவே ஔபசாரிகமாகச் சொல்லப்பட்டிருக்கின்றனவேயொழிய வேறில்லை. 170.

303*–*304. ப்ரத்யக்ஷ அறிவு, அநுமிதியறிவு, ஆக₃மஜ்ஞானம், ஸ்மிருதி(நினைவு), ஸம்ஶயம்(ஐயம்). நிர்ணயம் (முடிவு). விபர்யயம், ப்₄ரமம், விவேகம், வ்யவஸாயம் (துணிவு), மோஹம், ராக₃ம் (ஆசை), த்₃வேஷம் (வெறுப்பு), மத₃ம், மாத்ஸர்யம், தை₄ர்யம், சாபல்யம், த₃ம்ப₄ம், லோப₄ம், க்ரோத₄ம், த₃ர்ப்பம், ஸ்தம்பி₄த்தல். த்₃ரோஹம், அபி₄மானம், நிர்வேத₃ம் (மனவருத்தம்). ஆனந்த₃ம், நல்லறிவு, தீயறிவு, அன்பு திருப்தி, அதிருப்தி, மனவெழுச்சி, சாந்தி, கீர்த்தி, வைராக்₃யம், இன்பம், நட்பு, கருணை, மோக்ஷேச்சை₂, வெட்கம், பொறை, விசாரணை, ஜயிப்பதிலிச்சை₂, மென்மை, பொறுமை, செயல்புரிய இச்சை₂, வெறுப்பு, ப₄ாவனை, மோசம், பொறுமை, கொல்லவிருப்பம்,

श्रमा चिकीर्षा जुगुप्सा भावना कुहना असूया जिघांसा तृष्णा दुराशा वासना दुर्वासना चर्चा भक्तिः प्रपत्तिरित्येवमादयश्च जीवात्मगुणा अनन्ताः धर्मभूतज्ञानावस्थाविशेषा एव ॥ १७१ ॥

एवं, ज्ञानशक्तिबलैश्वर्यवीर्यतेजस्सौशील्यवात्सल्यमार्दवार्जवसौहार्द-साम्यकारुण्यमाधुर्यगाम्भीर्यौदार्यचातुर्यस्थैर्यधैर्यशौर्यपराक्रमादयो भगव –

---

३०५. असंख्येया हरेर्नित्या गद्यादिषु सुकीर्तिताः ।
तत्तद्गुणस्वरूपं च विवृतं देशिकोत्तमैः ॥

३०६. गद्यभाष्यादिषु स्पष्टं सरण्याऽद्भुतरूपया ।
भक्त्या तथा प्रपत्त्या वा धीविशेषस्वरूपया ॥

---

பேராசை, து₃ராசை, வாஸனை, து₃ர்வாஸனை, சர்ச்சை, ஶ்ரத்₃தை₄, ப₄க்தி, ப்ரபத்தி முதலான எண்ணமுடியாத ஜீவாத்ம கு₃ணங்களும், ஜீவனின் த₄ர்மபூ₄தஜ்ஞானத்தின் வெவ்வேறு நிலைகளாகவே சொல்லப்படுகின்றன. 171.

304*–*306. இப்மாதிரியாகவே, ஜ்ஞானம், ஶக்தி, ப₃லம், ஐஶ்வர்யம், வீர்யம், தேஜஸ், ஸௌஶீல்யம், வாத்ஸல்யம், மார்த்த₃வம், ஆர்ஜவம், ஸௌஹார்த்த₃ம், ஸாம்யம், காருண்யம், மாது₄ர்யம், கா₃ம்பீ₄ர்யம், ஔத₃ார்யம், சாதுர்யம், ஸ்தை₂ர்யம், தை₄ர்யம், ஶௌர்யம், பராக்ரமம் முதலான பரமபுருஷனின் கணக்கற்ற கல்யாண கு₃ணங்களும் ஸர்வேஶ்வரனுடைய த₄ர்மபூ₄தஜ்ஞானத்தின் வெவ்வேறுபட்ட நிலைகளேயாகும். பரமபுருஷனுக்கு என்றுமிருக்கும் இக்கு₃ணங்கள் ஸ்ரீப₄ாஷ்ய காரர் முதலான ஆசார்யர்களாலே க₃த்₃யம் முதலான பிரப₃ந்த₄ங் களிலே நன்கு கீர்த்திக்கப்பெற்றன. க₃த்₃யப₄ாஷ்யம் முதலான நூல்களிலே பெரியவாச்சான்பிள்ளை, ஶ்ருதப்ரகாஶிகாசார்யர், வேதா₃ந்ததே₃ஶிகர் முதலான ஆசார்யோத்தமர்களாலே அந்தந்த கு₃ணங்களின் ஸ்வரூபங்கள் மிகத்தெளிவாக அற்புதமான ரீதி யிலே விளக்கப்பெற்றன. சுருக்கமாகச் சிலவற்றை இங்கு விவ

तेऽनन्तकल्याणगुणाः ज्ञानशक्त्योर्विततिभूताः। तत्र ज्ञानं नाम सर्वसाक्षात्काररूपम्। शक्तिः अघटितघटनासामर्थ्यम्। बलं धारण-सामर्थ्यम्। ऐश्वर्यं नियमनसामर्थ्यम्। वीर्यमविकारित्वम्। तेजः पराभिभवनसामर्थ्यम्। महतो मन्दैस्सह नीरन्ध्रेण संश्लेषस्सौशील्यम्। वात्सल्यं दोषेऽपि गुणत्वबुद्धिः, दोषादर्शित्वं वा। आश्रितविरहासहत्वं मार्दवम्। मनोवाक्कायैरेकरूपत्वमार्जवम्। स्वसत्तानपेक्षतद्रक्षापरत्वं सौहार्दम्। अभिजनवृत्तगुणाद्यनपेक्षया सर्वाश्रयणीयत्वं साम्यम्। स्वार्थ-निरपेक्ष (स्वप्रयोजनमनपेक्ष्य) परदुःखनिराचिकीर्षा कारुण्यम्; परदुःखा-सहिष्णुत्वं (परदुःखदुःखित्वं) वा। क्षीरवदुपायभावेऽपि स्वादुत्वं माधुर्यम्।

---

ரிப்போம். எல்லாவற்றையும் எப்போதும் அறிவது *(ஜ்ஞானம்) அறிவு* என்னும் கு$_3$ணம். *ஶக்தியாவது*—அக$_4$டிதக$_4$டநாஸாமர்த்$_2$யமாம். *அனைத்தையும்* த$_4$ரிக்கும் ஸாமர்த்$_2$யம் *ப$_3$லமாகும்*. அனைத்தையும் நியமிக்கும் வல்லமை *ஐஶ்வர்யமாகும்*. விகாரஹேது இருக்கும்போதும் விகாரமில்லாமலிருக்கை *வீர்யமாகும்*. பிறரை வெற்றிகொள்ளும் வல்லமை *தேஜஸ்* எனப்படும். இவ்வாறும் ஷட்$_3$கு$_3$ணங்கள் எனப்படும். பெரியவன் தாழ்ந்தாரோடு புரையறக் கலக்கை *ஸௌஶீல்யம்*. *வாத்ஸல்யமாவது* — தோ$_3$ஷத்தையும் கு$_3$ணமாய் நினைக்கை என்று சிலராலும், தோ$_3$ஷத்தைக் காணாமலிருக்கை என்று சிலராலும் சொல்லப்படுகிறது. அடியாரைப் பிரியப் பொறாமலிருக்கை *மார்த்$_3$வம் (மென்மை)* எனப்படுகிறது. மனோவாக்காயங்களால் ஒருபடிப்பட்டிருக்கை *ஆர்ஜவம்*. தன் ஸத்தையையும் நோக்காமல் அடியாரைக்காப்பதில் ஈடுபடுகை *ஸௌஹார்த்$_3$ம்*. குலம், ஒழுக்கம், கு$_3$ணம் முதலியவற்றில் வாசியில்லாமல் அனைவராலும் ஆஶ்ரயிக்கத்தக்கவனாயிருக்கை *ஸாம்யம்*. 'தனக்கொரு ப$_2$லனை எதிர்பாராமல் பிறர் துன்பம் போக்க விரும்புகை' என்று சிலரும் பிறர் துன்பம் பொறாமை அல்லது பிறர் துன்பங்கண்டு துன்புறுகை என்று சிலரும் *காருண்ய* லக்ஷணம் உரைக்கின்றனர். பித்தத்துக்கு மருந்தாகும் பால் இனியதாகவுமிருப்பதுபோலே, பிறவிநோய்க்கு மருந்தா

कल्याणगुणात्मकः प्रकृतिपुरुषाभ्यां भिन्नस्तद्विशिष्टः परब्रह्म नारायण एव जगत्कारणम् ॥ २११ ॥

---

லீநஸ்ய ய: பர: ஸ மஹேஶ்வர:" என்று ஓங்காரத்திற்குக் காரணமான அகாரத்திற்குப் பொருளாயிருக்கும் விஷ்ணுவே மஹேஶ்வரன் (பெரிய ஈஶ்வரன்) என்று விதி$_4$த்து, அடுத்த அனுவாகத்தில் அவனே எல்லா வித்$_3$யைகளிலும் உபாஸிக்கப்படும் நாராயணன் என்று விரிவாகக்காட்டி அவனே பரப்$_3$ரஹ்மம், பரதத்வம், பரஞ்சோதி, பரமாத்மா, பிரமன் சிவன் இந்திரனுக்கும் அந்தர்யாமி என முழங்குகையால் த$_3$ஹரவித்$_3$யை முதலான எல்லா வித்$_3$யைகளிலும் உபாஸிக்கப்படுபவன் நாராயணனே என்பது எவராலும் அசைக்கமுடியாதது. ஆகையால், எல்லாக் கல்யாணகு$_3$ணங்களையும் உடையவனாய், ப்ரக்ருதிபுருஷர்களைக் காட்டிலும் வேறுபட்டவனாய், ஶரீரமான அவற்றோடு கூடிய பரப்$_3$ரஹ்மமான நாராயணனே உலகிற்குக் காரணம் என்று தேறிற்று. 211.

---

४२४. तद्वत्सर्वशरीरी सः सर्वैः शब्दैः प्रकथ्यते।
स ब्रह्मा स शिवस्सेन्द्र इत्याद्युपनिषस्तु च॥

४२५. सामानाधिकरण्यं तु मुख्यं नारायणेन तत्।
अत एवाचिद्विशिष्टजीवयुक्ते परात्मनि॥

---

இந்திரனும் அவனே" [தைத்திரீய நாராயணவல்லி] "பிரமனும் நாராயணனே; ஶிவனும் நாராயணனே. ஶக்ரனும் (இந்திரனும்) நாராயணனே; தி$_3$க்குகளும் நாராயணனே; விதி$_3$க்குகளும் நாராயணனே; எல்லாம் நாராயணனே" [ஸுபா$_3$லோபனிஷத்] முதலான உபனிஷத்$_3$வாக்கியங்களிலும் நாராயண ஶப்$_3$த$_3$த்தோடு எல்லாச் சேதநாசேதநவாசிஶப்$_3$த$_3$ங்களையும் ஸமாநாதி$_4$கரணமாக -(ஒரே வேற்றுமையில்)- படி$_2$த்திருப்பது. இப்படி ஶரீரஶரீரி பா$_4$வத்தினால் அவன் ஸர்வஶப்$_3$த$_3$வாச்யனாயிருக்கையாலே முக்கியமான பிரயோக$_3$மேயாகும். கௌ$_3$ணமான (ஔபசாரிகமான) பிரயோக$_3$மன்று. ஆகையால், எல்லா ஶப்$_3$த$_3$ங்களும், அசேதனங்களோடுகூடிய சேதன வஸ்துக்களை ஶரீரமாகக்

ननु, अद्वैतश्रुत्या ब्रह्मैकमेव सत्यं निर्गुणं च। तदन्यत् ज्ञातृ-ज्ञेयादिकं तस्मिन्नेव परिकल्पितं सर्वं मिथ्या। ब्रह्म अविद्यया संसरति। * तत्त्वमसीत्याद्यभेदज्ञानं तन्निवर्तकम्। तस्मात् निर्विशेषचिन्मात्रे

---

இவ்விஷயத்தில் அத்₃வைதிகள் பின்வருமாறு ஆக்ஷேபிக்கிறார்கள்:— ஜீவனும் ப்₃ரஹ்மமும் ஒன்று என்று வேத₃வாக்யங்கள் கூறுகையாலே அறிவுருவான ப்₃ரஹ்மம் ஒன்றே மெய்ப்பொருள். அது கு₃ணமற்றதுமாகும். அது தவிர வேறான அறிபவனும், அறியப்படுவதும் அந்த அறிவான ப்₃ரஹ்மத்திடம் ஏறிடப்பெற்றவையாகையாலே பொய்யானவையாகும். ப்₃ரஹ்மம் அவித்₃யை, மாயை எனப்படும் ஒரு (உள்ளதென்றும் இல்லாததென்றும் சொல்லமுடியாத) பொருளின் தொடர்பால் ஸம்ஸாரி ஜீவனாகக் காட்சியளிக்கிறது. "*தத் த்வமஸி*" [ச₂ாந் 6-8-7] [அந்த ப்₃ரஹ்மம் நீயேயாகிறாய்] என்னும் வேதா₃ந்த வாக்யார்த்த₂த்தை அறிவது ஜீவனின் ஸம்ஸாரப₃ந்த₄த்தைப் போக்கும். ஆகையால் ஸஜாதீயவிஜாதீய ஸ்வக₃தபே₄த₃ங்கள் எதுவு

---

४२६. पर्यवस्यन्ति सर्वेपि शब्दाः स्वरसतः स्वयम्।
तस्मादभेदश्रुतयः तत्त्वमस्यादिका अपि॥

---

கொண்ட பரமாத்மாவான நாராயணனை இயற்கையாகவே காட்டி நிற்கின்றன. *

426*-*430. வேத₃வாக்கியங்களை அபே₄த₃ஶ்ருதி, பே₄த₃ஶ்ருதி, க₄டகஶ்ருதி என்று மூன்று வகையாகப் பிரிக்கலாம். "*தத் த்வம் அஸி*" [ச₂ாந்தோ₃க்₃யம்] [நீ ப்₃ரஹ்மமாக ஆகிறாய்] '*ஸர்வம் க₂லு இத₃ம் ப்₃ரஹ்ம*" [ச₂ாந்தோ₃க்₃யம்] [இது எல்லாம் ப்₃ரஹ்மமே] "*ப்₃ரஹ்ம அஹம் அஸ்மி*" [தைத்திரீயம்] [நான் ப்₃ரஹ்மமாயிருக்கிறேன்] முதலான ஶ்ருதிகள் ப்₃ரஹ்மத்தையும் மற்ற பொருள்களையும் ஒன்றாக—ஒரே வேற்றுமையில்—படிக்கின்றன. இவை அபே₄த₃ஶ்ருதியாகும். ஶரீரஶரீரிபா₄வத்தாலுண்டான ஸர்வஶப்₃த₃வாச்யத்வத்தாலேயே இப்படி ஒரே வேற்றுமையில் (ஒன்றாகப்) படிக்கப்படுகின்றன என்பது தெளிவு. "*தத் த்வம் அஸி*" என்னும் வேத₃வாக்கி

ब्रह्मणि वेदान्तानां तात्पर्यमिति मतान्तरस्थैः प्रतिपादनात् कथं नारायणे तात्पर्यं, तस्य समस्तकल्याणगुणात्मकत्वादिकथनं चेति चेत्; उच्यते। कारणत्वप्रतिपादकश्रुतिभिः नारायणस्य कारणत्वे सिद्धे, भेदाभेदश्रुत्योर्घटकश्रुत्या विषयभेदेन विरोधे परिहृते, निर्गुणप्रतिपादक श्रुतीनां हेयगुणनिषेधकत्वात्, ज्ञातृज्ञेयादिकल्पकाविद्याया एवाप्रामाणिकत्वाद्ब्रह्मकार्यस्य सत्यत्वात्, अविद्यया संसारे जीवगतदोषाणां

---

மற்றதாய், அறிவு மாத்திரமாயிருப்பதான ப்3ரஹ்மம் ஒன்றைக் கூறுவதிலேயே வேதா3ந்தங்களுக்குத் தாத்பர்யம் — என்று அத்3வைதிகள் கூறுகிறார்கள். இப்படி அவர்கள் கூறும்போது 'வேதா3ந்தங்கள் நாராயணனையே பரம்பொருளாகக்கூறுகின்றன, அவனுக்கு எல்லாக்கல்யாணகு3ணங்களும் உண்டு' என்று உரைப்பது எப்படி ஒட்டும்? எனில்: இதற்கு பதில் பின்வருமாறு:—(1) ஜக3த்காரணத்தைக்கூறும் பல வேத3வாக்யங்களை ஸாமாந்யவிஶேஷந்யாயங்கொண்டு ஆராயும்போது 210-வது பாராவில் கூறியபடி நாராயணனே ஜக3த்காரணம் என விளங்குகிறது. (2) ஸங்மதகாரிகாவளீ (426*-*430) விவரணத்தில் காட்டியபடி ப்3ரஹ்மத்திற்கும் உலகிற்கும் பே4த3த்தையும், அபே4த3த்தையும் கூறும் வேதா3ந்தவாக்யங்களில் மேலெழத் தோன்றும் முரண்பாட்டை இரண்டுக்கும் ஶரீராத்மதன்மையைக் கூறும் க4டகஶ்ருதிகள் நீக்கிவிடுகின்றன. (3) அடுத்தபடி ஸங்மதகாரிகாவளீ 433-வது ஶ்லோகவிவரணத்தில் காட்டப்போகிறபடி நிர்க்கு3ணஶ்ருதி ப்3ரஹ்மத்திற்குத் தாழ்ந்த கு3ணங்களில்லை என்று சொல்லுவதிலேயே நோக்குடையது. (4) அறிபவன், அறியப்படுவது முதலானவற்றை அவித்3யை நிர்விஶேஷசிந்மாத்ரப்3ரஹ்மத்தில் ஏறிடுகிறது என்று எந்த

---

யத்தில், 'தத்' என்னும் பத3ம் ஜக3த்காரணமான ப்3ரஹ்மத்தைக் குறிக்கிறது. 'த்வம்' என்னும் பத3ம் முன்னிலையிலிருக்கும் ஶ்வேதகேதுவென்னும் சிறுவனைக் குறிப்பதோடல்லாமல், அவனுக்கு அந்தர்யாமியாயிருக்கும் பரமபுருஷனையும் குறிக்கிறது. "தத் த்வம் அஸி" என்றதால் "ஜக3த்காரணமான ப்3ரஹ்மமே உனக்கு அந்தர்யாமியாயிருக்கும் பரம்பொருள்" என்றதாகிறது. ஆகையால் அந்த அபே4த3ஶ்ருதி வாக்கியங்களும் ப்ரத்யக்ஷ விரோத4மும் இதர ஶ்ருதிவிரோத4மு

ब्रह्मण्यपि संभवात्, तन्निवर्तकान्तरस्य वक्तुमशक्यत्वात्। अतोऽद्वैतवादस्यासंभवान्न निर्विशेषचिन्मात्रब्रह्मसिद्धिः। अतो नारायणस्यैव जगत्कारणत्वमोक्षप्रदत्वादिगुणयोगस्संभवतीति सविशेषमेव ब्रह्म। सूक्ष्मचिदचिद्विशिष्टं ब्रह्म कारणम्, स्थूलचिदचिद्विशिष्टं ब्रह्म कार्यमिति कारणादनन्यत्कार्यमिति विशिष्टाद्वैतवेदान்தिनां संप्रदायः॥ २१२॥

---

ப்ரமாணத்திலும் கூறவில்லை. (5) ப்₃ரஹ்மத்தின் கார்யமான உலகம் உண்மையானது என்றே பல வேதா₃ந்தவாக்யங்கள் முழங்குகின்றன. (6) அவித்₃யையினால் ப்₃ரஹ்மமே ஜீவனாகிறது எனில்: ஸம்ஸாரிஜீவனிடமுள்ள தோ₃ஷங்களை ப்₃ரஹ்மத்திடமும் கொள்ளவேண்டிவரும். (7) ப்₃ரஹ்மத்திற்கே மயக்கம் ஏற்பட்டதாகக்கொண்டால் அதைப் போக்கடிக்கும் மற்றொன்றைக் கூறுவது ஒட்டாது. இக்காரணங்களால் அத்₃வைத வாத₃ம் சிறிதும் பொருந்தாதாகையால் நிர்விஶேஷ சிந்மாத்ர ப்₃ரஹ்மமே ஸித்₃தி₄க்காது. ஆக, நாராயணனுக்கே ஜக₃த் காரணத்வம், மோக்ஷப்ரத₃த்வம் முதலான கு₃ணங்கள் மிகப் பொருந்துமாகையால், ப்₃ரஹ்மம் ஸஜாதிய விஜாதிய ஸ்வக₃த பே₄த₃ம் எல்லாவற்றையும் உடையதேயாகும். ஸங்மதகாரிகாவளீ (417-*420) விவரணத்தில் காட்டியபடி ஸூக்ஷ்ம சேதநாசேதநவிஶிஷ்டமான ப்₃ரஹ்மமே காரணமாகவும், ஸ்தூ₂ல சேதநாசேதநவிஶிஷ்ட ப்₃ரஹ்மமே கார்யமாகவும் இருப்பதால் காரணத்தைக் காட்டிலும் வேறுபடாதது கார்யம் என்பது விஶிஷ்டாத்₃வைத வேதா₃ந்திகளின் முடிவாகும். 212.

---

४२७. सामानाधिकरण्येन सङ्गताः स्युः परस्परम्।
द्वासुपर्णेत्यादिभेदश्रुतयो बोधयन्ति च॥

---

மில்லாமல் பொருந்தி நிற்கின்றன. "*த்₃வா ஸுபர்ணா ஸயுஜா ஸகா₂யா ஸமாநம் வ்ருக்ஷம் பரிஷஸ்வஜாதே। தயோரந்ய: பிப்பலம் ஸ்வாது₃ அத்தி, அநஶ்நந் அந்ய: அபி₄சாகஶீதி*" [முண்ட₃கம்] [(அறிவாகிற) நல்ல இறக்கையையுடையவர்களாய், ஸமானகு₃ணத்தையுடையவர்களாய், நண்பர்களான (ஜீவேஶ்வரர்களென்னும்) இரு பறவைகள் (ஶரீரமென்னும்) ஒரே மரத்தில் இருக்கின்றன; அவற்றில் ஒன்று (ஜீவன்) பழுத்த (கர்மப₂லமெனும்) பழத்தைப் புசிக்கிறது: புசிக்காமலிருந்தும் மற்றொன்று (ஈஶ்வரன்) பிரகாசித்து நிற்கிறது.]

४२८. अचिज्जीवेश्वराणां च वैलक्षण्यं स्वरूपतः।
शरीरात्मत्वबोधिन्यः घटकश्रुतयस्तथा॥
४२९. भेदाभेदविरोधं तं शमयन्ति सुसंगताः।
शरीरचिदचिद्युक्तब्रह्माद्वैतप्रबोधनात्॥
४३०. संगता स्यादेकमेवाद्वितीयमिति च श्रुतिः।
श्रुतित्रयविरोधश्चापरिहार्यः कुतश्चते॥

---

"*அந்யதே₃வ தத் விதி₃தாத் அதோ₂ அவிதி₃தாத் அதி₄*" [கேந] [(இந்திரியங்களால்) அறியப்படும் அசேதனத்தில் வேறுபட்டதாய், அறியப்படாத சேதனத்தைக் காட்டிலும் மேற்பட்டதே பரம்பொருள்.]. "*க்ஷராத்மாநாவீம்ʼதே யஸ்து ஸோऽந்ய:*" [ம்ʼவே] [சேதநாசேதனங்களை நியமிப்பவன் அவற்றைக்காட்டிலும் வேறுபட்டவன்.] முதலான பல்லாயிரக்கணக்கான வேத₃வாக்கியங்கள் பரமாத்மாவுக்கும் சித₃சித்துக்களுக்கும் பே₄த₃த்தை போ₃தி₄க்கின்றன. இவை பே₄த₃ம்ʼருதியாகும். மேலெழுந்தவாரியாகப் பார்க்கும்போது பே₄த₃ம்ʼருதிகளுக்கும் அபே₄த₃ம்ʼருதிகட்கும் விரோத₄மிருப்பதாகத்தோன்றும். பரமபுருஷன் மற்ற பொருளுக்கு ஆத்மாவாயிருக்கிறுன் என்பதை அறிவிக்கும் "*யஸ்யாத்மா ம்ʼரீரம்*" [ப்₃ருஹதா₃ரண்யகம்] "*யஸ்ய ப்ருதி₂வீ ம்ʼரீரம்*" [ப்₃ருஹ] "*ஸர்வாத்மா*" [யஜு ஆரண்யகம்] "*அந்தர் ப₃ஹிம்ʼச தத் ஸர்வம் வ்யாப்ய நாராயண: ஸ்தி₂த:*" [தைத்திரீயம்] "*ஸர்வபூ₄தாந்தராத்மா நாராயண:*" [ஸுபா₃ல] என்னும் வாக்கியங்கள் இந்த விரோத₄த்தைச் சமரசப்படுத்துகின்றன. உண்மையில் வெவ்வேறுயிருக்கும் சித₃சிதீ₃ம்ʼவரர்களில், ஈம்ʼவரன் மற்ற இரண்டுக்கும் அந்தர்யாமியாகவும் அதனுலேயே ஸர்வம்ʼப்₃த₃வாச்யனுகவுமிருப்பதால், மற்ற பொருள்களோடு ஸமாநாதி₄கரணமாகப் (ஒரே வேற்றுமையில்) படிக்கப்படுவதில் விரோத₄மில்லை என்று இந்த அந்தர்யாமி ம்ʼருதிகள் காட்டித்தருகின்றன. ஆகையால் இவை க₄டகம்ʼருதிகள் எனப்படுகின்றன. சேதநாசேதனங்களோடு கூடிய ப்₃ரஹ்மம் ஒன்றே என்பதைத் தெரிவிப்பதாகையால், "*ஏகமேவாத்₃விதீயம்*" [சா₂ந்

एवमीश्वराङ्गीकारात् निरीश्वरसांख्यमीमांसकादिमतनिरासः। एत-स्यैवोपादानत्वस्वीकारात् योगपाशुपतनैयायिकमतनिरासः। तैर्निमित्त-

* இவ்வண்ணம் ஈஶ்வரனை ஒப்புக்கொள்ளவேண்டியது அவஶ்யம் என்று தேறுகிறபடியால், ஈஶ்வரனை ஒப்புக்கொள்ளாத நிரீஶ்வரஸாங்க்₂யமதம், பூர்வமீமாம்ஸகமதம் முதலான மதங்கள் தள்ளப்படுகின்றன. ஶ்ருதியையொட்டி இவ்வீஶ்வரனை உபாத₃ாந காரணமாகவும் ஒப்புக்கொள்ளவேண்டி

४३१. सर्वश्रुत्यविरोधस्तु विशिष्टाद्वैत एव हि।
बाल्यादयो यथाऽवस्थाः शरीरे न शरीरिणि॥

தே₃ாக்₃யம்] [ப்₃ரஹ்மம் ஒன்றே; இரண்டாவதில்லை] என்னும் அபே₄த₃ஶ்ருதியும், பே₄த₃ஶ்ருதிகளோடு விரோத₄மில்லாமல் பொருந்தி நிற்கிறது. வேத₃வாக்கியங்களனைத்துக்கும் விரோத₄மில்லாத வழி இதுவேயாகும். *

430*-*431. வேத₃த்தை ப்ரமாணமாக ஒப்புக்கொண்ட போதிலும், "*யாஶ்ச காஶ்ச குத்₃ருஷ்டய:*" [மநு 12-95] என்று மநு சொன்ன ரீதியிலே வேத₃த்துக்கு அவப்பொருள் சொல்லும் குத்₃ருஷ்டிமதங்கள் பல இருக்கின்றன. அந்த மதங்களில் இந்த மூன்று வகையான வேத₃வாக்கியங்களுக்கும் மேலெழுத்தோன்றும் விரோத₄த்தைப் பரிஹரிக்க முடியாது. உத₃ாஹரணமாக—அத்₃வைதிகளுக்கு பே₄த₃ஶ்ருதிகள் விரோதி₄க்கிறபடியால் அவற்றைப் பொய்யானவையென்று தள்ளுகிறார்கள்; த்₃வைதிகளுக்கு அபே₄த₃ஶ்ருதிகள் விரோதி₄க்கிற படியால் அவற்றை ஔபசாரிகமானவை என்கிறார்கள்: இவ்விருவரும் க₄டகஶ்ருதிகளின் முக்கியத்துவத்தையும் உணருவதில்லை. இந்த எல்லா ஶ்ருதிவாக்யங்களும் பரஸ்பர விரோத₄மில்லாமலும், முக்கியமாகவும் நிர்வஹிக்கப்படுவது விஶிஷ்டாத்₃வைத மதம் ஒன்றிலேயே ஆகும். இம்மதமே ஸம்மதம், வைதி₃கமதம் எனத்தக்கது ஆகும். *

431*-432. இனி, விஶிஷ்டாத்₃வைத மதத்தில் பிறர் சொல்லும் தோ₃ஷங்களைப் பரிஹரிக்கிறது. இப்படி எல்லா

कारणमात्रेश्वराङ्गीकारात्। ईश्वरस्य कार्ये प्रत्युपादानत्वनिमित्तत्ववत्

யிருக்கையால், 'ஈஶ்வரன் நிமித்தகாரணமேயொழிய உபாத₃ாந காரணமாகமாட்டான்' என்று கூறும் யோக₃மதம், பாஶுபத மதம், நையாயிகமதம் ஆகிய மதங்கள் தள்ளப்பட்டன. காரணமான ஈஶ்வரன் ஒருவனே கார்யமான உலகைக் குறித்து நிமித்தகாரணமாகவும், உபாத₃ாநகாரணமாகவுமிருப்

४३२. तथा शरीरचिदचिद्गता दोषा न चेश्वरे।
इष्टा शरीरद्वारेण विकारास्पदतेशितुः॥

தோ₃ஷங்களுக்கும் இருப்பிடமான சேதநாசேதநங்கள் ஸர்வேஶ்வரனுக்கு ஶரீரமானால், அவற்றின் தோ₃ஷங்கள் அவனிடமும் உளவாகுமே எனில்: உளவாகா. ஶரீரத்திலுள்ள இளமை, முதுமை முதலான நிலைகள் எப்படி ஶரீரியான ஜீவனிடமுள்ளவையல்லவோ, அப்படியே ஶரீரமான சித₃சித்துக்களிடமுள்ள தோ₃ஷங்கள் ஈஶ்வரனிடமுள்ளவையாகமாட்டா. ஶரீரதோ₃ஷங்கள் ஶரீரியான ஜீவனிடமில்லாதுபோனாலும், அவனிடத்தில் அஜ்ஞாநம் முதலானவற்றை விளைக்கின்றனவே; அதுபோல் ஈஶ்வரனிடமும் அஜ்ஞாநாதி₃களை உண்டாக்காவோ ? எனில்: கர்மம் காரணமாக ஏற்பட்ட ஶரீரமாகையாலே ஜீவஶரீரம் அவனை ஆட்டிவைக்கிறது. சேதநாசேதநங்கள் ஈஶ்வரனுக்குக் கர்மத்தால் ஶரீரமாயில்லை. ஈஶ்வரனுடைய நித்யேச்சை₂யால் ஶரீரமாயிருக்கின்றன. கர்மமென்பதும் அவனுடைய ப்ரீதிகோபங்களேயாகையால் அவன் அதற்கு வஶப்பட்டவனல்லன். ஆகையால் ஶரீரமான சித₃சித்துக்களில் உள்ள தோ₃ஷங்கள் ஶரீரியான ஈஶ்வரனிடம் ஒரு வேறுபாட்டையும் விளைக்கமாட்டா. 'ஈஶ்வரனே ஜக₃த்₃ரூபமாக விகாரமடைகிறானென்று சொன்னால் ஈஶ்வரன் நிர்விகாரன் என்று சொல்லும் வேத₃வாக்கியங்கள் விரோதி₄க்குமே' என்றால்; விரோதி₄க்காது. ஈஶ்வரனுடைய தி₃வ்யாத்மஸ்வரூபம் விகாரம் சிறிதுமற்றது. அவனுடைய ஶரீரமே ஸூக்ஷ்மநிலையிலிருந்து, ஸ்தூ₂ல நிலையுடையதாகி ஜக₃த்₃ரூபமாகப் பரிணமிக்கிறது. ப்₃ரஹ்மம் தன் ஶரீரத்தின்மூலமே ஜக₃த்₃ரூபமாகப் பரிணமிப்பதால் ப்₃ரஹ்மமே உலகமாகிறது என்று

कर्तृत्वप्रेरकत्वनियन्तृत्वप्र(शासि)काशयि — तृत्वानुमन्तृत्वसहकारित्वो-दासीनत्वादिकमप्युपपद्यते। बाल्ययौवनावस्थादयो दोषा यथा शरीर-गताः न तु शरीरिणि जीवे, एवं चिदचिच्छरीरिणः परमात्मनोऽपीति

---

பது பொருந்துவதுபோலே, அவனுக்கே கர்த்ருத்வம், காரயித்ருத்வம், நியந்த்ருத்வம், ப்ரஶாஸித்ருத்வம் (ப்ரகாஶயித்ருத்வம்) அநுமந்த்ருத்வம், ஸஹகாரித்வம், உதா₃ஸீநத்வம் முதலான தன்மைகளும் விஷயவிப₄ாக₃த்தாலே பொருந்தும். [இவ்விஷயம் 434-*435 காரிகாவளீ விவரணத்தில் விளக்கப்பட்டுள்ளது.] இளமை, யௌவநம், முதுமை முதலான நிலைகள் ஶரீரத்துக்கேயாய், ஜீவனைத் தொடுவதில்லை என்று காண்பதுபோலே,

---

४३३. निर्गुणश्रुतयोप्येवं हेयराहित्यमीशितुः।
बोधयन्ति यतो भद्रगुणवत्तां वदन्ति ताः॥

---

கூறும் பரிணமஶ்ருதிகளுக்கும் ப்₃ரஹ்மஸ்வரூபம் நிர்விகாரமெனக்கூறும் நிர்விகாரஶ்ருதிகளுக்கும் விஶிஷ்டாத்₃வைத மதத்தில்தான் விரோத₄மில்லை. 'ப்₃ரஹ்மத்துக்கு ஸ்வரூபத்தில் விகாரமில்லாவிடினும் ஸ்வப₄ாவத்தில் விகாரமுள்ளதாக ஒப்புக்கொள்ளுகிறீர்களே. இது தாழ்வாகாதா?' என்றால், சாஸ்திரங்களில் ப்₃ரஹ்மம் ஜக₃த்₃ரூபமாகப் பரிணமிப்பதாகப் பலவிடங்களில் உத்₃கோ₄ஷிக்கப்பட்டிருக்கிறது. இது—ப்₃ரஹ்மத்தின் கல்யாண கு₃ணமான ஜ்ஞாநாதி₃களிலும், ஶரீரமான சேதநாசேதநங்களிலும் விகாரத்தை (மாறுதலை) ஒப்புக்கொண்டாலொழிய ஒட்டாது. இவ்விகாரம் பரமபுருஷனுக்குப் பெருமையளிப்பதேயொழிய சிறுமைதருவதல்ல; இப்படி அசேதனத்துக்குப்போலே ஸ்வரூபத்தில் விகாரமில்லாமலிருப்பதாலும், ஸ்வப₄ாவத்தில் சேதநர்களுக்குப்போலே தாழ்வைத்தரும் விகாரமில்லாமலிருப்பதாலும் இவனை 'நிர்விகாரன்' என்று வேத₃ங்கள் ஓதின. ஆகையால் நிர்விகார ஶ்ருதிவிரோத₄மில்லை.*

433. இனி, மற்றோராக்ஷேபம்:— "நிர்க்கு₃ணம்" என்று பல வேத₃வாக்கியங்கள் ப்₃ரஹ்மத்தை கு₃ணமற்றதாக கோ₄ஷிக்கின்றன. அப்படியிருக்கும்போது பரப்₃ரஹ்மம் கல்யாண கு₃ணங்களுடையது என்பது எப்படிப் பொருந்தும்? எனில்:

न निर्विकारश्रुतिविरोधः। नियमेन तदाधेयत्व—विधेयत्व —शेषत्वादेः

சேதநாசேதனங்களை ஶரீரமாகக் கொண்ட பரமனையும் ஶரீரமான சேதநாசேதனங்களிலுள்ள தாழ்ந்த விகாரங்கள் தொடுவதில்லையாகையால். 'தாழ்ந்த விகாரம் எதுவுமில்லாதவன்' என்று வேத₃ம் ஓதுவதில் முரணில்லை. எப்போதும்

"*யஸ் ஸர்வஜ்ஞ: ஸர்வவித்*' [எவன் எல்லாப் பொருள்களின் ஸ்வரூபஸ்வபா₄வங்களை அறிவானோ] '*கு₃ணேஶ:*" [கு₃ணங்களுக்கு ஈஶனாயிருப்பவன்] '*ஸத்யகாம: ஸத்யஸங்கல்ப:*" [ஸத்யமான நற்குணங்களையும், ஸத்யமான ஸங்கல்பத்தையும் உடையவன்.]"*பராஸ்ய ஶக்திர்விவிதை₄வ ஶ்ரூயதே ஸ்வாபா₄விகீ ஜ்ஞாந ப₃லக்ரியா ச*" [இவனுடைய ஶக்தியானது பலபடிப்பட்டதாகக் கூறப்படுகிறது; இயற்கையான அறிவு, ப₃லம். செயல் ஆகியவையும் (இவனுக்குள்ளதாக) உத்₃கோ₄ஷிக்கப்படுகிறது.] முதலான நூற்றுக்கணக்கான வேத₃வாக்கியங்களும், "*ஸமஸ்த கல்யாணகு₃ணாத்மகோ஽ஸௌ*" [வி-பு 6-5-84] [எல்லாக் கல்யாண கு₃ணங்களுமுடையவனிவன்.]'*கு₃ணவாந்*''"*வீர்யவாந்*""*த₄ர்மஜ்ஞ:*'' "*க்ருதஜ்ஞ:*" "*ஸத்யவாக்ய:*" "*த்₃ருட₄வ்ரத:*" "*ஶரணாக₃தவத்ஸல:*'' "*தீ₃நாநுகம்பீ*' "*க்ஷமயா ப்ருதி₂வீஸம:*" "*கு₃ணாகரமாகர:*" [ராமாயணம்] முதலான ஆயிரக்கணக்கான இதிஹாஸ புராணவாக்கியங்களும் பரம்பொருளுக்குக் கணக்கற்ற கல்யாண கு₃ணங்களுள்ளனவாக முறையிடுகின்றன. "நிர்க்கு₃ண" ஶ்ருதிகளில் கு₃ணஶப்₃த₃ம் ப்ரக்ருதியினுடையதான ஸத்வரஜஸ்தமோ கு₃ணங்களையும், அதனாலேற்படும் மற்ற தாழ்ந்த கு₃ணங்களையும் சொல்லுகின்றனவென்பதை, எத்தனையோ சாஸ்திரவசனங்கள் காட்டித்தருகின்றன. "*அபஹதபாப்மா விஜரோ விம்ருத்யு:...ஸத்யகாம: ஸத்யஸங்கல்ப:*" என்று வேத₃த்திலும் "*ஸத்வாத₃யோ ந ஸந்தீஶே யத்ர ஹி ப்ராக்ருதா கு₃ணா:*" [வி-பு 1-9-44] [ஸத்வம் முதலான ப்ராக்ருத கு₃ணங்கள் எந்த ஈஶனிடம் இல்லையோ] என்று விஷ்ணு புராணத்திலும். "*ஸத்வம் ரஜஸ் தம இதி கு₃ணா ஜீவஸ்ய நைவ மே*" [ஸத்வரஜஸ்தமோகு₃ணங்கள் ஜீவனுக்கேயொழிய எனக்கில்லை] "*யாந்தி மாமேவ நிர்க்கு₃ணா:*'' [(ஸத்வரஜஸ்தமோ) கு₃ணமற்றவர் என்னையடைகின்றனர்.] "*மங்கிஷ்ட₂ம் நிர்க்*

शरीरलक्षणस्य जगति विद्यमानत्वात् जगच्छरीर ईश्वरः, तद्गतदोषै-रसंसृष्टश्च ॥ २१३ ॥

---

ஈஶ்வரனால் தாங்கப்படுவதாகவும், நியமிக்கப்படுவதாகவும், அவனுக்கு ஶேஷமாகவும் உலகம் இருக்கையாலும், ஶரீரத்திற்கு இதுவே லக்ஷணமாகையாலும், ஈஶ்வரன் உலகத்தை ஶரீரமாகக்கொண்டவன் என்றும், நிர்விகாரனாகையாலே உலகிலுள்ள விகாரங்கள் அவனைத் தொடமாட்டா என்றும் தேறுகிறது. 213.

---

४३४. यथा जगत्प्रतीशस्योपादानत्वादिकं तथा।
कर्तृत्वं प्रेरकत्वं च नियन्तृत्वानुमन्तृते॥

---

கு₃ணம்'' [என் விஷயமான அறிவு நிர்க்கு₃ணஜ்ஞானம்] ''மந்நிகேதம் து நிர்க்கு₃ணம்'' [என் ஆலயம் நிர்க்கு₃ணஸ்தா₂னம்] ''நிர்க்கு₃ணோ மத₃பாஶ்ரய:'' [என்னை ஆஶ்ரயித்திருப்பவன் நிர்க்கு₃ணபுருஷனாவான்] ''மத்ஸேவாயாம் து நிர்க்கு₃ணா'' [எனக்குக் கைங்கர்யம் செய்வதே நிர்க்கு₃ண ஶ்ரத்₃தை₄] ''நிர்க்கு₃ணம் மத₃பாஶ்ரயம்'' [என்னை ஆஶ்ரயித்திருக்கும் ஸுக₂ம் நிர்க்கு₃ணஸுக₂ம்] [பா₄க₃வதம் 11-25] என்று பா₄க₃வதத்தில் பலவிடங்களிலும், ஸத்வரஜஸ்தமோகு₃ணங்களும் தத்கார்யமான ஹேயகு₃ணங்களுமில்லாமையாலேயே பரம்பொருள் நிர்க்கு₃ணமெனப்படுகிறது என்று மிகத்தெளிவாகக் காட்டப்பட்டது. ஆகையால் கல்யாணகு₃ணங்கள் உண்டென்று ஸகு₃ணஶ்ருதிகளும், முக்குணங்களும் அதனாலுண்டாகும் ஹேய (தாழ்ந்த)கு₃ணங்களும் இல்லையென்று நிர்க்கு₃ணஶ்ருதிகளும் சொல்லுவதாகக் கொள்ளுவதே எல்லா ஶ்ருதிகளுக்கும் பொருந்திய வழி. ஆகையால் விஶிஷ்டாத்₃வைத மதம் ஒன்றே எல்லா வேத₃வாக்கியங்களுக்கும் பொருந்தியது என்பது வஜ்ரலேபாயிதம் (வயிரவுருக்கு) ஆயிற்று. *

434-*435. உலகத்திற்கு ஈஶ்வரன் உபாதா₃ன நிமித்த ஸஹகாரி ரூபமான மூன்றுவித₄மான காரணமாகவுமாகிறான் என்று முன்பே சொன்னோம். அதுபோலவே, அவன் உலகைக் குறித்து கர்த்தா (செய்பவன்) ஆகவும், செய்விப்பவனாகவும்,

स चेश्वरो विभुस्वरूपश्च। विभुत्वं नाम व्यापकत्वम्। तच्च-
ईश्वरस्य त्रिधा, स्वरूपतो धर्मभूतज्ञानतो विग्रहतश्च ॥ २१४ ॥ स चानन्त

४३५. उदासीनत्वमित्यादिधर्मास्सन्ति स्वभावतः।
स्वरूपतो धर्मभूतज्ञानतो विग्रहादपि॥

४३६. विभुत्वमिष्टमीशस्य सर्वव्यापित्वरूपकम्।
त्रिविधो यः परिच्छेदः देशतः कालतस्तथा॥

நியமிப்பவனாகவும் இருக்கிறான். *"ஸ ஹி கர்த்தா"* [அவனே யன்றோ ஸ்ருஷ்டிப்பவன்] *"ஏஷ ஏவ...காரயதி"* [இவனே கர்மங்களைச் செய்விக்கிறான்] *"ஈஶதே தே₃வ ஏக:"* *"அந்த: ப்ரவிஷ்ட: ஶாஸ்தா ஜநாநாம் ஸர்வாத்மா"* [ஸர்வாந்தர்யாமியான நாராயணன் ஒருவனே ஜனங்களை உள்நுழைந்து நியமிக்கிறான்.] முதலான வேத₃வாக்கியங்கள் இதைச்சொல்லுகின்றன. ஜீவன் புண்ணிய பாபகர்மங்களைச் செய்யும்போது சிலசமயம் செய்விக்கிறான்;சிலசமயம் அதை அனுமதித்திருக்கிறான்;சிலசமயம் அதை ஏவாமலும், தடுக்காமலும் ஸாக்ஷியாய் உத₃ாஸீனனாயிருக்கிறான். அதனால் *"காரயிதா"* என்றும் *'அநுமந்தா'* என்றும், *"உத₃ாஸீநவத₃ாஸீந:"* என்றும், *"ஸர்வேஷாம் ஸாக்ஷிபூ₄த:"* என்றும் சொல்லப்படுகிறான். இவையெல்லாம் காலபே₄த₃த்தாலும், அதி₄காரிபே₄த₃த்தாலும் ஈஶ்வரனிடம் பொருந்தியிருக்கின்றன. இவையெல்லாம் பரம்பொருளுக்கு இயற்கையாயிருக்கும் தன்மைகள். செயற்கையானவையல்ல. *

435*-*436. இந்த ஈஶ்வரன் மூன்றுவகையில் ஸர்வ வ்யாபியாய் (எங்கும் பரந்தவனாய்) இருக்கிறான். தன் தி₃வ்யாத்ம ஸ்வரூபத்தால் எங்கும் வியாபித்திருப்பது ஒருவகை. *"யச்ச கிஞ்சித் ஜக₃த்யஸ்மிந் த்₃ருஶ்யதே ஶ்ரூயதேऽபி வா। அந்தர் ப₃ஹிஶ்ச தத் ஸர்வம் வ்யாப்ய நாராயண: ஸ்தி₂த:"*[தைத்திரீய-நாராயணவல்லி] [இவ்வுலகில் காண்பனவும் கேட்பனவுமான அனைத்தின் உள்ளும் புறமும் வியாபித்து விளங்குகிறான் நாராயணன்] முதலான வேத₃வாக்கியங்களில் இவ்விஷயம் சொல்லப் பட்டது. இதுதவிர, சூரியனுடைய கிரணம்போலே தனக்கு

इत्युच्यते। अनन्तो नाम त्रिविधपरिच्छेदरहितः। त्रिविधपरिच्छेदस्तु, देशतः कालतो वस्तुतश्च॥ २१५॥

---

४३७. वस्तुतस्तत्परिच्छेदरहितोऽनन्तनामकः।
सत्यत्वधीत्वानन्तत्वामलत्वादय ईशितुः॥

---

த₄ர்மமாயிருக்கும் அறிவின் மூலமும் எங்கும் வியாபித்திருக்கிறன். ''*யஸ்ஸர்வஜ்ஞ:*'' முதலான வேத₃வாக்கியங்கள், ஞானத்தினுல் ஈசன் வியாபித்திருப்பதைக் காட்டின. தன்னுடைய அப்ராக்ருத தி₃வ்யமங்க₃ளவிக்₃ரஹத்தாலும் எங்கும் வியாபித்து நிற்கிறன் ஸர்வேஶ்வரன். "ஸஹஸ்ரஶீர்ஷா புருஷ:" முதலான வேத₃ வாக்கியங்களிலும், கீ₃தையில் விஶ்வரூபாத்₄யாயத்திலும் மற்றும் பல சாஸ்திரங்களிலும் இவ்விஷயம் உத்₃கோ₄ஷிக்கப்பட்டது. ஆக இப்படி மூன்றுவித₄த்திலும் ஸர்வவ்யாபியாய் விளங்கு கிறன் பரமபுருஷன். ஆகையால் ''*விபு₄த்வே ஸதி சேதநத்வம்*' [ஸர்வவ்யாபியாய், சேதனனுயிருக்கை] என்பது அவனுக்கு லக்ஷணமாகிறது. 214.

436*-*437. உலகில் மற்ற பொருள்களுக்கு மூன்றுவித₄மான அளவுகளைக் காண்கிறோம். அவையாவன:–தே₃ஶத்தாலும், காலத்தாலும், வஸ்துவாலும் அளவுபட்டிருக்கை. 'இன்ன தே₃ஶத்திலிருக்கிறன்; இன்ன தே₃ஶத்திலில்லை' என்பது தே₃ஶத்தால் அளவுபட்டிருக்கை. 'இன்ன காலத்திலிருக்கிறது; இன்ன காலத்திலில்லை' என்பது காலத்தால் அளவுபட்டிருக்கை. 'இன்ன வஸ்துவாயிருக்கிறது, இன்ன வஸ்துவாயில்லை' என்பது வஸ்துவால் அளவுபட்டிருக்கை. பரமாத்மா எல்லா தே₃ஶங்களிலும் எல்லாக் காலங்களிலும் இருக்கிறுனுகையால் தே₃ஶத்தாலும் காலத்தாலும் பரிச்சே₂த₃ம் (அளவுபட்டிருப்பது) அவனுக்கு இல்லை. ஸர்வஶரீரியாய், அதனுலேயே ஸர்வஶப்₃த₃ வாச்யனுயிருக்கிறபடியால் 'எல்லா வஸ்துக்களும் இவனே' என்று சொல்லமுடிகிறது. அதனுல் இவனுக்கு வஸ்துபரிச்சே₂த₃மும் இல்லை. இப்படி மூன்றுவித₄மான அளவுகளுமில்லாதவன் இவன் ஒருவனேயாகையால் இவனே 'அநந்தன்' [அளவில்லாதவன்] என்னும் பெயரையுடையவனுகிறன். 215.

सत्यत्वज्ञानत्वानन्दत्वामलत्वादय ईश्वरस्य स्वरूपनिरूपकधर्माः। ज्ञानशक्त्यादयस्तन्निरूपितस्वरूपधर्माः। सर्वज्ञत्वसर्वशक्तित्वादयः सृष्ट्युपयुक्तधर्माः। वात्सल्यसौशील्यसौलभ्यादयः आश्रयणोपयुक्तधर्माः"।

---

४२८. निरूपकास्स्वरूपस्य धर्मा आहुर्मनीषिणः।
ज्ञानशक्त्यादयो धर्माः निरूपितविशेषकाः॥

४२९. सर्वज्ञसर्वशक्तित्वमुखाः सृष्टिप्रयोजकाः।
सुशीलतासुलभतावत्सलत्वादयो गुणाः॥

---

437*-*440. ப₄க₃வானுடைய அநந்தகல்யாணகு₃ணங்கள் பல பிரிவுகளாகப் பிரிக்கப்படுகின்றன. விகாரமில்லாமையாகிற *ஸத்யத்வம்*, அறிவாயிருக்கையாகிற *ஜ்ஞாநத்வம்*, மூவகையளவும் இல்லாமலிருக்கையாகிற *அநந்தத்வம்*, தோ₃ஷமில்லாமலிருக்கையாகிற *அமலத்வம்*, ஆநந்த₃மாயிருக்கையாகிற *ஆநந்த₃த்வம்*, திருவின் நாயகனாயிருக்கையாகிற *ஶ்ரிய:பதித்வம்* முதலியவை *ஸ்வரூபநிரூபககு₃ணங்கள்* எனப்படும். "*ஸத்யம் ஜ்ஞாநமநந்தம் ப்₃ரஹ்ம*" "*விஜ்ஞாநமாநந்த₃ம் ப்₃ரஹ்ம*" "*அபஹதபாப்மா*" "*லக்ஷ்மீஶ்ச பத்ந்யௌ*" முதலான லக்ஷணவாக்கியங்களில் சொல்லப்பட்ட கு₃ணங்கள் இவை. க₄டத்துக்கு க₄டத்வம்போலே ப₄க₃வத் ஸ்வரூபத்தை மற்ற பொருள்களைக் காட்டிலும் வேறுபடுத்தி நிருபித்துத் தருமவை இவை. இப்படி நிருபிக்கப்பட்ட ஸ்வரூபத்திலிருப்பவையான (த₄ர்மபூ₄த) ஜ்ஞாநம், ஶக்தி, ஸௌஶீல்யம், வாத்ஸல்யம் முதலான மற்ற எல்லா கு₃ணங்களும் *நிருபித ஸ்வரூப விஶேஷணங்கள்* எனப்படும். எல்லாமறிவதாகிற-*ஸர்வஜ்ஞத்வம்*, எதையும் செய்யும் திறமையாகிற *ஸர்வஶக்தித்வம்*, *எல்லையற்ற கருணை* முதலானவை *உலகைப் படைத்தளித்தழிப்பதற்கு உறுப்பான கு₃ணங்கள்*. பெரியவன் சிறியவரோடு ஒருநீராகக்கலந்து பரிமாறுகையாகிற *ஸௌஶீல்யம்*, அடைய எளியனாயிருக்கையாகிற *ஸௌலப்₄யம்*, குற்றங்காணாமை முதலான நிலைகளை உடையதாகச் சொல்லப்படும் *வாத்ஸல்யம்*, உடைமையை உடைய

कारुण्यादयो रक्षणोपयुक्तधर्माः। एतेषां स्वरूपं बुद्धिपरिच्छेदे निरूपितमिति नेह प्रपञ्च्यते॥ २१६॥

अयमीश्वरः अण्डसृष्ट्यनन्तरं चतुर्मुखदक्षकालादिष्वन्तर्यामितया स्थित्वा सृष्टिं करोति। विष्ण्ववताररूपेण मनुकालाद्यन्तर्यामिरूपेण च स्थित्वा रक्षको भवति। रुद्रकालान्तकादीनामन्तर्यामितया संहारमपि

---

४४०. चेतनाश्रयणैकान्ताः कारुण्यादि च रक्षणे।
चतुर्मुखे च दक्षादिष्वन्तर्यामितया स्थितः॥

४४१. सृष्टिं करोति रक्षां तु विष्ण्वाख्यस्वस्वरूपतः।
रुद्राद्यन्तर्यामितया काले संहारकृत् तथा॥

---

வருயிருக்கையாகிற *ஸ்வாமித்வம்* முதலானவை *சேதனன் பரம் பொருளை அடைவதற்கு உறுப்பான கு₃ணங்கள்* ஆகும். *கருணை,* ஸாமர்த்₂யம் முதலானவை *ரக்ஷிப்பதற்கு உறுப்பான கு₃ணங்கள்.* இவற்றின் லக்ஷணங்கள் த₃ர்மபூ₄தஜ்ஞாந ப்ரகரணத்தில் விவரிக்கப்பட்டனவாகையாலே இங்கு விளக்கப் படவில்லை. 216.

440*-441. ஸ்ருஷ்டி ஸ்தி₂தி ஸம்ஹாரங்களை ஓரளவுக்கு நேரே செய்வதோடல்லாமல், சிலருக்கு அந்தர்யாமியாய் நின்றும் செய்கிறுன் ஸர்வேச்வரன். அண்ட₃த்தையும் பிரமனையும் உண்டுபண்ணுவதாகிற ஸமஷ்டி ஸ்ருஷ்டி வரையில் நேரே செய்து அதற்குப்பின் நான்முகன் த₃க்ஷன் முதலான பிரஜாபதிகள், காலம் முதலியவற்றுக்கு அந்தர்யாமியாயிருந்து வ்யஷ்டி ஸ்ருஷ்டியைச் செய்கிறுன். விஷ்ணு முதலான அவதாரங்களாலே நேரேயும், மநு, காலம் முதலியவற்றுக்கு அந்தர்யாமியாய் நின்றும் உலகத்தை ரக்ஷிக்கிறுன். ருத்₃ரன், யமன், காலம் முதலானவற்றுக்கு அந்தர்யாமியாய் நின்றும், ப்₃ரஹ்மருத்₃ராதி₃களைத் தான் நேரே ஸம்ஹரிப்பதன் மூலமும் ப்ரளயத்தின்போது உலகத்தை ஸம்ஹரிக்கிறுன். உலகிலுள்ள எவரால் செய்யப்படும் எத்தகைய ஸ்ருஷ்டி ஸ்தி₂தி ஸம்ஹா

करोति। अतः सृष्टिस्थितिसंहारकर्ता चेति॥२१७॥ एवंप्रकार ईश्वरः परव्यूहविभवान्तर्याम्यर्चावताररूपेण पञ्चप्रकारः। तत्र परो नाम—त्रिपाद्विभूतौ कुमुदकुमुदाक्षपुण्डरीकवामनशंकुकर्णसर्प(र्व)नेत्रसुमुखसुप्रतिष्ठितादिभिः दिव्यायुधभूषणपरिजनपरिच्छदान्वितैर्दिव्यनगरपालकैः परिरक्षिते श्रीमद्वैकुण्ठाख्ये पुरे चण्डप्रचण्डभद्रसुभद्रजयविजयधातृ-

---

४४२. स परव्यूहविभवहार्दार्चाख्यप्रभेदतः।
पञ्चधाऽवस्थितस्तत्र भगवान् पर आदिमः॥
४४३. त्रिपाद्विभूतौ वैकुण्ठे पुरे द्वारपसंवृते।
दिव्यालये महारत्नमण्टपे ज्वलदासने॥
४४४. पर्यङ्के शेषरूपे श्रीभूमिनीलासमन्वितः।
शुद्धसत्त्वमयश्रीमद्दिव्यमङ्गलमूर्तिमान्॥

---

ரங்களும் அவரவருக்கு அந்தர்யாமியான இவனுல் செய்யப் படுமவையே. ஆகையால் ஸர்வலோகத்திற்கும் ஸ்ருஷ்டி ஸ்தி₂தி ஸம்ஹாரங்களைச் செய்பவன் ஸர்வேஶ்வரனேயென்றதாயிற்று. 217.

442-447. இந்த ப₄க₃வான் *பரம்*, *வ்யூஹம்*, *விப₄வம்*, *அந்தர்யாமி*, *அர்ச்சை* என்னும் ஐந்து வித₄மான நிலைகளை உடையவனுகிருன். அதிலே பரமபத₃த்திலிருக்கும் பரவாஸுதே₃வனுயிருக்கும் நிலை *பரம்* எனப்படுகிறது. "*த்ரிபாத₃ஸ்யாம்ருதம் தி₃வி*" என்று புருஷஸூக்தத்தில் அநந்தமான இவ்வுலகிலும் மும்மடங்கு அநந்தமானதாக ஓதப்படுகையால் த்ரிபாத்₃விபூ₄தி எனப்படும் பரமபத₃த்திலே குமுத₃ன், குமுத₃ாக்ஷன், புண்ட₃ரீகன், வாமனன், ஶங்குகர்ணன், ஸர்வ(ர்ப்ப) நேத்ரன், ஸுமுக₂ன், ஸுப்ரதிஷ்டி₂தன் முதலான நக₃ர பாலகர்களால் ரக்ஷிக்கப்படும் ஸ்ரீவைகுண்ட₂மென்னும் தி₃வ்ய நக₃ரத்திலே, சண்ட₃ன், ப்ரசண்ட₃ன், ப₄த்₃ரன், ஸுப₄த்₃ரன், ஜயன், விஜயன், த₄ாதா, வித₄ாதா முதலான துவார பாலகர்களால் சூழப்பட்ட தி₃வ்யாலயத்திலுள்ள திருமாமணி மண்டபத்தில், த₄ர்மம் முதலான எட்டு கால்களினுல் விளங்கும்

विधातृप्रभृतिभिर्द्वारपालकैरुपेते श्रीमद्दिव्यालये श्रीमहामणिमण्डपे धर्माद्यष्टपादविरचितसिंहासने शेषपर्यङ्के चतुर्भुजदिव्यमङ्गलविग्रहविशिष्टः श्रीभूनीलादिसहितः शङ्खचक्रादिदिव्यायुधोपेतः किरीटादिदिव्यभूषणभूषितः अनन्तगरुडविष्वक्सेनादिभिर्नित्यैस्सामगानपरैरन्यैर्मुक्तैश्चानुभूयमानो ज्ञानशक्त्याद्यनन्तकल्याणगुणगणविशिष्टः परब्रह्मपरवासुदेवादिशब्दवाच्यो नारायणः॥ २१८॥

---

४४५. शङ्खचक्राद्यायुधाभिलसत्पृथुचतुर्भुजः।
दिव्यभूषोज्ज्वलः काञ्चीपीताम्बरलसत्कटिः॥

४४६. सर्वाधारः सर्ववेदप्रतिपाद्यो महाद्युतिः।
सर्वहेयप्रत्यनीककल्याणगुणसागरः॥

४४७. नित्यमुक्ताभिवन्द्यश्च विभूतियुगलाधिपः।
नारायणपरब्रह्मवासुदेवादिनामभाक्॥

---

கோப்புடைய சீரியசிங்காசனத்தில், ஆதி₃ஶேஷனென்கிற படுக்கையிலே, ஸ்ரீபூ₄மிநீளாதே₃விகளோடு கூடியவனாய் ஶுத்₃த₄ஸத்வத்₃ரவ்யத்தாலான தி₃வ்யமங்க₃ள விக்₃ரஹத்தையுடையவனாய், ஶங்க₂ம், சக்ரம், க₃தை₃ முதலான உயர்ந்த ஆயுத₄ங்களினால் விளங்கும் மிகப்பெரிய நான்கு திருக்கைகளையுடையவனாய், கிரீடம், மகுடம், தோள்வளை முதலான பலபல ஆப₄ரணங்களையுடையவனாய், திருவரைநாணாலும், பீதாம்ப₃ரத்தாலும் விளங்கும் திருவரையையுடையவனாய் உப₄யவிபூ₄திக்கும் ஆதா₄ரனாய், எல்லா வேத₃ங்களாலும் சொல்லப்படுபவனாய், நித்யமுக்தர்களின் திருமேனியொளியை இரவிக்கெதிர் மின்மினியாக்கும் பேரொளியையுடையவனாய், தாழ்வுகளனைத்துக்கும் எதிர்த்தட்டாயிருப்பவனாய், மங்க₃ள கு₃ணக்கடலாயிருப்பவனாய், நித்யமுக்தர்களால் வணங்கப்படுமவனாய், உப₄யவிபூ₄திநாயகனாய், நாராயணன், பரப்₃ரஹ்மம், வாஸுதே₃வன், பரஞ்சோதி, பரமாத்மா, பரதத்வம் முதலான ஶப்₃த₃ங்களால் சொல்லப்படுமவனாய் எழுந்தருளியிருக்கும் நிலை பரநிலையாகும். 218.

व्यूहो नाम, पर एवोपासनार्थं जगत्सृष्ट्याद्यर्थं च वासुदेव-सङ्कर्षणप्रद्युम्नानिरुद्धभेदेन चतुर्धाऽवस्थितः। तत्र षाड्गुण्यपरिपूर्णो वासुदेवः। ज्ञानबलाभ्यां संकर्षणः। ऐश्वर्यवीर्याभ्यां प्रद्युम्नः।

---

४४८. व्यूहश्च पर एवासौ वासुदेवादिभेदतः।
उपास्तिसृष्ट्याद्यर्थं च चतुर्धावस्थितस्स्मृतः॥

४४९. आद्यो व्यूहो वासुदेवः ततः संकर्षणः स्मृतः।
प्रद्युम्नश्च तृतीयः स्यादनिरुद्धोऽन्त्य इष्यते॥

४५०. षाड्गुण्यपूर्णः प्रथमः द्वितीयो धीबलान्वितः।
ऐश्वर्यवीर्यवांश्चान्यः शक्तितेजोभृदन्तिमः॥

---

448-450. இனி *வியூஹங்கள்* எனப்படும் இரண்டாவது நிலை விவரிக்கப்படுகிறது. பரவாஸுதே₃வனுகிற பரப்₃ரஹ்மமே வாஸுதே₃வன், ஸங்கர்ஷணன், ப்ரத்₃யும்னன், அநிருத்₃த₄ன் என்னும் நான்கு ருபங்களோடு சேதனர்கள் தன்னை உபாஸிப்பதற்காகவும், உலகைப் படைத்தளித்து அழிப்பதற்காகவும் நிற்கும் நிலை *வியூஹநிலை* எனப்படும். வாஸுதே₃வன் முதல் வியூஹம்; அவரிடமிருந்து இரண்டாவது வியூஹமான ஸங்கர்ஷணனும், அவரிடமிருந்து மூன்ருவது வியூஹமான ப்ரத்₃யும்நனும், அவரிடமிருந்து நாலாவது வியூஹமான அநிருத்₃த₄னும் தோன்றுகிருர்கள். ஜ்ஞாநம், ஶக்தி, ப₃லம், ஐஶ்வர்யம், வீர்யம், தேஜஸ் என்னும் ஆறு கு₃ணங்களும் வியூஹ வாஸுதே₃வனிடம் நிறைந்துநின்று வெளிப்படுகின்றன. அனைவரிடமும் ஆறு கு₃ணங்களும் நிறைந்திருந்த போதிலும் ஜ்ஞாநப₃லங்கள் ஸங்கர்ஷணனிடமும், ஐஶ்வர்ய வீர்யங்கள் ப்ரத்₃யும்நனிடமும், ஶக்தி தேஜஸ்ஸுக்கள் அநிருத்₃த₄னிடமும் விஶேஷமாக வெளிப்படுகின்றன. ஸங்கர்ஷணர் ஜீவதத்வத்தை அதி₄ஷ்டி₂ப்பவர்; ஶாஸ்த்ர ப்ரவர்த்தனத்தையும் ஜக₃த்ஸம்ஹாரத்தையும் செய்பவர். ப்ரத்₃யும்னர் மநஸ்-தத்வத்தை அதி₄ஷ்டி₂ப்பவர்; த₄ர்மோபதே₃ஶத்தையும் ஶுத்₃த₄வர்க்க₃ஸ்ருஷ்டியையும் செய்பவர். அநிருத்₃த₄ர் ரக்ஷணத்தை

शक्तितेजोभ्यामनिरुद्ध इति गुणविभागः ॥ २१९ ॥ एतेषु चतुर्षु प्रत्येकं त्रयस्त्रयोऽवतीर्णाः केशवादयो व्यूहान्तराणि द्वादश द्वादशमासानां द्वादशादित्यानां चाधिदैवतानि । ऊर्ध्वपुण्ड्रेषु च तेषामवस्थापनं विधीयते ॥ २२० ॥ तत्र कनकाभः केशवश्चतुश्चक्रधरः । श्यामो नारायणश्चतुश्शङ्खधरः । मणिप्रभाभो माधवश्चतुर्गदः । चन्द्राभो

---

४५१. व्यूहान्तराणि जातानि केशवादीन्यमीषु ते ।
मार्गशीर्षादिमासानामधिपाः केशवादयः ॥

४५२. एतेषामूर्ध्वपुण्ड्रेषु पृथक् स्थानानि सन्त्यतः ।
नामवर्णायुधान्येषामुक्तानि ध्यानसिद्धये ॥

४५३. स्वर्णप्रभश्चतुश्चक्रधरः केशव उच्यते ।
चतुश्शंखधरः श्यामो नारायण इतीर्यते ॥

---

யும், தத்வஜ்ஞான ப்ரத$_{3}$ானத்தையும், க$_{4}$ண்ட$_{3}$ காலஸ்ருஷ்டியையும், மிஶ்ரஸ்ருஷ்டியையும் செய்பவர். 219.

451-452. இந்த நாலு வ்யூஹங்களில் ஒவ்வொன்றினின்றும் மும்மூன்ருக அவதரித்த கேஶவன், நாராயணன், மாத$_{4}$வன், கோ$_{3}$விந்த$_{3}$ன், விஷ்ணு, மது$_{4}$ஸூத$_{3}$னன், த்ரிவிக்ரமன், வாமனன், ஸ்ரீத$_{4}$ரன். ஹ்ருஷீகேஶன். பத்$_{3}$மநாப$_{4}$ன், தா$_{3}$மோத$_{3}$ரன் என்னும் பனிரண்டு மூர்த்திகளும் *வ்யூஹாந்தரங்கள்* எனப்படும் அவாந்தர வ்யூஹமூர்த்திகளாவர். மார்கழி தொடங்கியுள்ள மாதங்களுக்கு இவர்கள் அதி$_{4}$பதிகள். இவர்களுக்குப் பன்னிரு திருநாமங்களிலும் (ஊர்த்$_{4}$வபுண்ட்$_{3}$ரங்களிலும்) தனித்தனியே ஸ்த$_{2}$ானங்கள் விதி$_{4}$க்கப்பட்டிருக்கின்றன. ஆகையால் அவர்களை (ஊர்த்$_{4}$வபுண்ட்$_{3}$ரத$_{4}$ாரணத்தின்போது) தியானிப்பதற்காக பெயர், வர்ணம், ஆயுத$_{4}$ங்கள் ஆகியவை (பின்வருமாறு) கூறப்படுகின்றன. 220.

453-458. கேஶவன் முதலிய வ்யூஹாந்தரங்களில் *கேஶவன்* தங்க வர்ணமுள்ளவன்; நான்கு சக்ரத்தை த$_{4}$ரித்துக் கொண்டிருக்கிறவன். ***நாராயண***னுக்கு வர்ணம் கறுப்பு.

गोविन्दश्चतुश्शार्ङ्गः। पद्मकिञ्जल्कसंनिभो विष्णुः चतुर्हलः। अब्जाभो मधुसूदनश्चतुर्मुसलः। अग्निवर्णस्त्रिविक्रमश्चतुःखड्गः। बालसूर्याभो वामनश्चतुर्वज्रधरः। पुण्डरीकाभः श्रीधरः चतुःपट्टसधरः। तटित्प्रभो हृषीकेशश्चतुर्मुद्गरधरः। सूर्याभः पद्मनाभः पञ्चायुधधरः। इन्द्रकोपनिभो दामोदरः चतुष्पाशधरः॥ २२१॥

---

४५४. माधवो मणिभङ्गाभः चतुर्गद उदाहृतः।
चतुश्शार्ङ्गधरश्चन्द्रनिभो गोविन्द उच्यते॥

४५५. चतुर्हलधरो विष्णुः पद्मकिञ्जल्कसंनिभः।
चतुर्मुसलधृत् पद्मसदृशो मधुसूदनः॥

४५६. त्रिविक्रमश्चाग्निवर्णश्चतुःखड्गधरः स्मृतः।
वामनो बालसूर्याभः चतुर्वज्रधरो मतः॥

४५७. श्रीधरः पुण्डरीकाभः चतुःपट्टसभृन्मतः।
तटित्प्रभो हृषीकेशः चतुर्मुद्गरभृत्तथा॥

४५८. सूर्याभः पद्मनाभश्च पञ्चायुधधरो मतः।
दामोदरश्चतुष्पाश इन्द्रकोपनिभस्स्मृतः॥

---

ஆயுத₄ம் நாலு ஶங்க₂ம். *மாத₄வனுக்கு* வர்ணம் மணியின் வர்ணம். ஆயுத₄ம் நான்கு க₃தை₃. *கோ₃விந்த₃னுக்குச்* சந்திரனுடைய வர்ணம், ஆயுத₄ம் நான்கு ஶார்ங்க₃ம். *விஷ்ணுவுக்குத்* தாமரைப் பூவின் தாதின் வர்ணம், நான்கு ஹலம் (கலப்பை) ஆயுத₄ம். *மது₄ஸூத₃னனுக்குத்* தாமரைப் பூவின் வர்ணம் நாலு முஸலம் (மர உலக்கை) ஆயுத₄ம். *திரிவிக்கிரமனுக்கு* நெருப்பின் வர்ணம். ஆயுத₄ம் நாலு கத்தி. *வாமனனுக்கு* இளம் சூரியனின் வர்ணம். ஆயுத₄ம் நாலு வஜ்ராயுத₄ங்கள். *ஶ்ரீத₄ரனுக்கு* வெண்தாமரை வர்ணம்; ஆயுத₄ம் நாலு பட்டஸம் (சண்டைக்கோடரி). *ஹ்ருஷீகேஶனுக்கு* மின்னல் வர்ணம், ஆயுத₄ம் நாலு முத்₃க₃ரம் (இரும்புலக்கை). *பத்₃மநாப₄னுக்கு* சூரியனுடைய வர்ணம். ஐந்தாயுத₄ங்களும் த₄ரித்தவன். *தா₃மோத₃ரனுக்கு* இந்த்₃ரகோப வர்ணம். நாலு கயிறுகள் ஆயுத₄ம். 221.

विभवो नाम तत्तत्सजातीयरूपेणाविर्भावः। स प्रसिद्धिप्राधान्येन दशधा। ते च मत्स्यकूर्मादयोऽवतारविशेषाः। तत्र वेदापहारिदैत्यनिरासपूर्वकं ब्रह्मणे वेदप्रमाणप्रदानार्थं अवतीर्णो मत्स्यावतारः। देवानामजरामरणहेतुभूतामृतोत्पादनमन्दराधारत्वेनावतीर्णः कूर्मावतारः।

---

४५९. परव्यूहात्मनोर्वासुदेवयोर्न भिदा क्वचित्।
विभवो नाम मत्स्यादितत्तज्जातीयरूपतः॥

४६०. आविर्भावस्स दशधा प्राधान्याद्गण्यते बुधैः।
वेदहार्यसुरं हत्वा सिन्धुगं ब्रह्मणो हरिः॥

४६१. वेददानार्थमुद्भूतः दिव्या मत्स्याकृतिः प्रभुः।
देवानाममृतं दातुं जरामृतिविनाशकम्॥

४६२. कृतेऽब्धिमथने कूर्मरूप्यासीन्मन्दराद्रिधृत्।
महिषीभूमिमुद्धर्तुं पातालादसुराहृताम्॥

---

*459. ப்ரத்₃யும்னன், ஸங்கர்ஷணன், அநிருத்₃த₄ன் என்னும் மூன்று வியூஹங்களுக்குப் பரவாஸு-தே₃வனைக்காட்டிலும் முற்கூறியபடி கார்யபே₄த₃மும் கு₃ணாவிஷ்காரபே₄த₃மும் உண்டு. வ்யூஹவாஸு-தே₃வனுக்குப் பரனைக்காட்டிலும் அந்த பே₄த₃ங்கள் கிடையாது. *

459*-469. விப₄வம் என்பது ஸர்வேஶ்வரனைவன் மனிதன், திர்யக், ஸ்த₂ாவரம், தே₃வன் என்னும் சாதிகளையுடையவனாகத் தோன்றுவது. அவைகளில் முக்கியங்களாக அறிவாளிகள் பத்து அவதாரங்களைச் சொல்லுகின்றனர். அவைகளாவன:– மத்ஸ்யம், கூர்மம் முதலான அவதாரங்கள். அவைகளில்—1. வேத₃த்தைப் பிரமனிடமிருந்து அபஹரித்துக் கொண்டு கடலிலொளிந்த அஸுரனை நாசம் செய்து பிரமாணமான வேத₃த்தைப் பிரமனுக்குக் கொடுப்பதற்காக அப்ராக்ருதமான மீனாக அவதாரம் செய்தது *மத்ஸ்யாவதாரம்.* 2. தே₃வர்களுக்குக் கிழத்தனமும் மரணமும் இல்லாமைக்குக் காரணமான அமுதத்தை உண்டுபண்ணிக்கொடுக்கப் பாற்கடலைக் கடையும்போது மத்தான மந்த₃ரம் என்கிற மலை அமிழ்ந்துபோகாமல் தாங்குவதற்காக அவதாரம் பண்ணினது *கூர்மாவதாரம்.*

संसारसागरनिमग्नजनोद्धरणकामः (भूम्युद्धरणार्थं) स्वमहिषीमुद्धर्तुमवतीर्णो वराहावतारः। आश्रितरक्षणार्थं महासुरगृहस्तम्भोद्भूतो नरसिंहावतारः। त्रिविक्रमो भूत्वा स्वपादारविन्दोद्भवेन जलेन जगत्पापापहरणेन जगद्रक्षणार्थमवतीर्णो वामनावतारः। दुष्टक्षत्रियनिरसनार्थमवतीर्णः परशुरामावतारः। शरणागतरक्षणधर्मसंस्थापनार्थमवतीर्णो (श्रीरामः) (राम-

---

४६३. वराहाकृतिरुद्भूतः रक्षार्थं जगतां घृणी।
प्रह्लादस्य स्वभक्तस्य रक्षणार्थं महासुरम्॥
४६४. हन्तुं स्तम्भसमुद्भूतः नरसिंहाद्भुताकृतिः।
त्रिलोकरक्षणायैव स्वपदाब्जोत्थगङ्गया॥
४६५. वामनस्सन् क्षणे जातः त्रिलोकाक्रान्तविक्रमः।
आसुरक्षत्रियौघस्य वधार्थं परशुं वहन्॥
४६६. द्विजः परशुरामोऽभूत् शौर्यवीर्यादिसागरः।
शरणागतिशास्त्रार्थस्थापनायैव भूतले॥

---

3. பரமத$_3$யாளுவானவன் ஸம்ஸாரத்தில் மூழ்கிக்கிடந்த ஜனங்களை உயரக்கொண்டு வரவேண்டும் என்கிற ஆசையாலே, ஹிரண்யாக்ஷனால் பாதாளத்தில் வைக்கப்பட்ட தன்னுடைய பத்தினியான பூ$_4$மியைப் பிரளய ஜலத்திலிருந்து மேலே கொண்டு வருவதற்காக எடுத்த அவதாரம் *வராஹாவதாரம்*. 4. ஆஶ்ரிதனை ப்ரஹ்லாத$_3$னை ரக்ஷிப்பதற்காக. இரணியனெனும் மஹாஸுரனைக் கொல்ல விரும்பித் தூணிலிருந்து தோன்றிய ஆஶ்சர்யமான அவதாரம் *நரஸிம்ஹாவதாரம்*. 5. குறளுருவாயிருந்தும் கணநேரத்தில் திரிவிக்கிரமனாய் வளர்ந்து, திருவடிகளால் மூவுலகங்களையும் அளந்து, தன்னுடைய திருவடித் தாமரையினின்றுமுண்டான க$_3$ங்கை$_3$யென்னும் நதி$_3$யால் மூவுலகத்தையும் ரக்ஷிப்பதற்காகச் செய்த அவதாரம் *வாமநாவதாரம்*. 6. ஆஸுரப்ரக்ருதி(ஸ்வப$_4$ாவர்)களான மன்னரை மூவெழுகால் கொல்ல ஶௌர்யம், வீர்யம் முதலான கு$_3$ணங்களுக்குக் கடலான அந்தணனாய்த் தோன்றியது *பரஶுராமாவதாரம்*. 7. உலகில்

चन्द्रः) रामावतारः। प्रलम्बादिनिरसनार्थमवतीर्णो बलभद्रावतारः। मोक्षोपायप्रदानार्थमवतीर्णः (श्रीकृष्णः) कृष्णावतारः। अधर्मिष्ठान्निरस्य पूर्णधर्मप्रवर्तनार्थ(थं कलिनिर्मोचनार्थ)मवतीर्णः कल्क्यवतारः। एवं दशावतारेष्वप्येकैकावतारोऽनन्तप्रकारः ॥ २२२ ॥ पद्मनाभादयोऽपि

---

४६७. सीताजानिः प्रादुरासीत्करुणामूर्तिरद्भुतः।
प्रलम्बघ्नश्च रामोऽभूत्कृष्णलीलाभिवृद्धये ॥

४६८. मोक्षोपायसुधापूरवर्षेण भविनां ज्वरम्।
सम्यक् शमयितुं कृष्णमेघस्समजनि क्षितौ ॥

४६९. अधर्मनिष्ठान् हत्वाऽऽद्ययुगधर्मप्रवर्तकः।
कल्की कलियुगान्ते स्यात् धृतासिर्हयवाहनः ॥

४७०. षट्त्रिंशदवतारास्स्युः पद्मनाभादयोऽपरे।
नरनारायणाश्वास्यहंसादय इतोऽधिकाः ॥

---

ஶரணாகதி சாஸ்திரப் பொருளை நிலைநிறுத்துவதற்காகவே அற்புதமான கருணாமூர்த்தியாய் ஸீதாபதியாய்த் தோன்றியது *ராமாவதாரம்*. 8. ப்ரலம்பன் முதலான அஸுரர்களை நாசம் பண்ணுவதற்காகவும் கண்ணனின் விளையாட்டின் அபிவ்ருத்திக்காகவும் செய்த அவதாரம் *பலராமாவதாரம்*. 9. மோக்ஷோபாயங்களாகிற அமுதப்பெருமழையினாலே ஸம்ஸாரிகளின் தாபத்தைப் போக்குகின்ற கார்மேகமாக பூமியில் அவதரித்தது *கிருஷ்ணவதாரம்*. 10. கலியுகத்தின் கடைசியில் அதர்மத்தையே செய்கிறவர்களை நாசம் செய்து, கிருதயுகத்தில் பூர்ண தர்மத்தைப் பரவச் செய்வதற்காகக் குதிரைமேல் கத்தியேந்தி வரப்போகும் அவதாரம் *கல்கி அவதாரம்*. இந்த தஶாவதாரங்கள் ஒவ்வொரு சதுர்யுகங்களிலும் மாறிமாறி ஏற்படுகின்றவையாகையால் ஒவ்வொன்றும் அளவற்றவையாகும். 222.

470. முற்கூறியவை தவிர பத்மநாபன் முதலான முப்பத்தாறு அவதாரங்களும் விபவாவதாரங்களைச் சேர்ந்தவை

षट्त्रिंशदवताराः सन्ति। पुनर्दधिभक्तहयग्रीवनरनारायणादयोऽपि॥ २२३॥
एवमेते मुख्यगौणपूर्णांशावेशाख्यावान्तरभेदेन बहुप्रकाराः। तेषु

४७१. मुख्यगौणप्रपूर्णांशाऽऽवेशावान्तरभेदतः।
बहुप्रकाराश्चोपास्याश्चतुर्विधफलार्थिभिः॥

கள். இவையும் தவிர, நரன், நாராயணன், ஹயக்₃ரீவன், ஹம்ஸம், த₃தி₄ப₄க்தன், குப்₃ஜாம்ரம் (குட்டை மாமரம்) முதலானவை விப₄வாவதாரங்களிற் சேர்ந்தவை. 223.

471. கணக்கற்றவையான விப₄வாவதாரங்கள் கௌ₃ணம் என்றும், முக்₂யம் என்றும் இரண்டுவித₄மாயிருக்கும். *கௌ₃ணாவதாரமாவது* — ஆவேஶாவதாரம்; அதாவது — ஒரு சேதனனை ஆவேஶித்து நின்று அவதரிக்கை. *முக்₂யாவதாரமாவது*—கௌ₃ணத்திற்போலே சேதனன் ஒருவனை இடையிடாமல் நேரே அவதரிக்கை. முக்₂யாவதாரத்தில் பரருபத்தைக்காட்டிலும் தி₃வ்யமங்க₃ள விக்₃ரஹபே₄த₃முண்டே யொழிய, ஸ்வருபபே₄த₃மோ, கல்யாணகு₃ணபே₄த₃மோ இடையாது; ஆகையால் இதுவே பூர்ணாவதாரம் எனப்படும். கௌ₃ணாவதாரத்தில் சேதனனை இடையிடுகையாலே ஸ்வருபபே₄த₃முண்டு. இனி, கௌ₃ணமெனும் ஆவேஶாவதாரமும் ஸ்வருபாவேஶாவதாரம் என்றும் ஶக்த்யாவேஶாவதாரம் (அம்ஶாவதாரம்) என்றும் இரண்டு வகைப்படும். ஸ்வருபாவேஶமாவது — ஸ்வம்மான (தன்னுடைய) (தி₃வ்யமங்க₃ள) ருபத்தோடே ஆவேஶிக்கை. அதாவது—பரசுராமன் முதலான சேதனருடைய ப்ராக்ருதஶரீரங்களிலே தன்னுடைய அப்ராக்ருத தி₃வ்யமங்க₃ளவிக்₃ரஹத்தோடே ஆவேஶித்து நிற்கை. ஶக்த்யாவேஶாவதாரமாவது—ஸ்ருஷ்டி ஸம்ஹாராதி₃ கார்யகாலங்களில் பிரமன், சிவன் முதலான ஜீவர்களைத் தன் ஶக்தியால் மாத்திரம் அதி₄ஷ்டி₂த்து நிற்கை. மத்ஸ்ய கூர்ம வராஹ ந்ருஸிம்ஹ வாமந ராம கிருஷ்ணாதி₃களான முக்₂யாவதாரங்களெல்லாம் மோக்ஷத்தை விரும்புவார்க்கு உபாஸிக்கத் தக்கவை. பிரமன், சிவன், வியாஸர், அர்ஜுனன், குபே₃ரன் முதலான ஶக்த்யாவேஶாவதாரங்களும், பரசுராமன் முதலான

उपास्यानुपास्यविभागो द्रष्टव्यः ॥ २२४ ॥ अवताराणामिच्छैव हेतुः। न तु कर्म। प्रयोजनं तु दुष्टनिरासपूर्वकसाधुपरित्राणमेव ॥ २२५ ॥

---

४७२. अवतारा इमे सत्या अजहत्स्वस्वभावकाः।
शुद्धसत्त्वमयाश्चैव स्वेच्छामात्रनिदानकाः॥

४७३. धर्मग्लानिविनाशार्थास्साधुरक्षाफलास्तथा।
इमे जन्मरहस्यार्थाः षड्विज्ञेया मुमुक्षुभिः॥

---

ஸ்வரூபாவேஶாவதாரங்களும் அஹங்காரத்தோடு கூடிய ஜீவர்களை அதி₄ஷ்டி₂த்து நிற்கையாலே மோக்ஷத்தை விரும்புவார்க்கு உபாஸிக்கத்தக்கவையன்று. மற்ற ப₂லன்களை விரும்புவார்க்கே உபாஸிக்கத்தக்கவை. 224.

472–473. 1. இவ்வவதாரங்களெல்லாம் உண்மையானவை. 2. பரமபுருஷன் தன் தன்மைகளைக் கைவிடாமலே இப்படி அவதரிக்கிருன். 3. அவதாரத் திருமேனிகளும் ஶுத்₃த₄ஸத்வமயமாயிருப்பவை. 4. இவ்வவதாரங்கள் ப₄க₃வானுடைய இச்சை₂யொன்றையே காரணமாகக் கொண்டவை. 5. த₄ர்மம் வாட்டமடைவதைத் தடுப்பதற்காக ஏற்படுபவை. 6. நல்லோர்களைக் காப்பாற்றுவதையே பயனுகக்கொண்டவை. (நல்லவர்களைக் காப்பதற்காகத் தீயவர்களை அழிப்பதும் அவதாரப்பயனுகிறது.) முமுக்ஷுக்கள் ப₄க₃வானுடைய அவதாரரஹஸ்யங்களான இவ்வாறு விஷயங்களையும் அறியவேண்டும்.

“அஜோऽபி ஸந்நவ்யயாத்மா பூ₄தாநாமீஶ்வரோऽபி ஸந் ।
ப்ரக்ருதிம் ஸ்வாமதி₄ஷ்டா₂ய ஸம்ப₄வாம்யாத்ம மாயயா ॥
யதா₃ யதா₃ ஹி த₄ர்மஸ்ய க்₃லாநிர் ப₄வதி பா₄ரத! ।
அப்₄யுத்தா₂நமத₄ர்மஸ்ய தகூ₃ाऽऽத்மாநம் ஸ்ருஜாம்யஹம் ॥
பரித்ராணாய ஸாதூ₄நாம் விநாஶாய ச து₃ஷ்க்ருதாம் ।
த₄ர்மஸம்ஸ்தா₂பநார்த்தா₂ய ஸம்ப₄வாமி யுகே₃ யுகே₃ ॥
ஜந்ம கர்ம ச மே தி₃வ்யம் ஏவம் யோ வேத்தி தத்த்வத: ।
த்யக்த்வா தே₃ஹம் புநர் ஜந்ம நைதி மாமேதி ஸோऽர்ஜுந ॥”
[கீ₃தை 4–6...9]

अन्तर्यामित्वं नाम स्वर्गनरकाद्यनुभवदशायामपि जीवात्मनः सुहृत्त्वेन योगिभिर्द्रष्टव्यतया हृदयप्रदेशावस्थितरूपम्। जीवेन साकं विद्यमानोऽपि तद्गतदोषैरसंस्पृष्टो वर्तते॥ २२६ ॥

---

४७४. जीवस्य हृदि यद्रूपमङ्गुष्ठप्रमितं शुभम्।
तदेव हार्दरूपं स्यात् योगिदृश्यतया स्थितम्॥

---

[பிறப்பற்றவனுகவும், அழிவற்றவனுகவும், பூ₄தங்களுக்குத் தலைவனுகவுமிருந்துகொண்டு, என் அப்ராக்ருதரூபத்தை த₄ரித்துக்கொண்டு என் ஸங்கல்பத்தாலேயே பிறக்கிறேன். ப₄ரதகுலத்தவனே! த₄ர்மம் எவ்வெப்போது வாட்டமடைகிறதோ, அத₄ர்மம் வெளிக்கிளம்புகிறதோ, அவ்வப்போது என்னை நான் அவதரிப்பிக்கிறேன். நல்லோர்களைக் காப்பதற்கும், தீயவர்களை அழிப்பதற்கும், அறத்தை நிலைநிறுத்தவும் ஒவ்வொரு யுக₃த்திலும் அவதரிக்கிறேன். அப்ராக்ருதமான என் ஜந்மகர்மங்களை எவன் இப்படி உண்மையாக அறிகிருனே, அவன் இந்த தே₃ஹத்தைவிட்டு மறுஜந்மத்தை அடைவதில்லை. என்னை அடைகிருன்.] என்று கீ₃தையிலும் மற்றும் பல்லாயிரக்கணக்கான ஶ்ருதிஸ்மிருதிதிஹாஸ புராண வசனங்களிலும் இவ்விஷயங்கள் உத்₃கோ₄ஷிக்கப்பட்டன. ஆக, இவ்வளவால் விப₄வாவதாரங்கள் நிரூபிக்கப்பட்டன. 225.

474. இதில் அந்தர்யாமி நிலை நிரூபிக்கப்படுகிறது. '*அங்கு₃ஷ்ட₂மாத்ர: புருஷ:*" என்று வேத₃ங்களில் ஓதப்படுகிறபடியே கட்டைவிரல் பருமனுள்ளதாய், பரமமங்க₃ளமானதாய், யோகி₃கள் ப₄க்தியோக₃த்தாலே உபாஸிக்கத்தக்கதாய், ஸ்வர்க்க₃ம் நரகம் முதலானவற்றை ஜீவன் அநுப₄விக்கும்போதும் நண்பனுக அவனுடைய ஹ்ருத₃யத்திலே விளங்கும் தி₃வ்யமங்க₃ள விக்₃ரஹமே அந்தர்யாமிருபம் எனப்படுகிறது. ஜீவனேடு ஒரே சரீரத்தில் வாழ்ந்தபோதிலும், அதிலுள்ள தோ₃ஷங்களால் தொடப்படாதவனுயிருப்பவன் அந்தர்யாமி.226

475-*478. இனி, அர்ச்சாவதாரம் விவரிக்கப்படுகிறது. கோயில், திருமலை, பெருமாள்கோயில் முதலான தி₃வ்ய

अर्चावतारो नाम देशकालविप्रकर्षरहितः आश्रिताभिमतद्रव्यादिकं शरीरतया स्वीकृत्य तस्मिन्नप्राकृतशरीरविशिष्टस्सन्नर्चकपराधीनस्नान-भोजनासनशयनस्थितिः सर्वसहिष्णुः परिपूर्णो गृहग्रामनगरप्रशस्तदेश-शैलादिषु वर्तमानो मूर्तिविशेषः। स च स्वयंव्यक्तदैवसैद्धमानुष-भेदाच्चतुर्विधः। एवमुक्तासु पञ्चावस्थास्वपि श्रीविशिष्ट एव भगवान्

---

४७५. श्रीरङ्गवेङ्कटाद्रिश्रीहस्त्यद्र्यादिस्थलस्थितः।
आश्रिताभिमतद्रव्यं स्वीकृत्याङ्गतया मुदा॥

४७६. ज्वलिताप्राकृतश्रीमद्दिव्यमङ्गलविग्रहः।
सुलभश्चार्चकाधीनसर्वभोगो धृतेन्दिरः॥

४७७. अर्चावतार एवायं मुख्यः कैङ्कर्यशालिनाम्।
अयं स्वयंव्यक्तदैवसैद्धमानुषभेदतः॥

---

தே₃ஶங்களிலும், கிராமநக₃ரக்₃ருஹங்களிலுமிருப்பவனாய், தமர் உகந்ததானதொரு ஸுவர்ணம், ரஜதம் (வெள்ளி) முதலான திரவியங்களைத் திருமேனியாக உகந்து, விளங்காநிற்கும் அப்ராக்ருதமான அழகியதி₃வ்யமங்க₃ள விக்₃ரஹத்தையுடையவனாய், அவர்களுகந்த பெயர், ஆகாரம் முதலியவற்றையும் உகப்பவனாய், பரவ்யூஹாதி₃நிலைகளைப்போலே தே₃ஶத்தாலும், காலத்தாலும் விலகி நில்லாமல் அனைவர்க்குமெளியவனாய், அர்ச்சகரின் வசமாயிருக்கும் ஆஸநம், ஶயநம், ஸ்நாநம், போ₄ஜனம் முதலான எல்லா போ₄க₃ங்களையுமுடையவனாய், அடியார்கள்செய்யும் குற்றங்களனைத்தையும் பொறுத்திருப்பவனாய், கு₃ணபரிபூர்ணனாய், பிராட்டியைத் திருமார்விலே த₄ரித்திருப்பவனாய் உள்ள நிலை அர்ச்சாவதாரம். இதுவே கைங்கர்யம் செய்ய விருப்பமுள்ளவர்களுக்கெல்லாம் முக்கியமான விஷயமாகும், இவ்வர்ச்சாவதாரம், *ஸ்வயம் வ்யக்தம்* (தானாகவே ஆவிர்ப்ப₄வித்தது), *தை₃வம்* (தே₃வர்களால் ப்ரதிஷ்டை₂ செய்யப்பட்டது), *ஸைத்₃த₄ம்*(ஸித்₃த₄ர்களால் ப்ரதி-ஷ்டை₂ செய்யப்பட்டது), *மாநுஷம்* (மனிதர்களால் ப்ரதிஷ்டை₂ செய்யப்பட்டது) என்று நாலுவகைப்பட்டதாக ஸம்ஹிதைகளில் சொல்லப்படுகிறது. பரம், வ்யூஹம், விப₄வம், அந்

वर्तत इति श्रुत्यादिप्रमाणसिद्धोऽर्थः। एतेनैकायनोक्तनिःश्रीकवाद-निरासः। एवमीश्वरो निरूपितः॥ २२७॥

इति श्रीवाधूलकुलतिलक-श्रीमन्महाचार्यप्रथमदासेन श्रीनिवासदासेन विरचितायां यतीन्द्रमतदीपिकायां शारीरकपरिभाषायामीश्वरनिरूपणं नाम नवमोऽवतारः॥

---

४७८. चतुर्विधस्संहितोक्तः श्रिया युक्तश्च सर्वदा।
श्रिय एकोनशेषित्वं लक्षणं बुधसंमतम्॥

४७९. इयं पुरुषकारत्वोपायत्वोपेयतायुता।
मोक्षप्रदानसङ्कल्पयुता भर्त्रा सहैव च॥

---

தர்யாமி, அர்ச்சை என்னும் இவ்வைந்து நிலைகளிலும் எப்போதும் பரமபுருஷன் பிராட்டியோடு கூடியே இருக்கிறன் என்பது ஶ்ருதி முதலான ப்ரமாணங்களிலிருந்து தேறும் அர்த்த₂ம். இத்தால் திருவில்லாத ப்₃ரஹ்மசாரி நாராயணனே உலகிற்கு ஶேஷி என்னும் ஏகாயனமதம் தள்ளப்பட்டதாகிறது. 227.

478*. இனி, ஈஶ்வரகோடிக₄டிதையாக காரிகாவளீகார ஸம்மதமான ஶ்ரீதத்வம் நிரூபிக்கப்படுகிறது. "ஏகோந ஶேஷித்வம்" [ப₄க₃வான் ஒருவனைத்தவிர மற்றுள்ள எல்லாவற்றுக்கும் ஶேஷியாயிருக்கை] என்பது பிராட்டிக்கு எல்லா ஆசார்யர்களும் அங்கீ₃கரிக்கும் லக்ஷணமாகும். எல்லாவுலகும் ஒரு மிது₂னத்திற்கு ஶேஷமாய் (அதிஶயத்தை விளைப்பதாய்) இருக்கிறது என்பதில் ஆசார்யர்களுக்குள் கருத்து வேற்றுமையே கிடையாது. அதுபோலவே, பிராட்டி ப₄க₃வானுக்கு ஶேஷபூ₄தையாயிருக்கிருள் என்பதிலும், அவன் எவருக்கும் நிருபாதி₄கஶேஷபூ₄தனல்லன் என்பதிலும் ஆசாரியர்களுக்குள் கருத்துவேற்றுமையே கிடையாது. *

479-482. காரிகாவளீகாரஸம்மதமான வேதா₃ந்ததே₃ஶிக ஸம்ப்ரதா₃ய நிஷ்டா₂ர்களுடைய கருத்தின்படி ஶ்ரீதே₃விஸ்வப₄ாவங்கள் விவரிக்கப்படுகின்றன. பிராட்டியானவள் புருஷகாரத்வம், உபாயத்வம், உபேயத்வம் என்னும் மூன்று ஆகாரங்களோடு கூடியவள் ப₄க₃வானேடு கூடிநின்று மோக்ஷப்ரதா₃நஸங்கல்பத்தைச் செய்பவள். பிராட்டியும் ப₄க₃வானும் முறையே ஶேஷபூ₄தையாகவும், ஶேஷியாகவுமிருப்பது இருவ

४८०. अस्या हरेश्चेच्छयैव मिथश्शेषत्वशेषिते ।
एतन्मुखेङ्गिताधीन ईशस्सृष्ट्यादिकेलिमान् ॥
४८१. दिव्यात्मव्याप्तलोकेयं विश्वेशाना जगत्प्रसूः ।
अज्ञातनिग्रहा विष्णोरन्यूनविभवा सदा ॥
४८२. श्रीशब्दप्रथितानन्तमहाविभवशालिनी ।
निरूपितं चेशतत्त्वं श्रीश्रीशद्वन्द्वरूपकम् ॥

॥ इति ईश्वरप्रकरणम् ॥ ९ ॥

---

ருடைய இச்சையிலேயேயாகும். இவளுடைய புருவ நெறிப்புக்கு வசப்பட்டே பகவான் ஜகத்ஸ்ருஷ்டிஸ்திதி ஸம்ஹாரங்களாகிற விளையாட்டில் ஈடுபடுகிறுன். தன் ஆத்ம ஸ்வரூபத்தாலே அனைத்துலகையும் வியாபித்திருப்பவள் இவள். உலகிற்கெல்லாம் ஈஶ்வரியாயிருப்பவள். உலகனைத்தையும் உண்டாக்கும் தாயாயிருப்பவள். எப்போதும் கோபமென்பதே என்னவென்று அறியாதவள். எப்போதும் பகவானிற் குறையாத ஐஶ்வர்யத்தையுடையவள். “ஸ்ரீ” என்னும் திருநாமத்தினுல் வெளியிடப்படும் அளவற்ற பெருமைகளை உடையவள். ஆக, இவ்வளவால் ஸ்ரீதேவியும் ஶ்ரிய:பதியுமான மிதுனரூபமான ஈஶ்வரதத்வம் நிரூபிக்கப்பட்டதாயிற்று. *

விவரணகாரஸம்மதமான தென்னுசார்யர்களுடைய கருத்து இவ்விஷயத்தில் வேறுபடுகிறது. ‘சேதனனை அங்கீகரித்தருள வேணும்’ என்று புருஷகாரம் (சிபாரிசு) செய்து துவளும் பிராட்டிக்கு ஸ்வதந்த்ரனைப்போலே மோக்ஷப்ரதாநஸங்கல்பம் செய்வதாகிற உபாயத்வம் ஒட்டாது. ஸங்கல்பம் செய்தாலும் அது பதியின் இச்சையைப் பின்செல்வதிலேயே முடியும். இதர சேதனர்களைப்போலே அநந்யார்ஹஶேஷத்வம், அநந்ய ஶரணத்வம், அநந்யபோக்யத்வம் என்னும் இயற்கையான தன்மைகளையுடையவள் பிராட்டி. இதரசேதந விலக்ஷணமான புருஷகாரத்வம், ஶேஷித்வம், உபேயத்வம் என்னும் மூன்று ஆகாரங்களையும் உடையவளிவள். பல விஷயங்களில் இதர சேதநவிலக்ஷணையானுலும், ஈஶ்வரத்வித்வம் கூடாதாகையாலும், பகவானுக்கு இவள் நிருபாதிகஶேஷபூதையாகையாலும் இவளை ஜீவகோடியில் சேர்ப்பதே பொருந்தும். *

ப்ராட்டியானவள் ஈஶ்வரகோடியிற் சேர்ந்தவளா, ஜீவ கோடியிற் சேர்ந்தவளா என்னும் விஷயத்தில் ஸ்ரீவேத₃ாந்த தே₃ஶிகருக்கும் தென்னசார்யர்களுக்கும் கருத்துவேற்றுமை யிருந்தபோதிலும், ப₄க₃வான் ஒருவனே பரப்₃ரஹ்மபூ₄தன் என்னும் விஷயத்தில் ஆசாரியர்களுக்குள் கருத்து வேற்று மையே கிடையாது. ஸ்வேதரஸமஸ்தவஸ்துப்ரகாரியான ப₄க₃ வானுக்குப் பிராட்டியும் ப்ரகாரமாய், ஶேஷமாய், நியாம்யமாய், த₄ார்யமாய், ரக்ஷ்யமாயிருப்பவள் என்பதை விஶிஷ்டாத்₃வைதி கள் மறுக்க இயலாது. ஸ்வேதரஸமஸ்தவஸ்து ப்ரகாரியாய், நிரதிஶயப்₃ருஹத்தாய், ஜக₃த்துக்கு நிமித்தோபாத₃ாநகாரணமா யுள்ள பரப்₃ரஹ்மம் *ஒன்றே* என்னும் காரணத்தாலேயே நம் மதம் *விஶிஷ்டாத்₃வைதம்* என்று பெயர் பெற்றுள்ளது. அப் படிப்பட்ட வஸ்துக்கள் இரண்டு என்று கொள்ளப்புகில், நம்முடைய மதம் *விஶிஷ்டத்₃வைதமாக* மாறிவிடும். எந்த ஆசார்யரும் இப்படிக் கருதியதில்லை. இதை ஸ்ரீவைஷ்ணவர் களனைவரும் நடுநிலைநின்று ஆழ்ந்து சிந்திக்கவேணும். *

ஸங்மதகாரிகாவளீ விவரணத்தில் ஈஶ்வரப்ரகரணம் முற்றிற்று.

## 10. அத்ரவ்யப்ரகரணம்

*483. கடைசியான அத்₃ரவ்யப்ரகரணம் ஆரம்பிக்குமுன், ஸிம்ஹாவலோகந ந்யாயத்தாலே முன் ப்ரகரணங்களிற் சொல் லப்பட்ட விஷயங்களைச் சுருக்கமாகக் கண்டு செல்வோம். எல்லாப் பொருள்களும் *ப்ரமாணம்* என்றும், *ப்ரமேயம்* என்றும் இரண்டாகப் பிரிக்கப்பட்டன. *ப்ரமாணமானது, ப்ரத்யக்ஷம், அநுமானம், ஆக₃மம்* என்று மூன்றாகப் பிரிக்கப்பட்டு முதல் மூன்று ப்ரகரணங்களிலே ஆராயப்பட்டது. பின்வரும் ப்ரகர ணங்களெல்லாம் ப்ரமேயத்தை ஆராயுமவை. அதிலே *ப்ரமேய மானது, த்₃ரவ்யம், அத்₃ரவ்யம்* என்று இருவகையாகப் பிரிக்கப் பட்டு, த்₃ரவ்யங்கள் நாலுமுதல் ஒன்பதுவரையிலான ப்ரகரணங்க ளிலே ஆராயப்பட்டன. எங்ஙனேயென்னில்; *த்₃ரவ்யமானது*— தானே ப்ரகாஶியாததாய், (பிறர்க்கே பிரகாஶிக்கும் பராக்கான) *ஜட₃*மென்றும், தானே பிரகாஶிக்கும் *அஜட₃*மென்றும் இரு வகைப்படும்; அதில் *ஜட₃ம்* நாலு ஐந்தாவது ப்ரகரணங்களிலும் *அஜட₃ம்* ஆறுமுதல் ஒன்பதுவரையிலுள்ள ப்ரகரணங்களிலும்

## ॥ अथ दशमोऽवतारः ॥

एवं द्रव्यनिरूपणानन्तरं क्रमप्राप्तमद्रव्यं निरूप्यते ॥ २२८ ॥ संयोगरहितमद्रव्यम् ॥ २२९ ॥ तदद्रव्यं च सत्त्वरजस्तमांसि, शब्द-

## ॥ अथ अद्रव्यप्रकरणम् ॥ १० ॥

४८३. निरूपितं द्रव्यमेवमथाऽद्रव्यं निरूप्यते।
अद्रव्यस्यास्य संयोगशून्यत्वं लक्षणं मतम् ॥

விளக்கப்பட்டன. *ஜட₃மானது ப்ரக்ருதி*யென்றும், *கால*மென்றும் இருவகைப்படுமாகையாலே நாலாவது ப்ரகரணம் *ப்ரக்ருதி*யையும், ஐந்தாவது ப்ரகரணம் *காலத்தை*யும் விவரித்தது. *அஜட₃*மானது,—*பராக்* என்றும், *ப்ரத்யக்* என்றும் இருவகைப்படுமாகையாலே, ஆறு ஏழாவது ப்ரகரணங்களில் *பராக்கான* அஜட₃த்₃ரவ்யங்களும், எட்டு ஒன்பதாவது ப்ரகரணங்களில் *ப்ரத்யக்₃த்₃*ரவ்யங்களும் விவரிக்கப்பட்டன. *பராக்₃*(*அஜட₃*) த்₃ரவ்யமும்—*நித்யவிபூ₄தி* என்றும் *த₄ர்மபூ₄தஜ்ஞானம்* என்றும் இருவகைப்படுமாகையாலே அவை முறையே ஆருவது ஏழாவது ப்ரகரணங்களில் காணப்பட்டன. *ப்ரத்யக்* த்₃ரவ்யமும்—*ஜீவன்* என்றும், *ஈஶ்வரன்* என்றும் இருவகைப்படுமாகையாலே அவை முறையே எட்டாவது ஒன்பதாவது ப்ரகரணங்களில் அநுப₄விக்கப்பட்டன. ஆக இப்படி ப்ரமேயங்களில் ஒருவகையான த்₃ரவ்யங்கள் நாலுமுதல் ஒன்பதுவரையிலுள்ள ப்ரகரணங்களிலே விரிவாக விளக்கப்பட்டன. ப்ரமேயங்களில் மற்ருெருவகையான அத்₃ரவ்யம் கடைசியான இப்பத்தாவது ப்ரகரணத்திலே விவரிக்கப்பட்டு ப்ரமாண ப்ரமேயாத்மகமான ஸகலபதா₃ர்த்த₂ விவரணருபமான இந்நூல் முடிவு பெறப் போகிறது. இனி, அத்₃ரவ்யங்களைக் காண்போம். 228.

483*. 'ஸம்யோக₃மில்லாமலிருக்கை' என்பது அத்₃ரவ்யத்தின் லக்ஷணமாகக் கூறப்படுகிறது. 'ஸம்யோக₃ம்' [சேர்க்கை] என்னும் கு₃ணம் திரவியங்களில்தான் உண்டு. அத்₃ரவ்யங்களில் கிடையாது. ஆகையால், அதையிட்டே அத்₃ரவ்யலக்ஷணம் சொல்லப்படுகிறது. 229.

स्पर्शरूपरसगन्धास्संयोगश्शक्तिरिति दशप्रकारमेव ॥ २३० ॥ तत्र प्रकाशसुखलाघवादिनिदानमतीन्द्रियं शक्त्याद्यतिरिक्तमद्रव्यं सत्त्वम्। तद्द्विविधम्। शुद्धसत्त्वं मिश्रसत्त्वं चेति। रजस्तमश्शून्यद्रव्यवृत्तिसत्त्वं शुद्धसत्त्वम्। तन्नित्यविभूतौ। उपचारात्तत्प्रवर्तकेश्वरे च। रजस्त-

---

४८४. सत्त्वं रजस्तमः शब्दः स्पर्शो रूपं रसस्तथा।
गन्धस्संयोगशक्ती चेत्यद्रव्यं दशधा स्थितम्॥

४८५. सुखप्रकाशादिबीजं सत्त्वमाहुरतीन्द्रियम्।
शुद्धमिश्रप्रभेदेन सत्त्वं द्विविधमुच्यते॥

---

484. (1) ஸத்வம், (2) ரஜஸ், (3) தமஸ், (4) ஶப்₃த₃ம், (5) ஸ்பர்ஶம், (6) ரூபம், (7) ரஸம், (8) க₃ந்த₄ம், (9) ஸம்யோக₃ம், (10) ஶக்தி என்று அத்₃ரவ்யங்கள் பத்தாகப் பிரிக்கப்படுகின்றன. 230.

485-487. முதல் மூன்று அத்₃ரவ்யங்களான ஸத்வரஜஸ் தமஸ்ஸுக்கள் ப்ரக்ருதி என்னும் த்₃ரவ்யத்தின் கு₃ணங்களாகும். அதில் முதலதும், சிறந்ததுமான ஸத்வகு₃ணம் முதலில் விவரிக்கப்படுகிறது. ஸுக₂ம், உண்மையறிவு, இலகுவாயிருப்பது முதலானவற்றுக்குக் காரணமாய், இந்திரியங்களுக்குத் தோற்றாததாய், ஶக்தியைக்காட்டிலும் வேறுபட்டதாய் இருப்பதொரு கு₃ணம் *ஸத்வம்* எனப்படுகிறது. இந்த ஸத்வகு₃ணமும் *ஶுத்₃த₄ஸத்வம்* என்றும், *மிஶ்ரஸத்வம்* என்றும் இருவகைப்படும். ரஜஸ்தமஸ்ஸோடு கலசாத ஸத்வம் ஶுத்₃த₄ஸத்வம் எனப்படுகிறது. இது நித்யவிபூ₄தி த்₃ரவ்யத்தின் கு₃ணமாகும். இப்படிப்பட்ட நித்யவிபூ₄தி த்₃ரவ்யத்தாலான திருமேனியை உடையவனுகையாலும், ப₃த்₃த₄ஜீவர்களுக்கு ஸத்வகு₃ணத்தை வளரச்செய்வதாலும் ஈஶ்வரன் ஸத்வகு₃ணமுடையவன் என்று உபசாரமாக வழங்கப்படுகிறுன். ஶுத்₃த₄ஸத்வகு₃ணம் பரமபுருஷனுடைய தி₃வ்யாத்மஸ்வரூப கு₃ணமன்று; தி₃வ்யமங்க₃ள விக்₃ரஹ கு₃ணமேயாகும். ரஜஸ் தமஸ்ஸோடு கலசிநிற்கும் ஸத்வம் *மிஶ்ரஸத்வம்* எனப்படும்.

मस्सहवर्तिसत्त्वं मिश्रसत्त्वम्। तत् त्रिगुणे। तत्संबन्धिनि जीवे चोपचारात्।' २३१॥ रागतृष्णालोभप्रवृत्त्यादिनिदानमतीन्द्रियं शक्त्याद्यतिरिक्तमद्रव्यं रजः। प्रमादमोहादिनिमित्तमतीन्द्रियं शक्त्याद्यतिरिक्तमद्रव्यं तमः॥ २३२॥ त्रीण्यप्येतानि यावत्प्रकृति व्याप्तानि, प्रकृति-

---

४८६. रजस्तमोऽसमानाधिकरणं शुद्धसत्त्वकम्।
एतन्नित्यविभूतौ स्यात् ईश्वरे चोपचारतः॥
४८७. रजस्तमस्समानाधिकरणं मिश्रसत्त्वकम्।
एतच्च त्रिगुणे तत्सम्बद्धजीवे च गौणतः॥

---

இது முக்கு₃ணங்களுடைய *ப்ரக்ருதி* என்னும் த்ரவ்யத்திலேயே உள்ளது. அந்த ப்ரக்ருதி கார்யமான *ஶரீ*ரத்தோடு கூடிநிற்கும் ஜீவன் இந்த முக்கு₃ணங்களுக்கும் வசப்பட்டு நிற்கிறுனுகை யாலே இந்த கு₃ணங்களையுடையவனுக உபசாரமாக வழங்கப் படுகிறுன். உண்மையில் அவன் ஸ்வரூபத்தில் இவையில்லை. மி*ஶ்*ரஸத்வம் ரஜஸ்தமஸ்ஸுக்களோடு கலசிநிற்கையாவது :— அவற்ருேடு ஸமாநாதி₄கரணமாயிருக்கை; அதாவது – அவற் றுக்கு இருப்பிடமான ப்ரக்ருதியிலே தானும் கு₃ணமாய்நிற்கை. *ஶு*த்₃த₄ ஸத்வம் ரஜஸ்தமஸ்ஸுக்களோடு கலசாமலிருக்கை யாவது :— அவற்ருேடு ஸமாநாதி₄கரணமல்லாமலிருக்கை; அதாவது — தனக்கு இருப்பிடமான நித்யவிபூ₄தித்₃ரவ்யத் திலே அவற்றின் (ரஜஸ்தமஸ்ஸுக்களின்) ஸம்ப₃ந்த₄ மற்றிருக்கை. 231.

488. ரஜஸ்தமஸ்ஸுக்கள் விவரிக்கப்படுகின்றன. ஆசை, ப்ரவ்ருத்தி (செயல்புரிவது) முதலானவற்றுக்குக் காரணமாய், இந்திரியங்களுக்கு விஷயமாகாததாய், *ஶ*க்தியைக் காட்டிலும் வேருனதாய் இருப்பதொரு கு₃ணம் *ரஜஸ்ஸு* எனப்படுகிறது. மயக்கம், கவனமின்மை, ப்ரவ்ருத்தியின்மை (சோம்பல்) முத லானவற்றுக்குக் காரணமாய், இந்திரியங்களுக்கு விஷயமாகாத தாய், *ஶ*க்தியைக்காட்டிலும் வேருனதாய் இருப்பதொரு கு₃ணம் *தமஸ்ஸு* எனப்படுகிறது. 232.

वश्यपुरुषसंबद्धानि अनित्यानि, नित्यसन्तानानि, प्रलयदशायां समानि सृष्ट्यादौ विषमाणि, सृष्टिस्थितिसंहारोपयुक्तानि, ईश्वरसङ्कल्पादि-सहकारिभेदात्परस्पराभिभवोद्भवकराणीत्येतानि साधारणानि ॥ २३३ ॥

सत्त्वगुणस्तु सम्यग्ज्ञानरूपसुखादिहेतुः मोक्षप्रदश्च। रजोगुणस्तु रागाद्यात्मकः कर्मसङ्गी दुःखादिहेतुः स्वर्गाद्यामुष्मिकप्रदश्च। तमो-

---

४८८. लोभप्रवृत्त्यादिबीजं शक्तिभिन्नमतीन्द्रियम्।
रजः प्रोक्तं तमश्चापि मोहादिजनकं भवेत्॥
४८९. एतानि यावत्प्रकृति व्याप्तान्यामुक्ति चेतने।
तत्सम्बद्धे प्रसक्तानि समानि प्रलये तथा॥
४९०. सृष्टौ च विषमाणि स्युरीशसङ्कल्पमात्रतः।
सत्त्वं ज्ञानसुखादीनां हेतुर्मुक्तेश्च कारणम्॥

---

489—*490 இம்மூன்று கு₃ணங்களும் ப்ரக்ருதி முழுவதிலும், அதன் கார்யம் முழுவதிலும் வியாபித்திருக்கின்றன. முக்தியடையும்வரையில் அந்த ப்ரக்ருதியோடு கூடியிருக்கும் *ப₃த்₃த₄ சேதனனிடம்* இம்மூன்று கு₃ணங்களும் பொருந்தியுள்ளன; அநித்யமான இவை ப்ரவாஹதோ நித்யமாயிருப்பவை. ப்ரளயகாலத்தில் இவை ப்ரக்ருதியிலே ஸமமான அளவுள்ளவையாயிருக்கின்றன. ஸ்ருஷ்டிகாலத்திலே ஈஶ்வரஸங்கல்பத்தாலே ஏற்றத்தாழ்வுள்ளவையாகின்றன. ஸத்வகு₃ணம் ரக்ஷிப்பதற்கும், ரஜோகு₃ணம் படைப்பதற்கும், தமோகு₃ணம் அழிப்பதற்கும் உதவுகின்றன, ஈஶ்வரஸங்கல்பம் முதலானவற்றின் துணையாலே ஒன்றையொன்று அமுக்கியும், விஞ்சியும் காண்கின்றன. இவை இம்மூன்றுக்கும் பொதுவான தன்மைகள். 233.

490*-491. நல்லறிவு, இன்பம் முதலானவற்றுக்குக் காரணமாயிருந்து முக்தியையும் அளிக்கிறது *ஸத்வம்*. ஆசை, செயல், பற்று, துன்பம், சுவர்க்கம் முதலியவற்றுக்குக் காரணமாயிருப்பது *ரஜஸ்ஸு*. அறிவின்மை, சோம்பல் ஆகியவற்றுக்குக் காரணமாயிருந்து நரகத்தை அளிக்கிறது *தமஸ்ஸு*. இம்மூன்று கு₃ணங்களையும் இந்த ஸம்ஸார மண்ட₃லத்தில் ஜீவர்களுக்கு

गुणस्तु अज्ञानरूपालस्यादिहेतुः नरकप्रदश्च। अतस्सत्त्वादयो गुणाः न द्रव्यरूपाः॥ २३४॥

अस्मदादिश्रोत्रग्राह्यः पञ्चभूतवर्ती शब्दः। स च द्विविधः, वर्णात्मकोऽवर्णात्मकश्चेति। अकचटतपयादिपञ्चाशदक्षरात्मको वर्णात्मकः। स देवमनुष्यादिताल्वादिव्यङ्ग्यः। भेर्यादिजन्योऽवर्णात्मकः। एवंभूतः

---

४९१. रजो रागक्रियासंगदुःखस्वर्गादिकारणम्।
अज्ञानालस्यहेतुस्स्यात्तमो नरकदं तथा॥

४९२. शब्दः श्रोत्रेन्द्रियग्राह्यः पञ्चभूतेषु वर्तते।
वर्णाऽवर्णात्मकत्वाभ्यां द्विविधोऽयं प्रकीर्त्यते॥

४९३. पञ्चाशदक्षरात्मा यः स वर्णात्मक इष्यते।
देवमर्त्यादिजीवानां ताल्वादिस्थाननिस्सृतः॥

---

அபி₄வ்ருத்₃தி₄ செய்யும் தே₃வதைகள் முறையே *விஷ்ணுவும், பிரமனும், உருத்திர* னுமாவர் என்பது ஸகல*ஶா*ஸ்த்ரப்ரஸித்₃த₄ம். அத்₃ரவ்யமாய், கு₃ணங்களான ஸத்வரஜஸ்தமஸ்ஸுக்களின் மற்றுமுள்ள தன்மைகளை கீ₃தை முதலான சாஸ்திரங்களில் விரிவாகக் காணலாம். 234.

492-*495. இனி, *ஶப்₃த₃*ஸ்பர்*ஶ*ரூபரஸ க₃ந்த₄ங்கள் என்னும் ஐந்து பூ₄தகு₃ணங்களில் முதலாவதான *ஶப்₃த₃*ம் விவரிக்கப்படுகிறது. நம்முடைய *ஶ்*ரோத்ரம் (செவி) என்கிற இந்திரியத்தாலே அறியப்படுவது *ஶப்₃த₃ம்.* இது ஐந்து பூ₄தங்களிலுமிருக்கிறது. வர்ணரூபம் என்றும் வர்ணரூபமல்லாதது என்றும் இது இரண்டுவித₄ம். *வர்ணரூபமாவது,—* அகரம் முதலாகவும், க, ச, ட, த, ப, ய முதலாகவும் இருக்கிற ஐம்பது அக்ஷரங்கள். அது தே₃வர்களுடையவும் மனிதர்களுடையவும் தாலு *(தாடை)* முதலான இடங்களிலிருந்து வெளிப்படுத்தப்படுகிறது. பே₄ரி முதலானவைகளால் உண்டுபண்ணப்படும் *ஶப்₃த₃*ம் *வர்ணமல்லாதது* ஆகும். இவ்விருவகை *ஶப்₃த₃*மும் *ஶ்*ரோத்ரம் (செவி) என்கிற இந்திரியத்தாலே அறியப்படுகிறது.

शब्दः श्रोत्रेन्द्रियेण गृह्यते। श्रोत्रेन्द्रियगमनाद्वा व्यञ्जकवाय्वागमनाद्वा शब्दग्रहः॥ २३५॥ ननु, श्रुत्या शब्दस्य द्रव्यत्वं प्रतीयते, अद्रव्यत्वं कथमिति चेन्न। अकारादेः प्रणवोत्पादकत्वं वाच्यद्वारा संभवतीति परिहारादद्रव्यत्वमुपपद्यते॥ २३६॥

---

४९४. भेर्यादिजन्यश्शब्दश्चावर्णात्मक उदाहृतः।
शब्दोत्पत्तिस्थले श्रोत्रगमनात्तद्ग्रहोऽथवा॥

४९५. शब्दव्यञ्जकवायोरागमनाच्छब्दसंग्रहः।
स्पर्शस्त्वचैव वेद्यः स्यात् पृथिव्यादिचतुष्टये॥

---

*ஶ்*ரோத்ரேந்த்₃ரியம் *ஶப்₃த₃*முண்டாகுமிடத்திற்குப் போவதிஞலேயோ அல்லது *ஶப்₃த₃*த்தை வெளிப்படுத்துகிற வாயு செவியை அடைவதாலேயோ *ஶப்₃த₃*ம் அறியப்படுகிறது. 235.

* இவ்விடத்தில் பின்வருமாறு ஓர் ஆக்ஷேபம் எழுகிறது: "*யத்₃வேத₃ாதெ₃ள ஸ்வர: ப்ரோக்தோ... தஸ்ய ப்ரக்ருதி லீநஸ்ய*" [தை-நா-10] என்று அகாரம் ஓங்காரத்திற்கு உபாத₃ாநகாரணம் என்றும், "*அகாரோ வை ஸர்வா வாக்*" என்று அகாரமே எல்லா வாக்குகளாகப் பரிணமிக்கிறது என்றும் கூறுகையால், *ஶப்₃த₃*த்தை உபாத₃ாநகாரணமாக முடியாத அத்₃ரவ்யமாகக் கொள்வது பொருந்தாதே—என்பது அவ்வாக்ஷேபம். இதற்குப் பரிஹாரம் பின்வருமாறு:— இங்கு அகாரம் ஓங்காரத்திற்கும், எல்லா வாக்குகளுக்குமே காரணம் என்றது, அகாரவாச்யஞன ஸர்வே*ஶ்*வரஞன நாராயணன், ஓங்காரத்தாலும், எல்லா வாக்குகளாலும் சொல்லப்படும் எல்லாப் பொருள்களுக்கும் காரணன் என்றபடியேயாகும். ஆகையால், *ஶப்₃த₃*த்தை அத்₃ரவ்யமெனக் கொள்வது பொருந்தும். 236.

495*-*498. இனி பூ₄தகு₃ணங்களில் இரண்டாவதான *ஸ்பர்ஶம்* விவரிக்கப்படுகிறது. (நம்முடைய ஸ்பர்*ஶே*ந்த்₃ரியமான) 'த்வக்' என்னும் இந்திரியத்தால் மாத்திரம் அறியத்தக்கது '*ஸ்பர்ஶம்*' என்னும் கு₃ணம். ஸ்பர்*ஶ*த்தையுடைய பொருளும் ஸ்பர்*ஶே*ந்த்₃ரியத்தால் அறியத்தக்கதாயிருக்கையால், அதில் அதிவ்யாப்தியுண்டாவதைத் தவிர்க்க "'த்வக்' இந்திரியத்தால் *மாத்திரம்* அறியத்தக்கது" என்று ஸ்பர்*ஶ*லக்ஷணமுரைக்கவேண்டும். ஸ்பர்*ஶ*த்தையுடைய பொருள் த்வகி₃ந்த்₃

अस्मदादिस्पर्शनेन्द्रियग्राह्यविजातीयव्यावृत्तोऽद्रव्यं स्पर्शः। स च त्रिविधः। शीतोष्णानुभयात्मकभेदात्। अप्सु शीतस्पर्शः। तेजस्युष्णस्पर्शः। क्षितिपवनयोरनुष्णाशीतस्पर्शः। पुनर्द्विविधः। पाकजोऽपाकजश्चेति। पृथिव्यां पूर्वः। इतरेषु त्रिषु परः। तत्रामृतगरलतूलोपलगोब्राह्मणचण्डालादिस्पर्शविशेषाः पाकजभेदाः॥ २३७॥

---

४९६. शीतोष्णानुभयाख्येन भेदेनायं त्रिधा मतः।
शीतस्पर्शो जले वह्नावुष्णस्पर्शश्च वर्तते॥

४९७. अनुष्णाशीतसंस्पर्शः पृथिवीवातयोर्द्वयोः।
स्पर्शः पुनश्च द्विविधः पाकजापाकजात्मना॥

---

ரியத்தால் மாத்திரமல்லாமல், கண்ணாலும் அறியத்தக்கதாக வன்றோ இருக்கிறது. ஸ்பர்*ஶ*ம்—பூ₄மி, நீர், நெருப்பு, வாயு என்னும் நான்கு பூ₄தங்களில் மாத்திரமிருக்கிறது. *ஶீத* (குளிர்ந்த) *ஸ்பர்ஶம், உஷ்ண* (சூடான) *ஸ்பர்ஶம்*, (*ஶீ*தோஷ்ணங்கள்) *இரண்டுமற்ற ஸ்பர்ஶம்* என்று ஸ்பர்*ஶ*ம் மூன்று வகைப்படும். *ஶீ*தஸ்பர்*ஶ*ம் ஜலத்தில் உள்ளது. உஷ்ணஸ்பர்*ஶ*ம் அக்₃னியில் உள்ளது. பூ₄மியிலும் காற்றிலும் இரண்டுமற்ற ஸ்பர்*ஶ*ம் உள்ளது. காற்றும், பூ₄மியும் குளிர்ந்தும், உஷ்ணமாயும் தோற்றுவதற்குக் காரணம் முறையே நீர், நெருப்பு இவற்றின் ஸம்ப₃ந்த₄மிருப்பதேயாகும். *பாகஜ ஸ்பர்ஶம், அபாகஜஸ்பர்ஶம்* என்றும் ஸ்பர்*ஶ*த்தை மற்றொருவித₄த்தில் இருவகையாகப் பிரிக்கலாம். பாகமாவது—தேஜஸ்ஸின் ஸம்ப₃ந்த₄ம். சுடாத களிமண்ணைச் சுட்டபோது தேஜஸ்ஸம்ப₃ந்த₄த்தாலே ஸ்பர்*ஶ*ம் வேறுபடுவதைக் காண்கிறோம். இதுபோல் மற்றும் பல ஸ்பர்*ஶ* மாறுதல்கள் ப்ருதி₂வீ என்னும் பூ₄தத்திலேயே ஏற்படுகின்றன. இவற்றைப் *பாகஜ* (பாகத்தால் உண்டான) *ஸ்பர்ஶம்* என்கிறோம். இப்படித் தேஜஸ்ஸம்ப₃ந்த₄த்தாலல்லாமல் இயற்கையிலேயே உள்ள ஸ்பர்*ஶ*ங்களை *அபாகஜ ஸ்பர்ஶம்* என்கிறோம். இந்த வகை ஸ்பர்*ஶ*ம்—நீர், நெருப்பு, வாயு ஆகிய மூன்று பூ₄தங்களிலும் உள்ளது. அம்ருதம், விஷம், பஞ்சு, கல், பசு, அந்தணன், சண்டா₃ளன் முதலானவர்களின் ஸ்பர்*ஶ*ங்கள் பாகஜஸ்பர்*ஶ*வகையைச் சேர்ந்தவை. 237

असदादिचक्षुरिन्द्रियैकग्राह्यविजातीयव्यावृत्तं अद्रव्यं रूपम्। तच्चतुर्धा। सितरक्तपीतकृष्णभेदात्। तत्र सलिलकलधौतशङ्खशुक्तिशशाङ्कादीनां रूपविशेषास्सितभेदाः। हुतवहजपादाडिमबन्धुजीवविद्रुमपद्मरागादीनां रूपविशेषाः रक्तभेदाः। काञ्चनहरितालहरिद्रादीनां रूपविशेषाः पीतभेदाः। मरकतमधुकरजलधरतिमिरतमालदूर्वादीनां रूपविशेषाः कृष्णभेदाः। पीतिमानमपि रक्तावान्तरभेदं केचिदिच्छन्ति

---

४९८. आद्यः पृथिव्यामन्त्यश्च जलादित्रिषु वर्तते।
रूपं चक्षुर्मात्रवेद्यं चतुर्विधमिदं मतम्॥

४९९. श्वेतं रक्तं च पीतं च कृष्णं चेति प्रमाणतः।
श्वेतवर्णश्शंखशुक्तिशशाङ्कादिषु निष्ठितः॥

५००. रक्तमग्निजपाबन्धुजीवादिषु च वर्तते।
हरिद्राहेममुख्येषु पीतवर्णोऽस्ति वस्तुषु॥

---

498*-*502. இனி மூன்ருவது பூ₄தகு₃ணமாகிய ரூபம் விவரிக்கப்படுகிறது. (த₃ர்ஶனேந்திரியமான) கண் ஒன்றிஞலேயே காணத்தக்கது ருபமாகும். ருபத்தையுடைய வஸ்துவும் கண்ணுல் காணத்தக்கதாயிருக்கையால் அதில் அதிவ்யாப்தி தே₃ாஷத்தைத் தவிர்ப்பதற்காக "கண் *ஒன்றிஞலேயே*" என்று லக்ஷணம் உரைக்கவேண்டும். ருபத்தையுடைய வஸ்து கண்ணுல் மாத்திரமல்லாமல் ஸ்பர்ஶேந்திரியத்தாலும் அறியப்படுகிறதன்ரே. ப்ரத்யக்ஷப்ரமாணத்திஞலே—*வெளுப்பு, சிவப்பு, மஞ்சள், கறுப்பு* என்று இது நாலு வகைப்பட்டதாகக் காணப்படுகிறது. ஶங்க₂ம், சிப்பி, சந்திரன், பால் முதலானவற்றிலிருப்பது *வெண்மை* வகைகள் ஆகும். நெருப்பு, செம்பரத்தம்பூ (ஜபாகுஸுமம்), ப₃ந்து₄ஜீவபுஷ்பம், பவளம் முதலானவற்றிலிருப்பது *சிவப்பு* வகைகள் ஆகும். மஞ்சள் கிழங்கு, பொன், ஹரிதாளம் முதலானவற்றிலிருப்பது *மஞ்சள்* வகைகள் ஆகும். மேக₄ம், வண்டு, அருகம்புல், இருட்டு முதலானவற்றிலிருப்பது *கறுப்பு* வகைகள் ஆகும். "லோஹித

श्रुत्यनुसारात्। प्रकारान्तरेण रूपं द्विविधम् भास्वराभास्वरभेदात्। तेजोगतं भास्वरम्। क्षितिसलिलगतमभास्वरम्॥ २३८॥ एवं चत्वार्येव रूपाणि। एतेन चित्रं नाम पञ्चमं रूपमिति मतनिरासः। अत एव चित्ररसगन्धस्पर्शानामपि निरासः॥ २३९॥

---

५०१. मेघभ्रमरदूर्वादिरूपं कृष्णमुदाहृतम्।
रूपं पुनश्च द्विविधं भास्वराभास्वरात्मना॥

५०२. तेजस्याद्यं द्वितीयं च पृथिवीजलवृत्ति तत्।
रसो जिह्वेन्द्रियग्राह्यः षोढा स मधुरादिभिः॥

---

ஶுக்ல க்ருஷ்ணம்" [ஶ்வே] என்று ஶ்ருதி சிவப்பு, வெண்மை, கறுப்பு ஆகிய மூன்று நிறங்களையே எடுக்கையால், மஞ்சள் நிறமும் சிவப்பின் ஒருவகையே என்றும் சிலர் கொள்ளுகிறார்கள். *பிரகாஶிப்பது (பா₄ஸ்வரம்), பிரகாஶியாதது (அபா₄ஸ்வரம்)* என்று ரூபம் இருவகையாகவும் பிரிக்கப்படும். தேஜஸ்ஸி லிருக்கும் ரூபம் பிரகாஶிக்கும் வகையில் சேர்ந்தது. பூ₄மி யிலும் ஜலத்திலுமிருக்கும் ரூபம் பிரகாஶியாத வகையைச் சேர்ந்தது. 238.

* தார்க்கிகர்கள் — பலநிற நூல்களால் நெய்யப்பெற்ற உண்ணப் புடவையில், புதிதாக ஓர் அவயவி உண்டாகிற தென்று கொள்ளுகையாலே, சித்ரரூபம் என்று புதிதாக ஓர் ரூபம் உண்டாகிறது என்றும் கொண்டார்கள். புதிதாக அவயவி உண்டாகிறது என்பதே தவறு என்று ஏற்கனவே நிரூபித்திருக்கிறபடியால், அதில் புதிதாகச் சித்ரரூபம் என்று ரூபமொன்று உண்டாகிறது என்பதும் தவறு. அப்புடவையில், நூல்களிலுள்ள எல்லா நிறங்களும் சேர்ந்து பிரகாஶிக்கிறதே யொழிய புதிதாக எந்த ரூபமும் உண்டாவதில்லையன்றோ. ஆகை யால், முற்கூறியபடி ரூபம் நாலுவகைப்பட்டதேயாகும். இதே ரீதியில் சித்ரரஸம், சித்ரக₃ந்த₄ம், சித்ரஸ்பர்ஶம் ஆகியவை உண்டு என்னும் கொள்கைகளும் தவறு என்பது விளங்கும். 239.

502*-504. இனி, நாலாவது பூ₄தகு₃ணமாகிற *ரஸம்* விவரிக்கப்படுகிறது. ( ரஸநேந்திரியமான ) நாவினால் அறியத்

असदादिरसनेन्द्रियग्राह्यविजातीयेतरो रसः। स षोढा, मधुराम्ल-लवणतिक्तकटुकषायभेदात्। तत्रेक्षुक्षीरगुडादिरसाः मधुरभेदाः। चूत-चिञ्चामलकादिरसा आम्लभेदाः। सैन्धवोषरविकारादिरसाः लवणभेदाः। किम्पाकनिम्बादिरसास्तिक्तभेदाः। शुण्ठीमरीचसर्षपादिरसाः कटुभेदाः। हरीतकीविभीतकीचूतांकुरादिरसाः कषायभेदाः॥ २४०॥

---

५०३. गुडादिनिष्ठो मधुरश्चाम्लश्चिञ्चादिषु स्थितः।
लवणो देशभेदे स्यात् तिक्तो निम्बादिषु स्थितः॥

५०४. कटुश्शुण्ठीमरीचिस्थः कषायश्चापरो रसः।
विभीतकहरीतक्याम्राङ्कुरादिषु संस्थितः॥

५०५. गन्धो घ्राणेन्द्रियग्राह्यः सुरभ्यादिप्रभेदवान्।
सुरभिश्चन्दनादौ चासुरभिर्हेयवस्तुषु॥

---

தக்கது *ரஸம்* (சுவை) என்னும் கு₃ணம். இனிப்பு, புளிப்பு, உவர்ப்பு, கசப்பு, காரம், துவர்ப்பு என்று சுவை ஆறு வகைப்படுகிறது. வெல்லம், கருப்பஞ்சாறு, பால் முதலான வற்றிலிருப்பது *இனிப்பு* வகைகள் ஆகும். புளியங்காய், மாங்காய், நெல்லிக்காய் முதலானவற்றிலிருப்பது *புளிப்பு* வகைகள் ஆகும். மலையுப்பு, உவர்மண் உப்பு, நீருப்பு முதலான பல தே₃ஶங்களிலிருக்கும் உப்பு ரஸங்கள் *உவர்ப்பு* வகைகளாகும். வேப்பங்காய், பாகற்காய் முதலானவற்றிலிருப்பது *கசப்பு* வகைகளாகும். சுக்கு, மிளகு, மிளகாய், கடுகு முதலானவற்றிலிருப்பது *கார*வகைகளாகும். தானிக்காய், கடுக்காய், மாந்தளிர், வாழைப்பூ முதலானவற்றிலிருப்பது *துவர்ப்பு* வகைகளாகும். 240.

505. (க்₄ராணேந்திரியமாகிற) மூக்கினால் அறியத்தக்கது *க₃ந்த₄ம்* (மணம்) என்னும் கு₃ணமாகும். [அப்ராக்ருதமான *ஶ*ப்₃த₃ஸ்பர்*ஶா*தி₃களும், விரைவில் அழியும் மற்ற பல ஸ்பர்*ஶ*ங்களும் இந்திரியங்களால் க்₃ரஹிக்கப்படாமலேயுள்ளன. அவற்றில் அவ்யாப்தி வராமைக்காக தீ₃பிகையில் ஒவ்வொரு லக்ஷணத்திலும் 'விஜாதீயவ்யாவ்ருத்த:' அல்லது 'விஜாதீயேதர:' என்னும் பத₃ம் சேர்க்கப்பட்டது.] அது *நற்க₃ந்த₄ம்*, *து₃ர்க்க₃ந்த₄ம்* என இரு வகைப்படும். சந்த₃னம், குங்குமப்

असदादिघ्राणग्राह्यविजातीयेतरो गन्धः। स द्विविधः सुरभिः असुरभिश्च। पाटीरमृगमदघुसृणचम्पकादिगन्धास्सुरभिभेदाः। पूति-विस्रादिगन्धास्त्वसुरभिभेदाः॥ २४१॥ अयं च गन्धः पृथिव्येकवर्ती पाकभेदाद्भिन्नः। पवनसलिलादिषु गन्धोपलब्धिः पार्थिवसंसर्गात् अयो दहतीतिवदौपचारिकी। पञ्चीकरणप्रक्रियया सर्वभूतेषु सर्वगुणानां विद्यमानत्वेऽपि प्राधान्याभिप्रायेणोक्तमिति न विरोधः॥ २४२॥

---

५०६. शब्दोऽस्ति पञ्चभूतेषु स्पर्शोऽन्येषु च खं विना।
पृथ्व्यादित्रिषु रूपं स्यात्पृथिवीजलयो रसः॥

५०७. पृथ्व्यां गन्ध इमे सर्वे पञ्चभूतेषु संगताः।
पञ्चीकारप्रक्रियया प्राधान्यादेवमुच्यते॥

---

பூ, கஸ்தூரி முதலானவற்றிலிருப்பது நற்க₃ந்த₄மாகும். மலம், மூத்திரம் முதலான தாழ்ந்த வஸ்துக்களிலிருப்பது து₃ர்க் க₃ந்த₄மாகும். 241.

506-507. ஶப்₃த₃ம் ஐந்து பூ₄தங்களிலுமுள்ளது. ஸ்பர்ஶம் ஆகாயம் தவிர்த்த மற்ற நாலு பூ₄தங்களிலுமுள்ளது. பூ₄மி, நீர், தீ என்னும் மூன்று பூ₄தங்களிலேயே உள்ளது ரூபம். பூ₄மிநீர்களில் மாத்திரம் உள்ளது ரஸம். பூ₄மியொன்றிலேயே உள்ளது க₃ந்த₄ம். இந்த க₃ந்த₄மும் பாகத்தின் வேறுபாட்டாலே காய் முதலானவற்றில் ஒரு வகையாகவும், கனி முதலானவற்றில் ஒரு வகையாகவும் உள்ளது. காற்று, நீர் முதலானவற்றில் மணம் இருப்பது, மகரந்த₃ம், ஏலம் முதலான பூ₄மிப் பகுதி அவற்றில் கலந்திருப்பதாலேயே. நெருப்பில் காய்ச்சப் பெற்றபோது 'இரும்பு எரிகிறது' என்பதுபோல், 'காற்றும் நீரும் மணமுள்ளவை' என்பதும் ஔபசாரிக வழக்காகும். பஞ்சீகரணப்ரக்ரியையாலே ஒவ்வொரு பூ₄தத்திலும் மற்ற பூ₄தங்கள் ஓரளவுக்குக் கலந்து நிற்கையாலே அந்த பூ₄தங்களின் கு₃ணங்களும் ஓரளவுக்குக் கலந்து நிற்கின்றன. ப்ராத₄ான்யத்தைக்கொண்டு 'இன்னின்ன கு₃ணம் இன்னின்ன பூ₄தங்களிலுள்ளன' என்று மேலே சொல்லப்பட்டதித்தனை. 242.

पाकाद्गुणान्तरोत्पत्तिः स्वाश्रये। स्वाश्रयनाशाभावादेवोपपत्तेः पीलु (पाकवादि)पाकादिमतनिरासः ॥ २४३॥

संयुक्तप्रत्ययनिमित्तं संयोगः। स च सामान्यगुणः षड्द्रव्यवर्ती। अस्य च स्वाभावसादेश्यमुपलभ्यमानमंशभेदप्रयुक्ततया न विरोधावहम्।

---

५०८. संयुक्तधीनिमित्तत्वं संयोगगुणलक्षणम्।
षड्द्रव्यवर्त्ययं कार्याकार्यभेदात् द्विधा मतः॥

---

* ப்ருதி₂வீ தத்துவம் உண்டாகும்போது அநுஷ்ணுசீத ஸ்பர்ஶம், கருப்பு ரூபம், மது₄ரரஸம் ஆகியவற்றை உடைய தாயிருந்தது. அக்₃னி முதலானவற்றின் சேர்க்கையாகிற பாகத்தால் இந்த கு₃ணங்கள் மாறி மற்ற கு₃ணங்கள் அதில் உண்டாகின்றன. களிமண்ணைச் சுட்டுப் பானையாக்கும்போது குடம் த்₃வ்யணுகம் வரையில் நாசத்தை அடைந்து, பீலு எனப்படும் பரமாணுக்களாகி, பழைய கு₃ணங்கள் அழிந்து, புது கு₃ணங்கள் உண்டாகி, மறுபடியும் அப்பரமாணுக்கள் முறை யாகச்சேர்ந்து சுட்ட குடமாகிற புது அவயவி உண்டாகிறது என்று கொள்கிருர்கள் தார்க்கிகர்களில் ஒரு வகையினர். இவர்கள் பீலுபாக வாதி₃கள் எனப்படுகின்றனர். இப்படிப் பீலுவில் பாகத்தை ஒப்புக்கொள்ளாமல், பிட₂ரமாகிற குடத் திலேயே பாகத்தை ஒப்புக்கொண்டு அதில் பழைய கு₃ணங்கள் அழிந்து புது கு₃ணங்கள் உண்டாகின்றன என்று கொள்ளுகிற வர்கள் பிட₂ரபாகவாதி₃கள். அவயவங்களிலிருந்து புதிதாக அவ் யவி உண்டாவதில்லை என்று ஏற்கனவே நிரூபிக்கப்பட்டு விட்ட படியால் இவ்விருமதங்களும் தவறு. ப்ரத்யக்ஷத்தில் காண்கிறபடி முழுப்பொருளிலோ,அதன் பகுதியிலோ பாகத்தினுல் கு₃ணங்கள் மாறுபடலாம் என்று நமது மதத்தில் கொள்கிமுேம். 243.

508-510. இனி ஒன்பதாவது அத்₃ரவ்யமான ஸம்யோ க₃ம் விவரிக்கப்படுகிறது. (இரண்டு அல்லது அதற்கு மேற் பட்ட வஸ்துக்கள்) சேர்ந்திருக்கின்றன என்னும் அறிவுக்குக் காரணம் *ஸம்யோக₃ம்* என்னும் அத்₃ரவ்யம். இது—ப்ரக்ருதி, காலம், நித்யவிபூ₄தி, த₄ர்மபூ₄தஜ்ஞாநம், ஜீவன், ஈஶ்வரன் என்னும் ஆறு த்₃ரவ்யங்களிலும் இருக்கும் கு₃ணமாகும். ஒரு பகுதியில் ஸம்யோக₃மிருக்கும்போது, அதே பொருளில் மற்ற பகுதிகளிலேயே ஸம்யோக₃மில்லாமை காணப்படுவதால் முரண்

स च कार्याकार्यभेदात् द्विविधः। पूर्वः परिमितानामुभयप्रेरणात्, यथा मेषयोर्मल्लयोर्वा। क्वचिदन्यतरप्रेरणात्, यथा स्थाणुश्येनयोस्संयोगः। केचित्संयोगजसंयोगमपि वदन्ति हस्तपुस्तकसंयोगात्कायपुस्तकसंयोग इति। तन्न। हस्तपुस्तकसंयोगेनैवोपपत्तेः। एतेन विभागजविभागोऽपि निरस्तः। विभागोऽपि संयोगाभाव एव न पृथग्गुणः। अकार्यसंयोगस्तु विभु-द्रव्ययोः। अजद्रव्यसंयोगः श्रुत्याऽङ्गीक्रियते। अनुमानादप्यजद्रव्य-

---

५०९. मेषयोर्मल्लयोर्वापि तथा स्थाणौ खगस्य च।
यस्संयोगस्स चाद्यः स्यादन्त्यो विभ्वोश्च संगमः॥

५१०. विभुद्वयस्य संयोगः मानैर्युक्त्या च साधितः।
अतः कालेशयोश्चापि योगस्सिद्धान्तिसंमतः॥

---

பாடில்லே. *கார்ய* ஸம்யோக₃ம் என்றும், *அகார்ய* ஸம்யோக₃ம் என்றும் ஸம்யோக₃ம் இருவகைப்படும். அளவுபட்ட பொருள்கள், தம் அனைத்தினுடைய அல்லது ஏதாவதொன்றினுடைய கிரியையினால் ஒன்றுக்கொன்று சேருவது *கார்யஸம்யோக₃மா*கும். சண்டையிடும் இரு ஆடுகள் அல்லது மல்லர்களின் ஸம்யோக₃ம் இரண்டிலுமுண்டான கிரியையினால் ஏற்படும் கார்ய ஸம்யோக₃த்துக்கு உதா₃ஹரணம். பறவை பறந்துவந்து ஒரு மரத்தில் உட்காருவதனால் ஏற்படும் ஸம்யோக₃ம் (சேரும் வஸ்துக்களில்) ஒன்றில் மாத்திரம் ஏற்பட்ட கிரியையினால் ஏற்படும் கார்ய ஸம்யோக₃த்திற்கு உதா₃ஹரணம். "அவயவமான கைக்கும் புஸ்தகத்துக்கும் ஏற்படும் ஸம்யோக₃த்தால், அவயவியான உடலுக்கும் புஸ்தகத்திற்கும் புதிதாக ஒரு ஸம்யோக₃ம் ஏற்படுகிறது. இது ஸம்யோக₃ஜ ஸம்யோக₃ம். இப்படியே பிரியும் போது விபா₄க₃ஜ விபா₄க₃மும் உண்டு" என்கிறார்கள் தார்க்கிகர்கள். புதிதான அவயவியை ஒப்புக்கொள்ளாமையால் நமது மதத்தில் இவையும் ஏற்கப்படுவதில்லை. விபா₄க₃மும் ஸம்யோக₃த்தின் இல்லாமையேயாகையால் தனி கு₃ணமல்ல. இரண்டு விபு₄ (ஸர்வ வ்யாபி)த்₃ரவ்யங்களின் ஸம்யோக₃ம் *அகார்ய ஸம்யோக₃ம்* எனப்படுகிறது. உத்பத்தியற்ற நித்யவிபு₄த்₃ரவ்யங்களின் ஸம்யோக₃ம் "*காலம் ஸ பசதே*" [வி-பு] முதலான *ஶாஸ்த்ர* ப்ரமாணத்தைக்கொண்டு ஒப்புக்கொள்ளப்படுகிறது. பின்வரும் அனுமானங்களைக்கொண்டும் விபு₄ஸம்யோக₃த்தை ஸாதி₄க்கலாம்:—

संयोगसिद्धिः। यथा विभुद्रव्यं विभुद्रव्यसंयोगवत् द्रव्यत्वात् घटवत् तथा विभुद्रव्यमीश्वरसंयुक्तम् द्रव्यत्वात् घटवत्, ईश्वरः कालादिसंयुक्तः द्रव्यत्वात् घटवत् इत्यादिभिः विभुसंयोगस्सिद्धः॥ २४४॥

अथ शक्तिः। सर्वकारणानां कारणत्वनिर्वाहकः कश्चिदद्रव्यविशेषः शक्तिः। तर्कागमाभ्यां तत्सिद्धिः। प्रतिबन्धकमणिमन्त्रादिसंनिधौ

---

५११. कारणानां कारणत्वनिर्वोढा शक्तिसंज्ञकः।
सिद्ध्यत्यद्रव्यभूतश्च धर्मस्तर्कागमादिभिः॥

---

(1) விபு₄வான திரவியம், விபு₄வான மற்ற திரவியத்துடன் ஸம்யோக₃த்தையுடையது; திரவியமாயிருப்பதால்; குடம் போலே. *(2)* விவாத₃ாஸ்பத₃மான (காலம், த₄ர்மபூ₄தஜ்ஞானம் முதலான) விபு₄த்₃ரவ்யம் விபு₄வான ஈஶ்வரனோடு ஸம்யோக₃த்தையுடையது. திரவியமாயிருப்பதாலே; குடத்தைப் போலே. (3) ஈஶ்வரன் காலம் முதலானவற்றுடன் ஸம்யோக₃த்தையுடையவன். திரவியமாயிருப்பதாலே; குடத்தைப் போலே. இப்படி *ஶா*ஸ்த்ரத்தாலும் யுக்திகளாலும் விபு₄வான காலத்துக்கும் ஈஶ்வரனுக்கும் ஸம்யோக₃ம் ஸித்₃த₄ாந்தத்தில் ஒப்புக்கொள்ளப்படுகிறது. 244.

511-513. இனி, பத்தாவது அத்₃ரவ்யமான *ஶ*க்தி நிருபிக்கப்படுகிறது. எல்லாக் காரணங்களும், காரியங்களைச் செய்யும்படி செய்யும் ஓர் அத்₃ரவ்யம் *ஶக்தி* எனப்படுகிறது. "*பராஸ்ய ஶக்திர் விவிதை₄வ ஶ்ரூயதே*" [*ஶ்*வே] [பரமபுருஷனுடைய *ஶ*க்தி மிகவும் மேலானதாகவும், விதவிதமாகவும் சொல்லப் படுகிறது.] முதலான வேத₃*ஶா*ஸ்த்ரவாக்கியங்களாலும், தர்க்கத்தாலும் *ஶ*க்தியென்னும் இந்த அத்₃ரவ்யமான த₄ர்மம் ஸித்₃தி₄க்கிறது. "நெருப்பில் எரிக்கும் *ஶ*க்தியுள்ளது; இல்லையாகில் நீரைப்போல் எரிக்கக் கூடாதன்றோ" முதலானவை அவ்வப்பொருள்களிலுள்ள *ஶ*க்திகளை ஸாதி₄க்கும் தர்க்கங்கள். இந்த *ஶ*க்தியென்னும் கு₃ணம் இந்திரியங்களுக்குப் புலப் படாதது. நெருப்புக்கு எரிக்கும் *ஶ*க்தியிருந்தபோதிலும் ஒருவகை மணியோ, மந்திரமோ அத்துடன் ஸம்ப₃ந்த₄ப்படும் போது எரிக்கும் ஸாமக்₃ரிகளெல்லாமிருந்தாலும் நெருப்பு எரிப்பதில்லை. இதனால் மணிமந்திரங்களால் தடைபடும் எரிக்கும் *ஶ*க்தி அக்₃னிக்கு இருக்கிறதென்று அறிகிறோம்.

स्वरूपसहकारिवैकल्याभावेऽपि यदुपरोधाद्दहनो न दहति सा ह्यतीन्द्रिया शक्तिः। अयस्कान्तादिषु तत्प्रसिद्धिः। सा शक्तिः षड्द्रव्यवर्तिनी। भगवन्निष्ठत्वं पुराणरत्नादिषु प्रसिद्धम्। एवं सर्वत्रापि शक्तिनामकधर्मविशेषसिद्धिः ॥ २४५ ॥

---

५१२. अतीन्द्रियैषा शक्तिश्च मणिमन्त्रादिकेष्वपि।
अयस्कान्तादिषु तथा प्रसिद्धा सर्वसंमता ॥

५१३. षड्द्रव्यवर्तिनी चेयं भाति श्रीशेऽतुलाद्भुता।
पुराणरत्ने संप्रोक्ता तथा सर्वत्र कथ्यते ॥

---

காந்தக்கல் இரும்பை இழுக்கிறது. இதனால் காந்தக்கல்லில் ஒரு *ஶக்தி*யிருக்கிறதென்று உணர்கின்றோம். ஆகையால் எல்லாப் பொருளிலும் *ஶக்தி*யென்னும் கு₃ணமிருப்பதை அனைவரும் ஒப்புக்கொண்டே தீரவேண்டும். ஸம்யோக₃த்தைப்போலே, இக்கு₃ணமும் ஆறு த்₃ரவ்யங்களிலுமிருக்கிறது. தர்க்காக₃மங்களால் ஒவ்வொரு பொருளிலுமுள்ள *ஶக்தி*கள் தனிப்பட்டவையென்று அறிகிறோம். "*பராஸ்ய ஶக்திர் விவித₄ா*" [*ஶ்*வே] என்கிறபடியே ஸர்வேஶ்வரனை *ஶ்ரிய*:பதியின் *ஶக்தி*யானது ஒப்பற்றதாகவும் அற்புதமாகவும் விளங்குகிறது. "*விஷ்ணு ஶக்தி: பரா ப்ரோக்தா*" [வி-பு 6-7-61] [விஷ்ணு*ஶ*க்தி மேலானதெனப்படுகிறது] "*ஸ்வஶக்திலேஶோத்₃த்₄ருத பூ₄தவ(ஸ)ர்க்க₃:*" [வி-பு 6-5-84] [தன் *ஶ*க்தியின் ஒரு திவலையாலே பூ₄தஸமூஹத்தை த₄ரிப்பவன்] "*ஸுவீர்ய ஶக்த்யாதி₃ கு₃ணைகராஶி:*" [வி-பு 6-5-85] [சிறந்த வீர்யம் *ஶக்தி* முதலான கு₃ணங்களுக்கு ஒரே குவியலாயிருப்பவன்] முதலானவிடங்களில் புராணரத்நமான ஸ்ரீவிஷ்ணுபுராணத்தில் விஷ்ணு*ஶ*க்தி பரமாத்₃பு₄தமானதென்று உரைக்கப்பட்டுள்ளது. "*கர்மஸம்ஜ்ஞா த்ருதீயா ஶக்தி:*" "*க்ஷேத்ரஜ்ஞஶக்தி:*" "*ஸமஸ்தா: ஶக்தயஶ் சைதா:*" [வி-பு 6-7] முதலானவிடங்களில் எல்லாப் பொருள்களிலும் பரமபுருஷனுக்கு உட்பட்டதான *ஶ*க்திகள் இருப்பதாகவும் கூறப்படுகிறது. ஆக, இவ்வளவால் பத்து அத்₃ரவ்யங்களும் நிருபிக்கப்பட்டனவாயின. 245.

ननु, चतुर्विंशतिप्रकारा गुणा इत्युक्तत्वात् कथं दशैवेति निर्दिश्यते इति चेत्। उच्यते। जीवात्मगुणविशेषाणां सुखबुद्धि-दुःखेच्छाद्वेषप्रयत्नानां षण्णां ज्ञानविततिरूपत्वेन ज्ञानेऽन्तर्भावस्योक्तत्वात्, धर्माधर्मयोरपि ईश्वरप्रीत्यप्रीतिरूपत्वेन ईश्वरज्ञानेऽन्तर्भावात्, भावनाख्यसंस्कारस्य ज्ञानविशेषरूपत्वात्, वेगो(त्पतन)त्पादक-हेतोरेव

---

५१४. बुद्धीच्छाद्वेषयत्नानां तथैव सुखदुःखयोः।
ज्ञानावस्थाप्रभेदत्वात्तस्मिन्नन्तर्गता इमे ॥

५१५. धर्माधर्मावीश्वरस्य प्रीतिकोपात्मकौ मतौ।
तस्मात्तद्ज्ञानरूपौ तौ संस्कारो भावनात्मकः॥

५१६. कश्चित् ज्ञानविशेषस्स्यात् संस्कारो वेगसंज्ञकः।
स्वोत्पादकस्वरूपस्स्यात् स्थितस्थापकनामकः॥

---

514-519. இனி, இப்பத்துக்கு மேலும் கு₃ணங்களுண்டு என்னும் நையாயிகவைஶேஷிகாதி₃களின் மதங்கள் மறுக்கப்படுகிறது. வைஶேஷிகர்கள் இருபத்துநான்கு கு₃ணங்களை ஒப்புக்கொள்ளுகிறார்கள். அவைகளில் நாம் ஒப்புக்கொள்ளுமவற்றைத் தவிர மற்றவைகளைப் பின்வரும் ரீதியிலே முன் சொன்ன மற்ற தத்துவங்களிலேயே அடக்கலாம். *பு₃த்₃தி₄*, இச்சை₂ (விருப்பம்), *த்₃வேஷம்*, *யத்நம்*, *ஸுக₂ம்*, *து₃க்க₂ம்* ஆகிய ஆறும் ஜீவத₄ர்மபூ₄தஜ்ஞானத்தின் வகைகளாகையாலே அதில் அடங்கும். *இவ்வாறையும்* தனிக்கு₃ணங்களாகக் கொள்ள வேண்டியதில்லை. *த₄ர்மம்* (புண்ணியம்), *அத₄ர்மம்* (பாபம்) என்னும் இரண்டும் உண்மையில் ஈச்வரனுடைய பிரீதியும் கோபமுமேயாகும். ஆகையால் அவனுடைய ஜ்ஞாநரூபமாயிருக்கின்றன. ஆக, *இவ்விரண்டும்* தனிக்கு₃ணமல்ல. இனி, *ஸம்ஸ்காரம்* என்ற ஒரு தனிக்கு₃ணம் இருப்பதாகவும், அது *பா₄வனை*, *வேக₃ம்*, *ஸ்தி₂தஸ்தா₂பகம்* என்று மூன்று வகைப்படுவதாகவும் உரைக்கின்றனர் வைஶேஷிகர்கள். *பா₄வனை* என்பது ஒருவித₄மான ஜ்ஞாநமேயாகும். *வேக₃ம்* என்பதை

वेगाख्यसंस्कारोपपत्तेः, संयोगमादाय स्थितस्थापकस्यापि संभवात्, शब्दस्पर्शरूपरसगन्धानां पञ्चानां प्रत्यक्षसिद्धत्वेनाङ्गीकारात्, विभाग-पृथक्त्वयोरपि संयोगाभावमादायोपपत्तेः, परत्वापरत्वयोः देशकाल-संयोगविशेषमादायोपपत्तेः, संख्यापरिमाणद्रवत्वस्नेहानां तत्तद्द्रव्य-

---

५१७. संयोगरूप एव स्यात् संयोगाभावरूपकौ ।
विभागश्च पृथक्त्वं च परत्वं चापरत्वकम् ॥

५१८. द्वे देशकालसंयोगरूपे संख्याद्रवत्वयोः ।
परिमाणस्नेहयोश्च तत्तद्द्रव्यस्वरूपता ॥

५१९. शक्तावन्तर्भाव एव गुरुत्वस्योचितस्तथा ।
तस्माद्गुणा दशैवेति पूर्वमुक्तं सुसङ्गतम् ॥

---

அதை உண்டாக்கும் வஸ்துவின் ஸ்வரூபமாகவே கொள்ளலாம். சுருட்டின பாயை விரித்துக் கையை விட்டவுடன் மறுபடி தானே சுருட்டிக்கொள்கிறது. நாயின் வளைந்த வாலை நிமிர்த்திக் கையை விட்டவுடன் தானே வளைகிறது. இதற்குக் காரணம் பாயிலும் வாலிலுமுள்ள ஸ்தி$_2$தஸ்தா$_2$பகம் என்னும் தனிக்கு$_3$ணம் என்கிறார்கள் வைஶேஷிகர்கள். அவற்றிலுள்ள ஸம்யோக$_3$ விஶேஷமே இதற்குக் காரணம் என்று கொள்ளலாமாகையாலே, இதைத் தனிக்கு$_3$ணமாகக் கொள்ளவேண்டியதில்லை. ஆகையால் *ஸம்ஸ்காரம்* என்பதும் தனிக்கு$_3$ணமன்று. *விபா$_4$க$_3$ம்* (பிரிவு) என்பதையும், *ப்ருத$_2$க்த்வம்* (தனிமை) என்பதையும் தனிக்கு$_3$ணமாகக் கொள்கின்றனர். இருந்த ஸம்யோக$_3$ம் நாஶமடைவதே விபா$_4$க$_3$மாகையாலே அது *ஸம்யோக$_3$த்தின் த்$_4$வம்ஸரூபமான அபா$_4$வமே*யாகும். மற்ற பொருள்களின் ஸம்யோக$_3$ம் (சேர்த்தி) இன்மையே தனிமை ஆகையாலே *ப்ருத$_2$க்த்வமும் ஸம்யோகா$_3$பா$_4$வ*ரூபமே ஆகும். ஆகையால், விபா$_4$க$_3$ப்ருத$_2$க்த்வங்கள் *இரண்டும்* தனிக்கு$_3$ணமல்ல. (தே$_3$ஶத்தாலும், காலத்தாலும்) உயர்ந்ததாயிருக்கையாகிற *பரத்வம்*, தாழ்ந்ததாயிருக்கையாகிற *அபரத்வம்* ஆகிய இரண்டையும் தனிக்கு$_3$ணமாகக் கொள்கின்றனர். அதி$_4$கமான

स्वरूपमादायोपपत्तेः, गुरुत्वस्य शक्त्यन्तर्भावस्य वक्तुमुचितत्वाच्च दशैवेति सुष्ठूक्तम् ॥ २४६ ॥

तत्र सत्त्वरजस्तमांसि प्रकृतिगुणाः तत्संबन्धिजीवगुणाश्च। सत्त्वरूपं ज्ञानम्, सात्त्विकः काल इत्यादिप्रतीतिः उपाधिवशादौपचारिकी।

---

* இந்தப் பத்து அத்₂ரவ்யங்களில் ஸத்வம், ரஜஸ், தமஸ் ஆகிய மூன்றும் ப்ரக்ருதியின் கு₃ணங்களே. இந்த ப்ரக்ருதி கார்யமான *ஶரீர*த்தோடு பிணைந்திருக்கையாலே ஜீவனுடைய த₄ர்மபூ₄தஜ்ஞானத்தில் வேறுபாட்டை விளைக்கையையிட்டு இம்மூன்றும் ஜீவனுடைய கு₃ணங்களாகவும் சொல்லப்படுகின்றன. ஸத்வரூபமான ஜ்ஞானம், ஸாத்விக காலம் என்று

---

५२०. इत्थं त्रीणि प्रमाणानि प्रमेयान्यपि सप्त च।
ज्येष्ठभ्रातृमहाचार्यराघवार्यकटाक्षतः ॥

५२१. प्राप्तबोधेन वङ्गीशवंश्यश्रीवासशर्मणा।
विवृतानि यथाबुद्धि यथाधीतं गुरोर्मुखात् ॥

---

அல்லது குறைந்த தே₃*ஶ*காலங்களின் *ஸம்யோக₃மே* பரத்வ, பரத்வங்கள் எனக்கொள்ளலாமாகையாலே *இவையிரண்டும்* தனிக்கு₃ணமல்ல. மேலும் அவர்கள் தனிக்கு₃ணமாகக் கொள்ளும் ஸங்க்₂யை (எண்ணிக்கை), த்₃ரவத்வம் (நீர்த்தன்மை) என்பவையும், *பரிமாணமும், ஸ்நேஹமும்*(எண்ணெயின் தன்மை) அந்தந்த திரவியங்களின் ஸ்வரூபமேயாகையால் அவையும் தனிக்கு₃ணமல்ல. அவர்கள் தனிக்கு₃ணமாகக் கூறும் கு₃ருத்*வம்*' [எடை] என்பதும் *ஶ*க்தியில் சேருமாகையால் தனிக்கு₃ணமல்ல. ஆகையால் அத்₃ரவ்யரூபமான கு₃ணங்கள் பத்தே என்று முன் கூறியது மிகப் பொருந்தும். 246.

520-521. தமையனாரும், மஹாசார்யருமான ராக₄வாசார்யருடைய கடாக்ஷத்தாலே அறிவுபெற்றவரும், வங்கிபுரத்து நம்பி வமிசத்தவருமான ஸ்ரீநிவாஸாசார்யராலே இவ்வண்ணமாக ஆசார்யமுக₂மாகக் கற்ற முறையில் அறிந்தவரையில் மூன்று ப்ரமாணங்களும், ஏழு ப்ரமேயங்களும் விவரிக்கப்பட்டன. *

शब्दादयः पञ्च प्रकृतिकार्यपञ्चमहाभूतगुणत्वेन प्रसिद्धाः। शुद्धसत्त्वं तु त्रिपाद्विभूत्यां, तत्प्रवर्तकेश्वरे च। संयोगशक्तिरूपौ गुणौ षड्द्रव्यसाधारणाविति विवेकः। इत्यद्रव्यं निरूपितम्॥ २४७॥

इति श्रीवाधूलकुलतिलक-श्रीमन्महाचार्यप्रथमदासेन श्रीनिवासदासेन
विरचितायां यतीन्द्रमतदीपिकायां शारीरकपरिभाषायां
अद्रव्यनिरूपणं नाम दशमोऽवतारः॥

---

ஜ்ஞானத்துக்கும் காலத்துக்கும் ஸத்வம் முதலான கு3ணங்கள் இருப்பதாகக் கூறுவது ஶரீரத்திலுள்ள ஸத்வ கு3ணத்தால் ஜ்ஞானம் வெளிப்படுவதையும், ஸாத்விகபத3ார்த்த2ங்கள் அக்காலத்தில் நிறைந்திருப்பதையும் கருத்தில் கொண்டு ஏற்பட்ட ஔபசாரிக வழக்கு என்றே கொள்ளவேண்டும். ஶப்3த3 ஸ்பர்ஶ ரூப ரஸ க3ந்த4ங்களாகிற ஐந்து அத்3ரவ்யங்களும் ப்ரக்ருதியிலிருந்து உண்டான ஐம்பெரும் பூ4தங்களின் கு3ணங்கள் என்பது அனைவரும் அறிந்தது. ஶுத்3த4ஸத்வ கு3ணம் பரமபத3த்திலுள்ள நித்யவிபூ4தித்3ரவ்யத்தில் உள்ளது. ஶுத்3த4ஸத்வமயமான திருமேனியை உடையவனுகையாலும், ப3த்3த4ஜீவர்களுக்கு ஸத்வகு3ணத்தை வளரச்செய்பவனுகையாலும் ஸர்வேஶ்வரனுன நாராயணன் ஸத்வகு3ணத்தை உடையவன் என்று சொல்லப்படுகிருன். ப்ரக்ருதி, காலம், நித்யவிபூ4தி, த4ர்மபூ4தஜ்ஞானம், ஜீவன், ஈஶ்வரன் என்னும் ஆறு திரவியங்களிலும் இருப்பவை ஸம்யோக3ம் ஶக்தி என்னும் இரு அத்3ரவ்யங்கள். இவ்வண்ணமாக, பத்து அத்3ரவ்யங்களும் நிருபிக்கப்பட்டன. 247.

அத்3ரவ்யப்ரகரண விவரணம் நிறைவுபெற்றது.

---

५२२. पूर्वाचार्योक्तार्थबोधियतीन्द्रमतदीपिकाम्।
अनुसृत्यैव क्लृप्तेयमनघा कारिकावली॥

॥ इति अद्रव्यप्रकरणम्॥ १०॥

---

522. பூர்வாசார்யர்களுரைத்த அர்த்த2ங்களைத் தெரிவிக்கும் *யதீந்த்3ரமததீ3பிகை* என்னும் நூலை அடியொற்றியே இக்குற்றமற்ற காரிகாவளி இயற்றப்பட்டது. *

அத்3ரவ்யப்ரகரணம் முற்றிற்று.

## ॥ अथ उपसंहारग्रन्थः ॥

एवं द्रमिडभाष्यन्यायतत्त्वसिद्धित्रयश्रीभाष्यदीपसारवेदार्थसंग्रह - भाष्यविवरणसंगतिमालाषडर्थसंक्षेपश्रुतप्रकाशिकातत्त्वरत्नाकरप्रज्ञापरित्राण-

---

## தீ3பிகோபஸம்ஹார விவரணம்

இந்த யதீந்த்3ரமததீ3பிகை—பல பூர்வாசார்ய க்3ரந்த2ங்களிலிருந்து ஸம்ப்ரதா3யார்த்த2ங்களைத் தொகுத்து எழுதப்பெற்றது. அந்த க்3ரந்த2ங்களாவன — (1) த்3ரமிட3பா4ஷ்யம். ப்3ரஹ்மநந்தி3 எனப்படும் டங்காசார்யரால் சா2ந்தோ3க்3யோபநிஷத்துக்கு எழுதப்பட்ட வாக்யரூபமான உரைக்கு த்3ரமிடா3சார்யர் என்னும் தமிழ்நாட்டில் வாழ்ந்த மஹரிஷியால் எழுதப்பட்ட பா4ஷ்யமாயிருப்பது இந்த த்3ரமிட3பா4ஷ்யம். (2) ந்யாயதத்வம். விஶிஷ்டாத்3வைத ஸ்ரீவைஷ்ணவ த3ர்ஶனத்தைத் தென்னாட்டில் பரப்பிய ப்ரத2மாசார்யரான நாத2முனிகளால் இயற்றப்பட்டது இது. (3) ஸித்3தி4த்ரயம். அவரது பேரரான யாமுநாசார்யரெனும் ஆளவந்தாரால் இயற்றப்பெற்ற, இன்றும் உள்ளவை ஆத்மஸித்3தி4, ஸம்வித்ஸித்3தி4, ஈஶ்வரஸித்3தி4 எனும் இம்மூன்று க்3ரந்த2ங்களும். த3ர்ஶநஸ்தா2பகரான எம்பெருமானாரால் அருளப்பெற்ற (4) ஸ்ரீபா4ஷ்யம், (5) வேதா3ந்ததீ3பம், (6) வேதா3ந்த ஸாரம், (7) வேதா3ர்த்த2ஸங்க்3ரஹம், (8) எம்பெருமானார் ஶிஷ்யரான சோமாசியாண்டான் (ஸோமயாஜியாண்டான்) எனப்படும் ஸ்ரீராமமிஶ்ரர் ஸ்ரீபா4ஷ்யத்துக்கு உரையாயருளிய ஸ்ரீபா4ஷ்ய விவரணம். (9) ஸ்ரீவிஷ்ணுசித்தர் அருளிய ஸங்க3திமாலை.

---

## ॥ उपसंहारः ॥

५२३. श्रीमद्यामुनमुख्यपूर्वगुरवः यच्छीर्षसङ्गोज्ज्वलाः
यत्पादाम्बुजसङ्गमात्तविभवास्सर्वे परे देशिकाः ।

523. ஸ்ரீமத்3யாமுநாசார்யர் முதலான முன்புள்ள ஆசார்யர்கள் எவருடைய திருமுடிஸம்ப3ந்த4ம்பெற்று விளங்குகிறார்களோ, எவருடைய திருவடித்தாமரைத் தொடர்புபெற்று பின்புள்ள ஆசார்யர்கள் அனைவரும் சிறக்கின்றனரோ, அந்த ராமாநுஜ

प्रमेयसंग्रहन्यायकुलिशन्यायसुदर्शनमानयाथात्म्यनिर्णयन्यायसारतत्त्वदीप-
तत्त्वनिर्णयसर्वार्थसिद्धिन्यायपरिशुद्धिन्यायसिद्धाञ्जनपरमतभङ्गतत्त्वत्रयचुल-

---

(10) சோமாசியாண்டான் அருளிய ஷடர்த்த ஸங்க்ஷேபம். (11) ஶ்ருதப்ரகாஶிகை. பட்டர் வம்ஶஸ்தராய், எங்களாழ்வானுடைய ஶிஷ்யரான நடாதூரம்மாளின் ஶிஷ்யரான ஸுதர்ஶன பட்டர் அருளிய அத்புதமான ஸ்ரீபாஷ்ய வ்யாக்யானம் இது. (12) தத்வரத்நாகரம். கூரத்தாழ்வான் திருக்குமாரரான ஸ்ரீபராஶர பட்டர் அருளிச்செய்தது இது. (13) ப்ரஜ்ஞாபரித்ராணம். (14) ந்யாயஸுதர்ஶனம். இவையிரண்டும் வரதநாராயண பட்டாரகர் அருளியவை. (15) ப்ரமேயஸங்க்ரஹம். எம்பெருமானார் ஶிஷ்யரான ஸ்ரீவிஷ்ணுசித்தர் என்னும் எங்களாழ்வான் அருளியது. (16) ந்யாயகுலிஶம். ஸ்ரீவேதாந்ததேசிகருடைய ஆசார்யரான கிடாம்பி அப்புள்ளார் அருளியது. (17) மாநயாதாத்ம்ய நிர்ணயம். எம்பெருமானாரின் ஶிஷ்யரும், மருமகனுமான நடாதூராழ்வான் அருளியது. (18) ந்யாய ஸாரம் எனப்படும் தத்வஸாரம். (19) தத்வநிர்ணயம். நடாதூராழ்வானின் பேரரும், எங்களாழ்வானின் ஶிஷ்யருமான நடாதூரம்மாள் அருளியவை இவை. (20) தத்வதீபம். பெரியவாச்சான் பிள்ளைக்கும், அவரது குமாரரான நாயனாராச்சான் பிள்ளைக்கும் ஶிஷ்யரான வாதிகேஸரி அழகிய மணவாளச் சீயர் அருளியது. இவ்வடமொழி நூலுக்கு மணிப்ரவாள நடையில் அமைந்த தீபப்ரகாஶம் என்னும் வ்யாக்யானத்தை அவரே அருளியிருக்கிறார். (21) தத்வமுக்தாகலாபமும் வ்யாக்யானமான ஸர்வார்த்தஸித்தியும், (22) ந்யாய பரிஶுத்தி, (23) ந்யாய ஸித்தாஞ்ஜனம். (24) பரமதபங்கம். (25) தத்வத்ரய சுளகம். இந்த ஐந்துக்ரந்தங்களும் ஸ்ரீவேதாந்ததேஶிகர் அருளி

---

तद्रामानुजसूक्तिरक्षककृतिश्रेष्ठप्रतिष्ठापित -
न्यासाद्यागममौलिसूरिपदयोर्मालार्पितैषा कृतिः ॥

---

ருடைய ஸூக்திகளை ரக்ஷிக்கும் கிரந்தரத்னங்களாலே ஶரணாகதி மார்க்கத்தை நிலைநிறுத்திய ஸ்ரீவேதாந்தாசார்யருடைய திருவடிகளிலே இந்நூலாகிற மாலை ஸமர்ப்பிக்கப்பட்டது.

कृततत्त्वत्रयनिरूपणतत्त्वत्रयतद्व्याख्यानचण्डमारुतवेदान्तविजयपाराशर्य - विजयादिपूर्वाचार्यप्रबन्धानुसारेण ज्ञातव्यार्थान् संगृह्य बालबोधनार्थं यतीन्द्रमतदीपिकाख्यशारीरकपरिभाषायामस्यामेतेऽर्थाः प्रतिपादिताः। अध्यात्मशास्त्राणां तत्त्वहितपुरुषार्थप्रतिपादकत्वात् तत्सारेऽस्मिन्नपि प्रकृतिजीवेश्वरपरिच्छेदैः तत्त्वस्य निरूपितत्वात्, बुद्धिपरिच्छेदे उपा-

யவை. (26) தத்வத்ரயநிரூபணம். பெரியவாச்சான் பிள்ளையின் குமாரரான நாயனாராச்சான்பிள்ளை அருளிய தத்வத்ரயவிவரண மாகவோ, அவரது ஶிஷ்யரான வாதிகேஸரிஜீயர் அருளிய தத்வநிரூபணமாகவோ இது இருக்கலாம். (27) தத்வத்ரயம். பிள்ளைலோகாசார்யர் அருளியது. (28) அதன் வ்யாக்₂யானம். மாமுனிகள் அருளியது. (29) சண்ட₃மாருதம். (30) வேத₃ாந்த விஜயம், (31) பாராஶர்யவிஜயம். இந்த மூன்று க்₃ரந்த₂ங்களும் இந்த யதீந்த்₃ரமததீ₃பிகாகாரரின் ஆசார்யரான மஹாசார்யர் என்னும் தொட்டயாசார்யர் அருளியவை. இத்தனை பூர்வா சார்ய க்₃ரந்த₂ங்களையும் அநுஸரித்து, தெரிந்து கொள்ள வேண்டிய அர்த்த₂ங்களைச் சுருக்கமாக எளியவர்களும் அறிந்து கொள்வதற்காக — யதீந்த்₃ரமததீ₃பிகை என்னும் இந்த ஶாரீரக பரிபா₄ஷா க்₃ரந்த₂த்தில் இந்த அர்த்த₂ங்கள் விளக்கப்பட்டன. வேத₃ாந்த ஶாஸ்த்ரங்கள் தத்வம், ஹிதம், புருஷார்த்த₂ம் என்னும் மூன்றையும் விளக்குகின்றவையாகையால், அவற்றின் ஸாரமான இந்நூலிலும் அம்மூன்றும் விவரிக்கப்பட்டன. எப்படி? எனில்: ப்ரக்ருதி ஜீவ ஈஶ்வர பரிச்சே₂த₃ங்களில் தத்வத்ரயங்கள் நிரூபிக்கப்பட்டிருக்கையால் தத்வம் சொல்

५२४. सोऽयं श्रीभगवान् दयापरवशस्तत्प्राप्तसत्तास्थिति-
व्यापारेण तदेकदास्यरससत्सम्पत्तिभाजा मया।

524. ஸர்வஸ்வாமியாய், கருணைபரவசனான எம்பெருமான்— தன்னாலுண்டான ஸத்தாஸ்தி₂தி ப்ரவ்ருத்திகளையுடையவனும், தன் விஷயமான அநந்யார்ஹ ஶேஷத்வ நற்செல்வம் நிரம்பி யவனுமான என்னைக்கொண்டு, தன்னை ஆராதி₄த்துக்கொள்

यस्य निरूपणात्, नित्यविभूतिपरिच्छेदे ईश्वरपरिच्छेदे च पुरुषार्थस्य निरूपणाच्च तत्त्वोपायपुरुषार्था निरूपिता इति निरवद्यम्॥ २४८॥

एकं तत्त्वमिति प्रतिपादयन्ति सूरयः। आत्मानात्मेति द्वेधा विभज्य निरूपयन्ति ऋषयः। श्रुत्यनुसारात् भोग्यभोक्तृनियन्तृरूपं तत्त्वत्रय-

---

லப்பட்டது. பு₃த்₃தி₄பரிச்சே₂த₃த்தில் பு₃த்₃தி₄யின் (த₄ர்மபூ₄த ஜ்ஞானத்தின்) வகைகளான ப₄க்தி ப்ரபத்திகளாகிற மோக்ஷோ பாயங்கள் நிரூபிக்கப்பட்டனவாகையால் ஹிதமும் சொல்லப் பட்டது. நித்யவிபூ₄தி பரிச்சே₂த₃த்திலும் ஈஶ்வரபரிச்சே₂த₃த் திலும் பரமபத₃த்தையடைந்து எம்பெருமானை அநுப₄வித்துக் கைங்கர்யம் செய்வதாகிற புருஷார்த்த₂ம் விளக்கப்பட்டதா கையால் புருஷார்த்த₂மும் சொல்லப்பட்டது. ஆக, தத்வஹித புருஷார்த்த₂ங்கள் குறைவற இந்நூலில் விவரிக்கப்பட்டன. 248.

விவக்ஷாபே₄த₃த்தாலே (ஒவ்வொரு கோணத்தில் பார்க் கையாலே) தத்வங்களை ஜ்ஞானிகள் பலவாறாகப் பிரிக்கின்ற னர். எப்படியெனில்: சேதநாசேதந விஶிஷ்டனான ஸ்ரீமந் நாராயணன் ஒருவனே உண்மைப் பொருளாகையாலே தத் வம் ஒன்றே என்று ஜ்ஞானிகள் கூறுகின்றனர். ஜீவேஶ்வரர் களை ஆத்ம கோடியிலும், அசேதநத்தை அநாத்மகோடியி லும் கொண்டு இரண்டு வகையாகப் பிரித்து நிரூபிக்கிறார்கள் ரிஷிகள். "*போ₄க்தா போ₄க்₃யம் ப்ரேரிதாரஞ்ச மத்வா*" என்னும் ஶ்வேதாஶ்வதர உபநிஷத்தை அநுஸரித்து, அநுப₄ விக்கப்படுவதாகிற அசேதநப் பொருள், அதை அநுப₄விக் கும் ஜீவன், இவையிரண்டையும் நியமிக்கும் ஈஶ்வரன் என்று தத்வங்களை மூன்றாகப் பிரிக்கின்றனர் ஆசார்யர்கள். (1) ஶரீர ஸம்ப₃ந்த₄ம் முதலான தாழ்ந்தது, (2) அதைப் போக்கடிப்

---

स्वार्चामात्रफलाय स्वपकरणैस्स्वीयैस्स्वशेषां स्वयं
शेषी कारितवानिमां कृतिमिह स्वस्मै स्वसंप्रीतये॥

---

ஞம் பொருட்டு, தன்னுடையதான நல்ல உபகரணங்களாலே தன் உகப்பின்பொருட்டு, தனக்குப் பெருமையை விளைக்கும் இந்நூலைத் தனக்காகத் தானே செய்துகொண்டான்.

मिति प्रतिपादयन्त्याचार्याः। हेयम्, तस्य निवर्तकम्; उपादेयम्, तस्योपाय इति चतुर्धा विभज्यानुसंदधते केचिदाचार्याः। प्राप्यम्, प्राप्ता, उपायः, फलम्, विरोधीति पञ्चधा कथयन्त्यपरे देशिकाः। अर्थपञ्चकमेव सम्बन्धेन साकं षोढा परिगणय्य वर्णयन्त्यन्ये गुरवः। तेषां तत्तद्विभाजकधर्मपुरस्कारेण तथोपन्यासो नार्थभेदक इति सर्वमवदातम्॥ वस्तुतस्तु, वेदान्तानां चिदचिद्विशिष्टाद्वैतं तत्त्वमेकमेव

பது, (3) ப4க3வத3நுப4வம் முதலான கைக்கொள்ளத்தக்கது, (4) அதை அடைவதற்கு உபாயம் என்று நாலுவகையாகப் பிரித்து அநுஸந்தி4க்கிறார்கள் சில ஆசார்யர்கள். (1) ப்ராப்யமான ப்3ரஹ்மஸ்வரூபம், (2) ப்ராப்தாவான ஜீவஸ்வரூபம், (3) ப்ராப்திக்கு உபாயம், (4) ப்ராப்தி ப2லம், (5) ப்ராப்தி விரோதி4 என்று ஐந்து வகையாகப் பிரித்து அருளிச்செய்கிறார்கள் மற்றும் சில ஆசார்யர்கள். இந்த அர்த்த2பஞ்சகத்தோடு ஜீவபரஸம்ப3ந்த4த்தையும் சேர்த்து ஆறுகக் கணக்கிடுகிறார்கள் வேறு சில ஆசார்யர்கள். ஒவ்வொரு பிரிக்கும் த4ர்மங்களை முன்னிட்டுக்கொண்டு ஆசார்யர்கள் இப்படிப்பிரித்துக் கணக்கிடுகிறார்களாகையாலே இவர்களிடையே முரண்பாடில்லாமையால் எக்குறையுமில்லை. உண்மையில், சேதநாசேதநங்களோடு கூடியதாய், ஒன்றுயிருக்கும் ப்3ரஹ்மமே உண்மைப் பொருள் என்பதே வேத3ாந்தங்களின் கருத்தாகும். ஆகையாலேயே சேதநாசேதநங்களோடு கூடிய ப்3ரஹ்மம் ஒன்றே

५२५. जयशरदि वसन्ततौ निजजनिसफलत्वकांक्षिणाऽनेन।
श्रीवासेन कृतेयं कृतिराचन्द्रार्कतारकं जीयात्॥

॥ इति श्रीकोलियालं श्रीनिवासाचार्यविरचिता
श्रीसन्मतकारिकावली समाप्ता॥

॥ श्रीरस्तु॥

525. தம் ஜன்மஸாப2ல்யத்தை விரும்பிய ஸ்ரீநிவாஸாசார்யரால் ஜய வருஷம் வஸந்த ருதுவிலே இயற்றப்பட்ட இந்நூல் சந்திரசூரியநக்ஷத்ரங்களுள்ளவரையில் வாழக்கடவது.

ஸ்ரீகிருஷ்ணஸ்வாமி த2ாஸனுல் இயற்றப்பெற்ற
ஸன்மதகாரிகாவளீ விவரணம் முற்றிற்று

ब्रह्मेति तात्पर्यम्। अत एव चिदचिद्विशिष्टं ब्रह्मैक(मेवेति)मिति मत्वा भगवान् बादरायणः * अथातो ब्रह्मजिज्ञासा इत्युपक्रम्य तदेव सप्रकारं निरूपितवान्। अतः चिदचिद्विशिष्टो ब्रह्मशब्दवाच्यो विष्ण्वाख्यः परवासुदेवो नारायण एवैकं तत्त्वमिति विशिष्टाद्वैतवादिनां दर्शनमिति सिद्धम् ॥ २४९ ॥

इति विविधविचित्रं मानमेयप्रकाशं
घनगुरुवरदासेनोक्तमादाय शास्त्रात्।
यतिपतिमतदीपं वेदवेदान्तसारं
स भवति मतिमान्यस्सत्कटाक्षैकलक्ष्यः ॥ २५० ॥

इति श्रीवाधूलकुलतिलक - श्रीमन्महाचार्यस्य प्रथमदासेन श्रीवेङ्कटगिरिनाथ-पदकमलसेवापरायण - स्वामिपुष्करिणी - श्रीगोविन्दार्यसूनुना श्रीनिवासदासेन विरचिता यतीन्द्रमतदीपिकाख्या विशिष्टाद्वैतशारीरकपरिभाषा समाप्ता ॥

---

உண்மைப்பொருள் என்னும் கருத்தாலே, ப₄க₃வான் பா₃த₃ராயணராகிற வேத₃வ்யாஸர் "அத₂ாதோ ப்₃ரஹ்மஜிஜ்ஞாஸா" என்று ப்₃ரஹ்மத்தை விசாரிப்பதாகத் தமது ப்₃ரஹ்மஸூத்ரத்தைத் தொடங்கி, அதையே ஸாத₄னம், ப₂லன் முதலான ப்ரகாரங்களோடு பரிபூர்ணமாக நிருபித்தருளினர். ஆகையால், சேதநாசேதந விஶிஷ்டனாய், ப்₃ரஹ்மம் விஷ்ணு எனப்படுபவனை பரவாஸுதே₃வனை நாராயணன் ஒருவனே உண்மைப் பொருள் என்பதே விஶிஷ்டாத்₃வைதிகளான நமது மதம் என்று தேறுகிறது. 249.

இவ்வண்ணமாக, வித₄வித₄மானதாய், ஆஶ்சர்யமானதாய், ப்ரமாணப்ரமேயங்களை ஶாஸ்த்ரங்களைக் கொண்டு வெளிப்படுத்துவதாய், வேத₃வேதா₃ந்தஸாரமாய், மஹாசார்ய ஶிஷ்யராலே செய்யப்பெற்றதான யதீந்த்₃ர மததீ₃பிகையாகிற இந்த விளக்கைக் கைக்கொண்டவன் அனைவராலும் கொண்டாடத் தக்க அறிவுடையவனாய், நல்லோர்களின் கடாக்ஷத்துக்குப் பாத்ரபூ₄தனாய் ஆவான். 250.

ஸுத₃ர்ஶன பத்ராதி₄பனான ஸ்ரீக்ருஷ்ணஸ்வாமி த₃ாஸனால்
இயற்றப்பெற்ற யதீந்த்₃ர மததீ₃பிகா விவரணம்
நிறைவுற்றது.

# கைவல்ய ஸித்₃த₄ாஞ்ஜநம்

ந வாத₃ாத் நாபி ஸங்க₄ர்ஷாத் நாதி₄க்யாத் ந ச காமத: |
வக்ஷ்யாமி வசநம் ப்ராஜ்ஞா: யத₂ார்த்த₂ம் கு₃ருகௌ₃ரவாத்||

[அறிவாளிகளே! வாத₃ம் செய்யவேண்டும் என்னும் ஆசையாலோ, (பிறர்மீது) பொறுமையாலோ, (பிறரைக் காட்டிலும்) பெருமை பெறவேண்டுமென்றோ, மனம்போனபடியோ அடியேன் இங்குள்ள வார்த்தைகளை எழுதவில்லை; ஆழ்வார்கள் ஆசார்யர்களிடமுள்ள கௌ₃ரவபு₃த்₃தி₄யாலேயே உண்மையான வார்த்தைகளை இங்கு எழுதுகிறேன்.]

1. எம்பெருமானுக்கு நித்யவிபூ₄தி, லீலாவிபூ₄தி (ஸம்ஸாரம்) என இரண்டு விபூ₄திகள் (செல்வங்கள்) உண்டு. இரண்டுமே அநாதி₃காலமாய் இருந்து வருபவை. மேல்வரும் அநந்த காலத்திலும் இருக்கப்போகின்றவை. நித்யவிபூ₄தி ஶுத்₃த₄ஸத்வமயமானது. இதில் என்றும் ஸம்ஸார ஸம்ப₃ந்த₄மேயில்லாத நித்யர்கள் என்றும், ஒரு காலத்தில் ஸம்ஸாரஸம்ப₃ந்த₄ம் பெற்றிருந்து அதிலிருந்து விடுபட்ட முக்தர்கள் என்றும் இருவகைப்பட்ட ஜீவர்கள் வாழ்கிறார்கள். ஒவ்வொரு வகையினரும் கணக்கற்றவர்கள். நித்யவிபூ₄தி—மேலேயும் பக்கங்களிலேயும் எல்லையற்றதாகவும், கீழே லீலாவிபூ₄தியை எல்லையாகக் கொண்டதாகவும் உள்ளது. லீலாவிபூ₄தி—கீழேயும் பக்கங்களிலேயும் எல்லையற்றதாகவும், மேலே நித்யவிபூ₄தியை எல்லையாகக் கொண்டதாகவும் உள்ளது.

2. மூலப்ரக்ருதியும், அதன் விகாரங்களும் அடங்கியதாய், ஸத்வம், ரஜஸ், தமஸ் எனும் முக்குணமயமானதான லீலாவிபூ₄தியில் கணக்கற்ற ஜீவர்கள் ப்ரக்ருதியிலிருந்து தோன்றிய ஶரீரங்களில் அநாதி₃காலமாகக் கட்டுண்டு கிடக்கையாலே ப₃த்₃த₄ர்கள் எனப்படுகிறார்கள். நித்யமுக்தர்களுக்கும், இந்த ப₃த்₃த₄ர்களுக்கும் ஸ்வரூபத்தில் வாசியில்லை. ஒவ்வொரு ஜீவாத்மாவின் ஸ்வரூபமும் இயற்கையில் அணுவாய், ஜ்ஞாநாநந்த₃ஸ்வரூபமாய், எல்லையற்ற ஞானத்தை த₄ர்மமாகக் கொண்டதாயிருப்பது. நித்யமுக்தர்களுக்கு ப்ரக்ருதி ஸம்ப₃ந்த₄மில்லாமையால் ஜ்ஞாநாநந்த₃ஸ்வரூபமும் எப்போதும் பிரகாஶிக்கிறது; ஞானமும் ஸர்வவ்யாபியாயுள்ளது. ப₃த்₃த₄ர்களுக்கு அந்த ஸம்ப₃ந்த₄மிருக்கையால் ஜ்ஞாநாநந்த₃ ஸ்வரூபமும் தெளிவாகப் பிரகாஶிப்பதில்லை; ஞானமும் மிகச்சுருங்கி

யிருக்கிறது. நித்யவிபூ₄தியில் நித்யமுக்தர்களை அநுப₄வித்து பே₄ாக₂ ரஸம் கொண்டாடும் (இன்புறும்) எம்பெருமான், லீலாவிபூ₄தியில் ப₃த்₃த₄ர்களை ஒவ்வொரு ஶரீரத்தோடு படைத்து, அளித்து, அழித்து, முக்தியளித்து லீலாரஸம் கொண்டாடுவதற்காகவே இப்படிக் கணக்கற்ற ஜீவர்களை ப்ரக்ருதியால் அநாதி₃காலமாகக் கட்டுப்படுத்தி வைத்திருக்கிருன் என்று ஶாஸ்த்ரங்கள் முழங்குகின்றன.

3. இப்படி ப₃த்₃த₄ஜீவர்களைக்கொண்டு லீலாரஸம் அநுப₄விக்கும்போது, தனக்குக் குற்றங்கள் வராமலிருப்பதற்காக, இந்த ஜீவர்கள் முற்பிறவிகளில் செய்த கர்மங்களுக்கு அநுகு₃ணமாகவே இவர்களுக்கு இவ்வுலகப் ப₂லன்களை அளிப்பது என்னும் நியமத்தை வைத்துக்கொண்டிருக்கிருன் எம்பெருமான். ஜீவன் ஒவ்வொரு கர்மத்தைப் புரியும்போதும், முதன்முதலில் ஒரு ப்ராக்ருத விஷயத்தைப்பற்றி ஜ்ஞாநம், இச்சை₂ அல்லது த்₃வேஷம், ப்ரயத்நம் அல்லது நிவ்ருத்தி ஏற்படுகிறது. அப்போது இவர்களுக்குப் பரிபூர்ணமான ஸ்வாதந்த்ர்யத்தை அநாதி₃காலமாக அளித்திருக்கிருனுகையால், பிறகு அக்கர்மாநுகு₃ணமாகப் ப₂லனளிக்கும்போது எம்பெருமானுக்கு வைஷம்யம் (பக்ஷபாதம்) நைர்க்₄ருண்யம் (கருணையின்மை) எனும் தே₃ாஷங்கள் ஏற்படுவதில்லை. இவ்விஷயம் ப்₃ரஹ்மஸூத்ரத்தில் (2-3-6) பராயத்தாதி₄கரணத்திலும், அதன் ஶ்ரீப₄ாஷ்யம் முதலானவற்றிலும் விளக்கப்பட்டுள்ளது.

4. இப்படி ப₃த்₃த₄ஜீவனை அநாதி₃காலமாக ஸ்வாதந்த்ர்ய பு₃த்₃தி₄யுள்ளவனுக்வே அமைத்து, அவன் பள்ளமடையாக ஈடுபடும் ஶப்₃தா₃ாதி₃விஷயங்களோடு அவனைப் பழகவிட்டு, அதுகாரணமாக சங்கிலித் தொடர்போலே வரும் அஜ்ஞாநம், கர்மம், வாஸனை, ருசி, ப்ரக்ருதிஸம்ப₃ந்த₄ம் முதலியவற்றில் உழலுமவனுக்கி லீலாரஸம் அநுப₄வித்தபோதிலும், இந்த ப₃த்₃த₄ஜீவனும், நித்யனையும் முக்தனையும்போலே தனக்குப் பிள்ளையாகவும், ரக்ஷ்யமாகவும், ஶேஷமாகவும், ப₄ார்யையாகவும், உடைமையாகவும், த₄ரிக்கப்படுபவனுகவும், ஶரீரமாகவும், தன்னை அறியவேண்டியவனுகவுமிருக்கையாலே, இவனுக்கு மோக்ஷமருளி, இவனை நித்யமுக்தர்களைப் போலே தான் பெற்று அநுப₄விக்க விரும்பி, அதற்காக ஸ்ருஷ்டி, ஸ்தி₂தி, ஸம்ஹாரம், ஶாஸ்த்ரப்ரதா₃நம், அவதாரம் முதலான பெருமுயற்சிகளைச் செய்பவனுகவுமிருக்கிருன் எம்பெருமான் என்று ஶாஸ்த்ரங்கள் முழங்குகின்றன.

5. இப்படி ஸர்வேஶ்வரன் முயற்சிசெய்யும்போது, தனக்கு வைஷம்யநைர்க்₄ருண்யங்கள் ஏற்படாமைக்கும், ஶாஸ்த்ரங்களில்

உள்ள விதி₄நிஷேத₄ங்கள் வீணுகாமைக்கும் — சேதநனுக்குத் தான் அளித்திருக்கும் ஸ்வாதந்த்ர்ய பு₃த்₃தி₄யாலே ஒவ்வொரு ப்ராக்ருத விஷயங்களில் அவனுக்கு ஏற்படும் ஜ்ஞாந இச்சா₂ த்₃வேஷங்களாகிற ப்ரதிபத்தியையும், அதற்கு அநுகு₃ணமாக ப்ராக்ருத விஷயங்களைப் பெறுவதற்கோ, விலக்குவதற்கோ செய்யும் முதல் ப்ரவ்ருத்திகளும், நிவ்ருத்திகளுமாகிற புண்யபாபங்களையும், அல்லது 'ப்ராக்ருதமல்லாத தன் ஶுத்₃த₄ாத்மஸ்வரூபத்தையோ, பரமாத்மாவையோ பெற்று அநுப₄விக்கையாகிற இருவகை மோக்ஷங்களில் ஒன்றைப்பெற்று அநுப₄விக்கவேணும்' என்னும் ப்ரதிபத்தியையும், அதற்கு அநுகு₃ணமாக ஶாஸ்த்ரங்களில் விதி₄க்கப்பட்ட ஸாத₄நாநுஷ்டா₂நங்களில் முதல் முயற்சியையும் எதிர்பார்த்தே எம்பெருமான் முயற்சி செய்கிருன் என்னும் விஷயம் — "வைஷம்யநைர்க்₄ருண்யே ந ஸாபேக்ஷத்வாத் ததா₂ ஹி த₃ர்ஶயதி" [ப்₃ரஹ்மஸூத்ரம் 2-1-34] [(தே₃வாதி₃ ஜீவர்களுடைய கர்மத்தை) எதிர்பார்த்தே விஷம (ஏற்றத் தாழ்வுள்ள) ஸ்ருஷ்டியைச் செய்வதால், அந்த ஸ்ருஷ்டியினுல் ஈஶ்வரனுக்கு வைஷம்யம் என்னும் பக்ஷபாதமும், நைர்க்₄ருண்யம் எனும் கருணையின்மையும் ஏற்படமாட்டாது. ஶ்ருதியும் இவ்விஷயத்தைக் காட்டுகிறதன்றே.] "க்ருதப்ரயத்நாபேக்ஷஸ்து விஹித ப்ரதிஷித்₃தா₄வையர்த்₂யாதி₃ப்₄ய:" [ப்₃ரஹ்மஸூரம் 2-3-41] [(எல்லாச் செயல்களிலும்) ஜீவனுல் செய்யப்பட்ட (முதல்) முயற்சியை எதிர்பார்த்தே (பரமாத்மா அம்முயற்சியை அநுமதித்து அக்காரியத்தைச் செய்விக்கிருன்.) (இப்படிக் கொண்டால்தான் ப்ராக்ருத ப₂லன்களைக் குறித்தும், மோக்ஷத்தைக் குறித்தும் ஶாஸ்த்ரங்களில் உள்ள) விதி₄நிஷேத₄ங்கள் வீணுகாமலிருக்குமாகையால்] என்னும் ப்₃ரஹ்மஸூத்ரங்களில் தெளிவாக்கப்பட்டது.

6. ப்ராக்ருத விஷயங்களில் ஏற்படும் ப்ரதிபத்திகளைக் கொண்டு சேதனன் மனம்போனபடி ப்ரவ்ருத்தி நிவ்ருத்திகளைச் செய்து ஆத்மநாஶத்தை அடைந்துவிடக்கூடாதென்னும் பரமகருணையாலேயே எம்பெருமான் அந்தந்த ப்ரதிபத்திகளையே பற்றுசாகக் கொண்டு இவனை நல்வழிப்படுத்துவதற்காக அந்தந்த ப்ரதிபத்திகளுக்கு அநுகு₃ணமான விதி₄நிஷேத₄ங்களை ஶாஸ்த்ரங்களில் செய்து வைத்திருக்கிருன் என்பது நம் ஆசார்யர்கள் கண்ட முடிவாகும். இம்முறையில் ஶாஸ்த்ர விஶ்வாஸமின்மையாகிற நாஸ்திக ப்ரதிபத்தியுள்ளவனை ஆஸ்திக ப்ரதிபத்தியுள்ளவனுக்குவதற்காக, அவன் விரும்பும் ஶத்ருவிநாஶத்தை எளிதில் ஸாதி₄ப்பதற்கு வேத₃த்தில் ஶ்யேநயாக₃த்தை விதி₄த்திருக்கிருன். ஆஸ்திக ப்ரதிபத்தி ஏற்பட்ட

பின்பும் தே₃ஹாத்மாபி₄மாந ப்ரதிபத்தியோடிருக்கும் ஒருவனுக்கு, 'தே₃ஹத்தைக் காட்டிலும் வேறுபட்டது ஆத்மா' என்னும் ப்ரதிபத்தியை ஏற்படுத்துவதற்காக — பணம், பசு, மழை முதலான த்₃ருஷ்ட (கண்காணும்) ப₂லன்கள் பலவற்றை ஸாதி₄த்துத் தரும் யாக₃ங்களை விதி₄த்து, அவற்றின் ப₂லன் பெற்று ஜீவனுக்கு வேத₃த்தில் நம்பிக்கை ஏற்பட்ட பின்பு, ''ஜ்யோதிஷ்டோமேந ஸ்வர்க்க₃காமோ யஜேத'' [ஸ்வர்க்க₃த்தை விரும்புகிறவன் ஜ்யோதிஷ்டோம யாக₃த்தைச் செய்யக்கடவன்] என்று இந்த தே₃ஹத்தை விட்டுச் சென்று அடையும் ஸ்வர்க்க₃ஸாத₄னத்தை விதி₄க்கிறான். இப்படி ஸ்வர்க்க₃த்தையடைந்து, அதனிலும் சிறந்த சிவலோகம், சதுர்முக₂லோகம் முதலானவற்றையும் அடைந்தவனுக்கு முன்பிருந்த தே₃ஹமே ஆத்மா என்னும் ப்ரதிபத்தி நீங்கி, 'தே₃ஹத்தைக்காட்டிலும் வேறுபட்டது ஆத்மா' என்னும் ப்ரதிபத்தி உறுதியாகிறது. அடுத்த படியாக, அல்பாஸ்தி₂ரமான இப்ப₂லன்களில் ப்ரதிபத்தியை மாற்றி, 'அநந்த ஸ்தி₂ரப₂லமான மோக்ஷத்தைப் பெற்று இன்புறவேணும்' என்னும் ப்ரதிபத்தியை விளைப்பதற்காகவே கேவலாத்மப்ராப்தி ஸாத₄னங்களும், ப₄க₃வத் ப்ராப்திஸாத₄னங்களும் எம்பெருமானால் ஶாஸ்த்ரங்களில் விதி₄க்கப்பட்டிருக்கின்றன. இவற்றிலிருந்து தாழ்ந்த விஷயத்தை விரும்புகையாகிற தாழ்ந்த ப்ரதிபத்தியுடனிருக்கும் ஒருவனுடைய ப்ரதிபத்தியை உயர்த்துவதற்கு அநுகு₃ணமாகவே அந்தந்த விஷயங்களுக்கு ஸாத₄னங்களை எம்பெருமான் விதி₄த்திருக்கிறான் என விளங்குகிறது. அந்த ஸாத₄நஸ்வரூபங்களை ஆராய்ந்தாலும் இது தெளிவாகிறது. ஶ்யேநயாக₃த்திலுள்ள கடுமையான நியமங்களும், அந்த யாக₃த்தைக்கொண்டு ஶத்ருவைக் கொன்றவனுக்கு நரகாநுப₄வம் ஏற்படும் என்று காட்டி, அதைத் தவிர்ப்பதற்குக் கடுமையான ப்ராயஶ்சித்தங்களை விதி₄த்திருப்பதும்— இவனுடைய நாஸ்திகபு₃த்₃தி₄ காரணமாக ஏற்பட்ட க்ரூரப்ரதிபத்தி தொலைந்து ஆஸ்திக ப்ரதிபத்தி ஏற்படவே என்று தெளிவாக விளங்குகிறது. இதே ரீதியில், வேத₃த்தில் ஒவ்வொரு ப்ராக்ருத ப₂லனுக்காக எம்பெருமானால் விதி₄க்கப்பட்டிருக்கும் ஸாத₄னங்களும், மோக்ஷார்த்த₂மாக விதி₄க்கப்பட்டிருக்கும் ஸாத₄னங்களும் — இவனுடைய ஸ்வார்த்த₂தா ப்ரதிபத்தியை (சுயநல மனப்பான்மையை) படிப்படியாகக் குறைத்து, கடைசியில் இவனை ஸ்வார்த்த₂தாலேஶ க₃ந்த₄மும் இல்லாத பரார்த்த₂ப்ரதிபத்தியே வடிவெடுத்த ஞானியாக்கி, இவனுக்கு நிர்ஹேதுகமாகப் பரார்த்த₂ாநுப₄வ கைங்கர்ய ரூபமான பரமமோக்ஷமருளி, இவனைப்பெற்றுத் தான் அநுப₄விக்க

எம்பெருமான் இட்டிருக்கும் ஸஹேதுகப்படிக்கட்டுகளே என்று விவேகிகள் உய்த்துணரலாம். இவ்விஷயத்தையே — ''ஸுக்ருத க₃ரீயஸ்த்வேந ப்ரதிபத்திவைஶேஷ்யாத் உத்தரோத்தரம் அதி₄க தம:'' [7-16] ''ஸுக்ருததாரதம்யேந ச ப்ரதிபத்திவைஶேஷ்யாத்'' [8-ம் அத்தியாய அவதாரிகை] என்ற இரண்டு இடங்களிலும் புண்யம் மிகுதியாவதால் உபாஸகனுடைய ப்ரதிபத்தி சிறப்படைகிறது என்று கூறுவதன்மூலம் பா₄ஷ்யகாரர் உணர்த்தியருளினர்.

7. நம் த₃ர்ஶனத்தில் உண்மைப் பொருள்கள் கணக்கற்றவையானுலும் அசித், சித், ஈஶ்வரன் என்று அவை மூன்று வகையாகப் பிரிக்கப்பட்டிருக்கின்றன. அதுபோலவே, புருஷார்த்த₂ங்களும் கணக்கற்றவையாகிலும், அசித₃நுப₄வமாகிற ஐஶ்வர்யம் என்றும், அசித்தினின்றும் நீங்கிய ஆத்மமாத்ராநுப₄வமாகிற கைவல்யம் என்றும், ஈஶ்வராநுப₄வமாகிற பரமமோக்ஷம் என்றும் மூன்றுவகையாகக்காட்டப் பட்டுள்ளன. இவற்றில் அசித₃நுப₄வமாகிற ஐஶ்வர்யாநுப₄வத்தில்— தே₃ஹத்தோடு சேர்ந்த தன் ஆத்மா, பெண்டு பிள்ளைகள், உற்றார் உறவினர் முதலான அசித்தோடு கலந்த ஆத்மாக்களைப் பற்றிய ஆத்மாநுப₄வங்களும் கலந்தேயிருந்தாலும், ப்ராதா₄ந்யத்தைப்பற்ற அது அசித₃நுப₄வம் எனப்படுகிறது. அவ்வண்ணமே ஈஶ்வராநுப₄வத்தில் சித₃சித்துக்களின் அநுப₄வம் ஈஶ்வரனுடைய விபூ₄திகள் (செல்வங்கள்) என்னும் ஆகாரத்தில் கலந்திருந்தபோதிலும், ப்ராதா₄ந்யத்தைப் பற்ற அது ஈஶ்வராநுப₄வம் எனப்படுகிறது. சித்தின் அநுப₄வமாகிற கைவல்யமோவெனில், அசித்தின் அநுப₄வமோ, ஈஶ்வரனின் அநுப₄வமோ அடியோடு இல்லாததாயிருக்கையாலேயே கைவல்யாநுப₄வம் என்றும், கேவலாத்மாநுப₄வம் என்றும் நமது பூர்வாசார்யர்களால் அழைக்கப்பட்டது. ஸூக்ஷ்மஶரீரமும் கழிந்தபின்பே அசித்தின் அநுப₄வத்தோடு கலசாத இக்கேவலாத்மாநுப₄வம் ஏற்படமுடியுமாகையாலேயே, விரஜாதரணத்தின்மூலம் ஸூக்ஷ்மஶரீரம் கழிந்தபின்பு நித்யவிபூ₄தியில் ஏற்படும் மோக்ஷாநுப₄வமே இது என்று கைவல்யஶப்₃த₃த்திலிருந்தே விளங்குகிறது. ஶாஸ்த்ரங்களிலும், நிக₄ண்டுக்களிலும் கைவல்யஶப்₃த₃ம் மோக்ஷத்தைக்குறித்தே பிரயோகி₃க்கப்பட்டிருப்பதும் இதை வலியுறுத்துகிறது. ப₄க₃வத₃நுப₄வலேஶமுமற்ற ஆத்மமாத்ராநுப₄வமே கைவல்யம் எனப்படுகிறதாகையாலே, ப₄க₃வத₃நுப₄வத்தை உடையவனாக எம்பெருமானரால் ஸ்ரீ பா₄ஷ்ய கீ₃தாபா₄ஷ்யங்களிலும், முதலியாண்டானால் ''கண்கள் சிவந்து'' பாசுரங்களிலும் காட்டப்பெற்ற பஞ்சாக்₃நி வித்₃யாநிஷ்ட₂ன் கைவல்யநிஷ்ட₂னாயிருக்கமுடியாது என்பதும்

கைவல்யஶப்₃த₃த்தை ஆராய்ந்தாலே விளங்கும். இவ்விரு விஷயங்களையும் ஶ்ருதிஸ்ம்ருதி வசனங்களையும், ஆழ்வார்கள். ஆசார்யர்களின் ஸ்ரீஸூக்திகளையும், அவற்றுக்கு அநுகு₃ணமான யுக்திகளையும் காட்டி நிரூபிக்கிறோம் இனி.

## 1. ஶ்ருதி ஸ்வாரஸ்யம்

8. சா₂ந்தோ₃க்₃ய உபநிஷத்தில் மூன்று ப்ரகரணங்களில் ஆத்ம த₃ர்ஶநம் கூறப்படுகிறது.(1)ஐந்தாவது ப்ரபாட₂கத்திலுள்ள பஞ்சாக்₃நி வித்₃யாப்ரகரணம் முதலாவது. (2) ஏழாவது ப்ரபாட₂கத்திலுள்ள ப்ராணனெனப்படும் ஜீவனின்உபாஸநத்தைச் சொல்லும் ப்ரகரணம் இரண்டாவது. (3) எட்டாவது ப்ரபாட₂கத்தில் உள்ள த₃ஹரவித்₃யா ப்ரகரணத்தில்,ஏழாவது க₂ண்ட₃ந்தொடங்கிப் படி₂க்கப்படும் ப்ரஜாபதி வாக்யம் மூன்றாவது. இவற்றில் மூன்றாவது ப்ரகரணத்தில் உள்ள ஆத்₃மத₃ர்ஶனம் பரமாத்மோபாஸனத்திற்கு அங்க₃மானது என்று கீ₃தை மூன்றும் அத்தியாயத்தின் அவதாரிகாபா₄ஷ்யத்திலும், கீ₃தை (8-23, 24) அவதாரிகாபா₄ஷ்யத்திலும் தெளிவாக விளக்கப்பட்டது. முதல் ப்ரகரணமான ஐந்தாவது ப்ரபாட₂கத்தில் பஞ்சாக்₃நிவித்₃யா நிஷ்ட₂னுக்கு '' ஸ ஏநாந் ப்₃ரஹ்ம க₃மயதி '' என்று ப்₃ரஹ்மாநுப₄வம் ப₂லமாகச் சொல்லப்பட்டிருக்கையாலே, இவன் ப்₃ரஹ்மாத்மகமாகத் தன் ஆத்மாவை உபாஸிப்பவன் என்று கார்யாதி₄கரண [4-3-5] ஸ்ரீபா₄ஷ்யத்திலும், கீதை (8-23, 24) அவதாரிகாபா₄ஷ்யத்திலும் நிரூபித்து, '' உபாஸித்தபடியேதான் ப₂லன் கிடைக்கும் '' என்னும் தத்க்ரதுந்யாயத்தைக்கொண்டும் பா₄ஷ்யகாரர் இதைநிலை நாட்டியருளுகையாலே இவன் கேவலாத்மாநுப₄வத்தை ப்ராப்யமாகக் கொண்ட கேவலாத்மோபாஸகனாகமுடியாது. [இவ்விஷயம் நமது கீ₃தா (8-வது அத்தியாயம்) வ்யாக்₂யானத்தில் 265-280 பக்கங்களில் அசைக்கமுடியாதபடி ஸ்தா₂பிக்கப்பட்டிருக்கிறது.] இனி, இரண்டாவது ப்ரகரணமான ஏழாவது ப்ரபாட₂கத்தில் படி₂க்கப்படும் ஆத்ம த₃ர்ஶநம் எத்தகையது என்று ஊன்றிப் பார்க்கவேண்டும். அதில் முதல் க₂ண்ட₃த்திலிருந்து தொடங்கிப் பதினாலாவது க₂ண்ட₃மீறாக முறையே (1) நாம (2) வாக் (3) மனம் (4) ஸங்கல்பம் (5) சித்தம் (6) த்₄யாநம் (7) விஜ்ஞாநம் (8) ப₃லம் (9) அந்நம் (10) அப்புக்கள்(நீர்) (11) தேஜஸ்(தீ) (12) ஆகாஶம் (13) ஸ்மரம் (நினைத்தல்) (14) ஆசை (ப₂லத்தில் விருப்பம்) என்னும் பதினாலு அசேதனப்பொருள்களிடத்திலும் ப்₃ரஹ்மம் என்னும் பு₃த்₃தி₄யை ஏறிட்டு உபாஸிக்கும்படி கூறி, அந்தந்த உபாஸனங்களுக்குப் படிப்படியாக மேலான இவ்வுலகப்ப₂லன்கள் பயனாகக்

